அன்பு மலர்—25

# சிலம்புச் செல்வம்

(The Treasure of Chilappadikāram)

சுவாமி சுத்தானந்த பாரதியார்

இயற்றியது


: : அன்பு நிலயம் : :

இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா

1939

# பொருளடக்கம்

# பதிப்புரை

எமது நிலயத்தின் 25-வது அன்பு மலரைத் தமிழன்னை யின் திருவடியில் வைத்து, "இறைவியே, இவ்வுலகெங்கும் நின் கலையொளி பரவ எமக்கு ஆற்றலை அருள்புரி" என்று வணங்குகிறோம். நெடுநாளாக இளங்கோவடிகள் வழங்கிய செல்வத்தை எல்லாருக்கும் விளங்கும்படி தெளிவான இளந் தமிழில் விரிவாக எழுதி யளிக்கவேண்டுமென்று விரும்பி ேனாம். பல புலவர் மணிகளும் விரும்பி எம்மைத் தூண்டினர். தமிழை யீன்ற சிவபெருமான் திருவருளால், இன்று எமது எண்ணம் நிறைவேறியது. இந்நூல் தமிழர் நாகரிக விளக்க மாகும்; அருங்கலைச் செல்வமாகும். இந்நூல் தமிழருக்கு ஒரு புதிய உணர்ச்சியைத் தரும்.

இறைவனடிபற்றி, சுத்தாத்வைத நிலையில் ஆழ்ந்து, தமிழர் நன்மைக்கே தவம்புரிந்துவரும் **சுவாமி சுத்தானந்த பாரதியார்,** இந்நூலை எமக்கு எழுதி உதவிய நன்றியை என்றும் மற வோம். சென்ற இரண்டாண்டுகளாக, சங்கநூல்கள், ஆங்கிலம், தமிழ், பிரெஞ்சு, ஆரியம் முதலிய மொழிகளில் உள்ள தமிழர் வரலாற்று நூல்கள், கலைநூல்கள் ஆகமொத்தம் 150 நூல்களை ஆராய்ந்து சிலப்பதிகாரத்தின் பொருளை நன்கு தேர்ந்து, **சிலம்புச் செல்வத்தை** யாத்தார் அடிகள்.

இந்நூல் கையெழுத்துப் பிரதியை வரிவரியாகப் பார்த் துத் தமக்குத் தோன்றிய புதிய உரைகளையும் ஆங்காங்கு தெரிவித்துப் பேருதவி செய்தார் நமது அன்புப் புலவர் **திரு. தேசிகவிநாயகம் பிள்ளை** யவர்கள். அறிவிலும் அன்பி லும் முதிர்ந்த இப்பெரியார் எங்கள் நிலயத்திற்குச்செய்துவரும் அன்புதவிக்கு நன்றி - வணக்கம் செலுத்துகிறோம்.

சிலம்புச் செல்வத்திற்கு அழகான படங்கள் எழுதி யுதவிய புதுவை ஓவியர் **சிரஞ்சீவி ஆர். டீ. கிருஷ்ணமூர்த்தி** அவர்களுக்கு எமது அன்பு; 'மிகச் சிறந்த ஓவியப் புலவர்' என்று இவரைத் தமிழுலகிற்கு அறிமுகப்படுத்துகிறோம்.

'சிலப்பதிகாரம்' என்றதும், **மகாமகோபாத்யாய டாக்டர் வே. சுவாமிநாதையர்** நினைப்பே முதலில் வருகிறது. பழந்

தமிழ்ச் சுரங்கத்தைத் திருவியாராய்ந்து, இந்தப்பொற்சிலம்பை நமக்களித்த அப்பெரியாருக்கு என்றும் நன்றியுள்ள வணக்கம் செலுத்துகிறோம்.

இந்நூலுக்கு முன்னுரை எழுதி உதவிய தமிழ்த் தாயின் அருந்தவப் புதல்வரும், புலவர் மணியும், தமிழுக்கும் சமயத் திக்கும் அரும்பெருந் தொண்டு செய்பவருமாகிய வித்வான் - தே. பொ. மீனுக்ஷிசுந்தரம் பிள்ளை, M. A. B. L., M. O. L. அவர்கட்கு எமது நன்றி உரித்தாகுக.

இந்நூலின் வெற்றிக்காகத் துணைசெய்த புலவர்மணிகளுக் கெல்லாம் எமது வணக்கமுள்ள நன்றியாகுக.

இந்நூலை இவ்வளவு அழகாக அச்சிட்டுதவிய செந்தமிழ்த் திருத்தொண்டர், உண்மைத் தமிழர், திரு. வி. உலகநாத முதலியார் அவர்களுக்கு எமது நிலயம் பெரிதும் கடமைப்பட் டுள்ளது.

இவ்வரிய நூலை அச்சிடப் பொருளுதவிய பேரன்பர் திருவாளர் காரைக்குடி மு. செல்வ நடராஜன் செட்டியார் அவர்களுக்கு எமது மனமார நன்றி செலுத்துகிறோம்.

இத்தகைய பெரியாரின் கூட்டுறவாலும், உண்மையன்பர் திருத்தொண்டாலும், திருவருளிறைவன் கருணையாலும், எமது நிலயம் தனக்கியன்ற அறிவுப்பணியும் அன்புப்பணியும் செய்து வருகிறது. நாங்கள் செய்ய மேற்கொண்டுள்ள காரியம் மிகப் பெரிது. அக்காரியத்தின் அடிப்படையே இப்போது நடக்கும் இலக்கியப் பணி. திருவருளே தாரகமாக நம்பித் திருத் தொண்டே மூச்சாக வாழும் அன்பு நிலயம் இறைவனருளால் தமிழ், தமிழர் கூட்டம், தமிழகம் இம்மூன்றின் பெருமையை யும் உலகிற்கு விளக்கி, உண்மை யறிவின்பக்கோயிலாக நிலவ எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகிறோம்.

விண்குடை தாங்கியநள் வேந்தனுக்கே யாளாவோம்
பண்ணும் பணியும் படைத்து.

பிரமாதி ஆனிமீ<br>31௨<br>இராமச்சந்திரபுரம்

அன்பு நிலயத்தார்.

VIDWAN
T. P. MEENAKSHISUNDARAN
M. A., B. L., M. O. L., Etc.
*Advocate, Alderman,*
*Corporation of Madras.*

"Tamilagam"
24-7-1939

# முன்னுரை



"நெஞ்சை யள்ளும் சிலப்பதிகாரம் என்றோரு மணி ஆரம் படைத்த தமிழ் நாடு" எனத் தமிழ்க் களிப்பால் ஆடுகிறார் சுப்பிரமணிய பாரதியார். ஆனால் சிலப்பதிகாரமோ இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் வழங்கிய பழந்தமிழில் உள்ளது. அதனை எல்லோரும் எளிதில் அறியலாவதில்லை. அதுபற்றி அதனைப் பழி தூற்றும் பெருமக்களும் இருக்கின்றனர். இந்நிலையில் அந்நூலை இப்போதைய உரைநடையில் எழுதி உலகிற் குதவிய சுவாமி சுத்தானந்த பாரதியார் தமிழுக்குப் பெரியதோரு திருத்தொண்டு புரிந்துள்ளார். தமிழர் அவர்க்குப் பெரிதும் கடப்பாடுடையவர் ஆவர்.

கண்ணகியின் தமிழினும் இனிய சாயல் - சீதையினும் சிறந்த கற்புப் பொலிவு - தன் கணவன் கள்வன் எனப் பிறந்த பழி கேட்டதும் கோதித்தெழுந்த மறத்தீ - இம்மாறுதல்களை மிக அழகாக இளங்கோவடிகள் புனைந்துரைத்துள்ளார். கோவலன், எறிபத்தர் போலத் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனாய் வாழ்ந்தபெருமை - இன்பத்தோடியைந்த வாழ்வு - இவையும் சிறந்ததோர்

ஓவிய நிலையில் சிலப்பதிகாரத்தில் அமைந்துள்ளன. பரத்தையர் குடியிற் பிறந்தும் கற்பிற் சிறந்த மாதவியின் வரலாறு போலப் பிறிதோரு வரலாறு உலகில் காண்ப தரிது. ஆடல் இன்பம் - பாடல் இன்பம் - பெண்ணேனும் அமைதி இன்பம் - பூவும் காவும் அகிலும் துகிலும் அணியும் பணியும் இன்பத்திற்கோர் இன்பமாய்ப் பழுத்த இன்பம் - இவ்வாறு இன்ப வடிவமாய் விளங்குகிறாள் மாதவி. தமிழரைக் குறை கூறியதைப் பொறுது கோதித் தெழுந்த செங்குட்டுவன் வீரம் இமைய மலைக்கும் மேலாக ஓங்கி வளர்ந்தது. ஆராயாது செய்த தவற்றால் கோணிய செங்கோலை உயிர் கொடுத்துத் தூக்கி நிறுத்திய பாண்டியன் நெடுஞ்செழியன் என்றென்றைக்கும் அர சர்க்கு ஒரு மேல்வரிச் சட்டமாகத் திகழ்வான். அவன், அரசர்க்கு உயிர் நெறியாம் அறநெறி பிறழ்ந்தான் என் றறிந்ததும் உயிர்நீத்த அவனுடைய மனைவியாம் பாண் டிமாதேவியின் ஆறிய கற்பிற்கெதிர் கண்ணகியின் சீறிய கற்பன்றி வேறெதனை நாம் எண்ணக் கூடும்? இவ்வாறு பலவேறு அழகோடு விளங்கும் இன்னிசைக் கூத்தியல் நூல் வேறு ஒன்று இல்லை எனலாம். முத்தமிழ் வடிவாம் இந்நூலைப் படியாதார் தமிழர் ஆவரோ?

இத்தகைய சிறந்த நூலை உரை நடையில் அமைத்து சுவாமி சுத்தானந்த பாரதியார் எழுதியுள்ள தமிழ் நூன் மாலையே அவர் அல்லும் பகலும் செய்துவரும் தமிழ்த் தொண்டின் பெருமையைப் பரக்கப் பேசும். அவர் வாழ்க! இந்நூல் வாழ்க! தமிழ் வாழ்க!

தெ. பொ. மீனாக்ஷிசுந்தரன்.

## கவிஞர் - S. தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள்

அன்புடன் அளித்த

# வாழ்த்து



சேரர் பெருமான் செந்தமிழில்

தேடிவைத்த பொருளை யெல்லாம்

யாரும் எளிதிற் பெற்றின்பம்

எய்தப் புதுவைப் பாரதியார்,

தேரும் இனிய உரைநடையிற்

செய்த சிலம்புச் செல்வமிது,

பாரில் என்றும் நிலவிடவே,

பரமன் அருளை வேண்டுதுமே.

சேரமான் பத்தினிக்கடவுள் இளங்கோவடிகள்



முத்தமி ழொடு மும்முடி வேந்தரும்
நித்தியத் திருவிழா நிகழ்த்திய வீர
பத்தினிக் கடவுளைப் பரசுதும் யாமே!

# சிலம்புச் செல்வம்

## க. இளங்கோ அடிகள் வழங்கிய செல்வம்

"சேரமான் செய்த சிலப்பதிகா ரக்கதையைச்
சாரமாய் நாவே தரி."



**வ**ள்ளுவர், இளங்கோ, கம்பர்—இம் மூவரும் நமது தமிழ்த்தாய் உலகிற் கீந்த மூன்று கவியரசர் ஆவர். இவர், தமிழரசியின் செங்கோலும், அரியணையும், பொன்முடியும் போல்வர். உலகுள்ள மட்டும் தமிழை வாழவைக்கும் உயிர் நாடிகள் போன்றவர் இப்புலவர். வள்ளுவர், வையத்தில் வாழ்வாங்கு வாழும் அறம் பொருளின்ப வழிகளைத் துலக்கினார். இளங்கோ, அவ்வழிகளில் நடக்கும் ஆருயிர் வாழ்வின் இன்ப துன்பங்களைச் சொல்லோவியமாக விளக்கினார். கம்பர், வாழ்வுக் கலையில் ஒரு தெய்வ வொளியை வீசி, அரக்கத்தன்மையை நீறுக்கும் தருமவீரக் கனலைத் தூண்டினார். வள்ளுவர், வாழ்வின் இலக்கணத்தைச் செய்தார். மற்றிருவரும், வாழ்வின் இலக்கியத்தைச் செய்தனர். இளங்கோ, பெண்ணின் பெருமையை விளக்கினார். கம்பர், பெண்ணின் பெருமையைக் காக்கும் வீறுபெற்ற ஆண்மையைத் துலக்கினார். இம்மூன்று

கவியரசரும், நமக்கு வற்றாக் கலைச்செல்வத்தை வழங்கி யிருக்கின்றனர்.

இளங்கோ அடிகள் வழங்கிய செல்வம், நாகரிக வுலகில், தமிழரின் உரிமையைக் காக்கும் தனிப்பெருஞ் செல்வமாம் ; அதுவே ஆயிரத்தெண்ணூறு ஆண்டு களுக்குமுன்பு நாம் அடைந்திருந்த சீர்மையைத் துலக் கும் சிலப்பதிகாரச் செல்வம். இலக்கியவுலகிற் சிறந்த வரலாற்றுக் காப்பியம் சிலப்பதிகாரமேயாம். ஷேக்ஸ் பியரின் நாடகப் புலமையும், காளிதாஸனது காவியப் புலமையும், ஹோமரின் வீரச்சுவையும், தாந்தேயின் (Dante) காதற்சுவையும், கேத்தேயின் (Goethe) சொல்லினிமையும், விர்ஜிலின் (Virgile) பொருட்செறி வையும் ஒருங்கேகொண்ட உயர்நடைக்காப்பியம் இளங் கோவடிகளின் சிலப்பதிகாரமாகும். குறளைப்போலவே சிலப்பதிகாரமும், அறம், பொருள், இன்பம் என்னும் முப்பொருளையும் தன்னகங் கொண்டது; அதன் தொடர் நிலைக் காப்பியமான மணிமேகலையில், நான்காவதாகிய வீடுபேறு விளக்கப்படுகிறது. சிலப்பதிகாரம், சொல் லும் பொருளும் இசையும் இன்பமும் அணிந்த காப்பிய மணியா யிருப்பதுடன், பழந் தமிழரின் ஒப்பற்ற அற வாழ்வையும், வீரத்திறனையும், அருங்கலைச் சிறப்பையும், தொழிலாற்றலையும், வாணிபப் பெருக்கத்தையும், அரசி யல் மாண்பையும், சமரஸ உணர்வையும், தமிழ்ப் பெண் டிரின் மதிப் பொலிவையும், கற்புக்கனலையும் நேர்நின்று விளக்கும் இதிகாசமாகவும் நிலவுகிறது. பழந்தமிழர் பெருமையை உலகம் அறிய இளங்கோவடிகளின் சிலப் பதிகாரமேபோதும். சிலப்பதிகாரத்தைப் படிக்குங்கால்,

நிகழ்காலத்தை மறந்து, கி. பி. இரண்டாவது நூற்றாண்டாகிய கடைச்சங்க காலத்திற்குப் போய்விடுகிறோம். அங்கே நாம் காண்பதென்னே! அசோகன், அகுஸ்தன், ஸீஸர், நெப்போலியன் இவர்கள் போன்று பெருமை பெற்ற முத்தமிழ் வேந்தர், தனித் தமிழரசை ஆளுகின்றனர். சேரன் செங்குட்டுவன், திருமா வளவன், நெடுஞ் செழியன் ஆகிய வீரமணிக் குன்றனையார், நமது தமிழன்னையின் உரிமையைக் காத்து நிற்கின்றனர். நாம் முதலிற் சொற்ற மூன்று கவியரசர் பெருமை போன்றே, இம்மூன்று புவியரசர் பெருமையும் உலகளாவி விளங்குகிறது. இவர் வெற்றிக்கொடி விண்ணளாவிப் பறக்கிறது. இமயமலையில் தமிழ் வேந்தரது விற்கொடியும், மீனக் கொடியும், புலிக்கொடியும் பொறிக்கப் பெற்றுள்ளன. ஆரிய வேந்தர், தமிழ் அரசரை நன்கு மதித்து வணங்குகின்றனர். ஐரோப்பாவினின்று கிரேக்கரும், உரோமரும் வந்து, நமது தமிழ் வேந்தருக்கு ஊழியஞ் செய்கின்றனர். குடிதழுவிக் கோலோச்சும் இத் தமிழ் வேந்தர், எச்சமயத்திலும், எவர் முறையீட்டையும் கேட்டு நீதி வழங்குகின்றனர். செங்கோல் கோடியவிடத்துத் தமது உயிரையும்விடத் துணியும் மன்னர் தமிழகத்தில் அரசு புரிகின்றனர். சேரசோழ பாண்டியவீரர், தரைப் போரிலும், கடற்போரிலும் பகைவரை வென்று, வாகைசூடி, வெற்றிமுரசடித்து அணியணியாக வருகின்றனர். நீதி மன்னரின் வீரப்புகழைக் கவிமன்னர் பாடுகின்றனர். பூம்புகார், மதுரை, வஞ்சி, காஞ்சி முதலிய நகரங்கள், தற்காலச் சிற்பிகளும் வியக்கும் படியான அழகு நிரம்பி விளங்குகின்றன. அவற்றி

லுள்ள மாந்தர் வாழ்வெல்லாம் ஓர் அருங்கலைத் திருவிழாப்போற் பொலிகின்றன. ஆண்மையும், பெண்மையும், வாழ்க்கையின் இரண்டு மின்சார சக்திகள் போல இணைந்து, மங்கலமான மனையறங் காக்கின்றன. தேவரும் வணங்கத்தகும் கற்பரசிகள் நமது சமுதாயத்தை வளர்க்கின்றார்கள். சைவம், வைணவம், சமணம், பௌத்தம் ஆகிய பலமதங்கள் ஒன்றையொன்று நன்குமதித்துத் தமது கொள்கைகளைக் கடைப்பிடித்துச் சமரஸமாக ஓங்குகின்றன. ஆண்களைப் போலவே பெண்களும் அறிவாற்றல்களில் முன்னேறி விளங்குகின்றனர். இளங்கோ, சாத்தனார், நக்கீரர், கபிலர், பரணர் போன்ற கவிகளுடன், ஔவை, ஆதிமந்தியார், வெள்ளி வீதியார், காக்கை பாடினியார் போன்ற பெண்களும் சங்கம் வீற்றிருந்து இலக்கியத்தொண்டு செய்கின்றனர். எத்திசையும் முத்தமிழ் முழக்கம்! எம்மருங்கும் செல்வச் செழிப்பு! கல்வி விளக்கம்! உப்பு வாணிகர் முதல் கூலவாணிகர் ஈறுகவுள்ள எல்லா வணிகரும் தமது தொழில்களை முறையுடன் நடத்துகின்றனர். கைத்தொழில்கள் பெருகி வளர்கின்றன. எல்லாரும் பெரும்பாலும் நாட்டுச் சாமான்களையே கையாளுகின்றனர். தமிழர் உடுத்து மிஞ்சிய ஆடைகள் பிற நாடுகட்கு ஏற்றுமதியாகின்றன. தமிழ்க் கப்பல்கள் மேற்கிலும், கிழக்கிலுஞ் சென்று ஏராளமான பொற்குவைகளுடன் திரும்பி வருகின்றன. திரைகடலோடுந் தமிழ் வணிகர் குபேரராக விளங்குகின்றனர். இல்லறச் செல்வர் செல்விருந்தோம்பி, வருவிருந்து பார்த்து நிற்கின்றனர். யாழும், குழலும், ஆடலும், பாடலும்,

கலையும் கவிதையும், அழகும், அணியும், அறமும், அன்பும், சமூக வாழ்வை இன்புறுத்துகின்றன.....ஆ! ஆ! அத்தகைய வீறுபெற்ற இன்பத் தமிழகத்தை, உண்மைத் தமிழகத்தை, சுதந்திரத் தமிழகத்தை இனிக் காண்போமோ! அக்காலம் போன்றே இக்காலமும், நமது தமிழரசி, கலைச் செங்கோல் பிடித்து, அறிவுலகையாளக் காண்போமோ? தமிழும், தமிழரும் தமிழகமும் மீண்டும் பழம் பெருமைபெற்று விளங்க வேண்டும். தமிழீர், உங்கள் நரம்புகளில் தமிழ்வீறு ஏறுக! அந்த வீற்றை யேற்றும் ஒரு சக்திக்கனல் சிலப்பதிகாரத்தில் உள்ளது. சிலப்பதிகாரச் செல்வத்தைக் கொண்மின்; நீவிர் உலகின்முன் இமயம்போல் தலைநிமிர்ந்து நடக்கலாம்.

தமிழ் வாழ்க!

தமிழர் ஓங்குக!

தமிழகம் பொலிக, பொலிக!



# உ. கோட்டமில் கட்டுரை

" சூழ்வினைச் சிலம்பு காரண மாகச்
சிலப்பதி கார மென்னும் பெயரால்
நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள் "



* இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், 'வஞ்சி' என்னும் கருவூரிலிருந்து, செங்கோல் செலுத்தி வந்தான். அவன், தமிழர் புகழும் தனது வீரமும்

* சேரலாதர் இருவராவர் :

1. பெருஞ்சேரலாதன் (ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், நாடு கண்ணகற்றிய உதியன் சேரல்) இவனே வெண்ணிப் பறந்தலையில் கரிகால் வளவனோடு பொருது, புண் நாணி, வடக்கிருந்து, வாள் ஏந்தியவாறே பட்டினி கிடந்து உயிர் நீத்தான். அகநானூறு 55-வது செய்யுளில்,

" கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்
பொருதுபுண் நாணிய சேர லாதன்
அழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென் "

என்று மாமூலர் சொல்லுகிறார்.

புறநானூறு 62-வது பாட்டில் சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியும் போர் புரிந்து வீர விண்ணடைந்ததாகக் கழாத்தலையார் கூறுகிறார்.

2. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்: இவனே செங்குட்டுவன் தந்தையென்க.

"வலம்படு முரசிற் சேர லாதன்
முந்நீ ரோட்டிக் கடம்பெறிந் திமயத்து
முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து "

(அகம். 127 மாமூலனார்)

என்று புலவர் இவனைப் போற்றுவர்.

விளங்கப் படை நடத்தி, இசை பெற்ற ஆரிய மன்னரை வென்று, இமய மலைமீது தனது விற்கொடியைப் பொறித்தான். இதனை,

> " அமைவரல் அருவி இமயம்விற் பொறித்(து)
> * இமிழ்கடல் வேலித் தமிழகம் விளங்கத்
> தன்கோல் நிறீஇத் தகைசால் சிறப்போடு
> பேரிசை மரபின் ஆரியர் வணக்கி......"

எனவரும் பதிற்றுப்பத்துச் செய்யுள் வலியுறுத்தல் காண்க.

இவ்வீரச் செயலால் இவனை, ' இமயவரம்பன் ' என்று தமிழர் புகழ்ந்தனர். இப்புகழ்பெற்ற மன்னனுக்குச் சோழர் குலக்கொடியான நற்சோணை யென்னும் மனைவியால், அறிவறிந்த மைந்தர் இருவர் பிறந்தனர்: அவர்களில், மூத்தவன் †செங்குட்டுவன் ; இளையவன் இளங்கோ. இரண்டு மைந்தரும் அரசருக்குரிய கல்வி, கேள்வி, போர்ப்பயிற்சி அனைத்திலும் தக்க தேர்ச்சி பெற்று ஆளாயினர். சேரலாதனும் தனக்குப் பிறகு பட்டத்திற்கு வரும் இளவரசனைத் தேர்ந்தெடுக்க நினைத்தான்.

ஒருநாள், சேரலாதன் தன் இரண்டு புதல்வருடன் மணி மண்டபத்தில் வீற்றிருந்தான். அப்போது ஆங்கொரு நிமித்திகன் தோன்றி, இரண்டு அரச மைந்தரையும் நுனித்து நோக்கிப் பின்னர் சேரலாதனை நோக்கி, "வஞ்சியர் பெருமானே ! நினக்குப்பின் நாடாளத் தக்கவன் இளைய மைந்தனே. அவனிடமே அரசருக்குரிய

* ஒலிக்கும்.

† நெடுஞ்சேரலாதற்குச் சோழன் மணக்கிள்ளியீன்ற மகன் செங்குட்டுவன் (பதிற்றுப்பத்து V)

இலக்கணங்கள் யாவும் அமைந்துள்ளன" என்றான். அதனைக்கேட்ட இளவல், "என்ன! தமயன் இருக்கத் தம்பியோ அரசாளுவது! இது முறையோ?" என்று நிமித்திகன் உரையை வெறுத்து, "அண்ணலே, தாங்கள் திருமுடி சூடி அரசாட்சி செய்க; யான் அறிவாட்சி செய்கிறேன்" என்று அக்கணமே, யாவரும் வியக்க, அரண்மனைச் சுகத்தைத் துரும்பென நீத்துத் துறவறந் தாங்கி, வஞ்சி நகரின் கிழக்கே, திருக்குணவாயில் என்னும் ஊர்க்கண்ணுள்ள கோயிலில் இருக்கை கொண்டார். பரதன் இராமனை நேசித்ததுபோலவே, இளங்கோ செங்குட்டுவனை நேசித்தார். இளங்கோவின் மாசற்ற துறவை நன்கு மதித்து, "இளங்கோ அடிகள்" என்று உலகம் அவரைச் சிறப்பித்தது.

இதன் பிறகு, செங்குட்டுவன் இடர்களையெல்லாம் வென்று, முடிபுனைந்து புவியரசனானான். இளங்கோ அடிகள், மனத்தை வென்று, தூய்மை புனைந்து கவியரசரானார். அப்பெரியார் கவியரசரான வகையைச் சிலப்பதிகாரப் பதிகமே நன்கு விளக்குகிறது.

ஒருநாள் சேரன் செங்குட்டுவன், அரசி வேண்மாள், மதுரைச் சங்கப்புலவரான சாத்தனார், அரசைத் துறந்து குணவாயிற் கோட்டத்தில் அருந்தவம் புரிந்திருந்த இளங் கோவடிகள் ஆகிய இந்நால்வரும் இயற்கை யழகை நுகரத் திருசெங்குன்றத்திற்குச் சென்றனர். இக்குன்றம், கொடுங்கோளூர் பக்கத்தில், வஞ்சியின் அருகே இருக்கிற தென்பர். அக்குன்றக் குறவர் ஒருங்குகூடி, அரசனிடம் வந்து வணங்கி, அடிகளிடம், "பொன்மலர் பொலியும் வேங்கை மரமொன்று

அதோ உள்ளது. அதன் கொழு நிழலில், ஒற்றை முலையை யிழந்த ஓர் அழகிய வீரபத்தினி நின்றாள். தேவேந்திரனைச் சார்ந்த தேவர்கள் அவள் முன் வந்து வணங்கி, அப்பத்தினியின் கணவனை அவளுக்குக் காட்டினர். உடனே அவளுடன் அனைவரும் எமது கண் காண விண்ணகஞ் சென்றனர். என்னே வியப்பு! அடிகள் இவ்வற்புதத்தை அறிந்தருளுக" என்ற ஓர் அதிசயச் செய்தி சொன்னார்கள். இச்செய்தி கேட்ட சேரன் வியந்து, அப்பத்தினியின் முழு வரலாற்றையும் அறிய அவாவினான். "அப்பத்தினிக்கு விளைந்ததை யான் அறிவேன்" என்று மதுரைப் புலவர் சாத்தனார் விளம்பலானார்:—

"கலை, வாணிபம், செல்வம் இவற்றால் வற்றாச் சிறப்புடையது புகார் நகரம். அது ஆத்திமாலை யணிந்த சோழனது பழைய துறைமுகப் பட்டினம். ஆங்கே, கோவலன் என்னும் ஒரு வணிகன் இருந்தான். மாதவி யென்னும் ஒரு நாடகக் கணிகையும்அவ்வூரிலிருந்தாள். அவள் நாடகக் கலையே புகழ்ந்தேத்தத்தக்க சிறப்பினள். அவளுடன் கூடியாடி, அறமும் இன்பமும் அளிக்க வல்ல அரும் பொருளை யெல்லாந் தோற்று, ஏழையானான் கோவலன். எஞ்சியது அவனது தரும பத்தினியான கண்ணகியின் காற் சிலம்பேயாகும். பண்ணொலிக்கும் அந்தப் பொற்சிலம்பை விலைகூற மனைவியுடன் அவன் மாடமாளிகை யோங்கும் மதுரையிற் புகுந்தான்.

மதுரை, புலவர் பாடல் பெற்றுப் புகழ் சிறந்த பாண்டியனுடைய பெருஞ் சீரோங்குந் தலைநகரம்.

அந்நகரின் வணிகர் தெரு மிகப்பெரியது. அங்கே சிலம்பை விற்கக்கொண்டு சென்ற கோவலன்,கூற்றைப் போலத் தன் எதிரே வந்த ஒரு பொற்கொல்லன் கையில் அதைக் காட்டினன். அவன் அரசியின் ஒரு பொற் சிலம்பை அபகரித்து "அது திருட்டுப்போனது" என்று பொய் சொன்னவன். தனது திருட்டை மறைக்கச் சரியான வாய்ப்புக் கிடைத்ததென் றுணர்ந்து "இது மிக வும் விலைபெற்ற சிலம்பு ; இது கோப்பெருந் தேவிக்கே யன்றிப் பிறருக்குப் பொருந்தாது ; நான் சென்று அர சனுக்குத் தெரிவிக்கிறேன். அதுகாறும் நீ இங்கே யிரு" என்று சொல்லி, அரண்மனைக்கு விரைந்தான் பொற் கொல்லன். அப்போது பாண்டியன் காமபரவசனுகத் தனது அரசியிடம் சென்றுகொண்டிருந்தான். "அரசே காணுமற் போன சில்லரிச் சிலம்பை ஒரு கள்வன் கையிற் கண்டுபிடித்தேன் " என்ருன் திருட்டுக் கொல் லன். வேப்பம்பூமாலை பூண்ட பாண்டியன், ஏதும் ஆரா யாமல் மதிமயங்கி, அனுபவத்தில் முதிர்ந்த தனது காவலரைக் கூப்பிட்டு "கள்வனைக் கொன்று அச்சிலம் பினைக் கொண்டு வருக " என்றேவினன்.

"அக்கள்வனைக் கொல்லச் சிலம்புடன் அவனை இங் குக் கொண்டுவருக' என்பதற்குப் பதிலாக அவ்வாறு வாய்தவறிச் சொல்லிவிட்டான். முன்வினை விளையும் காலமாதலால், அவ்வாறு அவன் வாய் சோர்ந்தது.

கோவலனைக் கொன்றனர் காவலர். கோவலன் கொலைக் களத்தில் வெட்டுண்டு கிடப்பதைக் கண்ட பத்தினி கண்ணகி நிலைகாணுமல் மனந்துடித்து, பாண் டியன் முன்சென்று,தனது நியாயத்தை எடுத்துரைத்து,

நெடுங்கண்ணீர் உகுத்தாள். பத்தினியின் கண்ணீர் பாண்டியனை யழித்தது. தனது செங்கோல் கோடிய தென்று, பாண்டியன் அரியணையினின்று விழுந்து இறந் தான். முத்தாரந்துலங்கிய தனது மார்பின் இடமுலை யைத் திருகி வீசி யெறிந்து, மதுரை நீளெரியுண்டழியச் செய்தாள் கண்ணகி. இவள் பலர் புகழ்ந்து கொண் டாடும் பத்தினியாவள்."

இதைக் கேட்டுத் திடுக்கிட்ட, செங்குட்டுவன் "வினைப் பயன் விளையும் காலத்தால் இது நிகழ்ந்தது என் றீரே, அவர் வினைவிளைவு யாது?" என்று சாத்தனாரைக் கேட்டான். சாத்தனார் "வீர மன்னவ, கேட்பாயாக: பகைவரால் நடுக்கமில்லாத சிறப்பையுடைய மூதூரான மதுரையில், கொன்றைமலர் சூடிய அழகிய முடிதரித்த சிவபெருமான் விளங்கும் பொதுமன்றமான வெள்ளி யம்பலத்தில் நான் துயில் கொண்டேன். நள்ளிர வில் ஒரு காட்சியைக் கண்ணாரக் கண்டேன். கண வனை யிழந்து பெருந்துயருழன்ற அந்த வீரபத்தினி முன்னே மதுரைத் தெய்வம் வந்து தோன்றி, 'கொதிக் கும் தீயைக் கொங்கையால் விளைவித்த நங்காய், முற் பிறப்பில், ஈகைப்புகழ் குறையாதோங்கும் சிங்கபுரத்தில், சங்கமன் என்னும் வாணிகன் மனைவி நீலி என்பவள் இட்ட சாபம் கணவனுடன் உன்னை வந்து பற்றியது. அதனால் உமது பழவினை இப்படி முடிந்தது. நீண்டு தழைத்த கூந்தலாய், இன்னும் பதினான்கு நாட்கள் சென்ற பின்னர், நினது கணவனை இவ்வுலக மக்கள் வடிவிலன்றி, வானவர் வடிவிலேயே காண்பாய்' என்று கூறியது. அந்த வஞ்சமற்ற கட்டுரையை யான் கேட் டேன்" என்றார்.

சாத்தனார் கட்டுரையைக் கேட்ட இளங்கோவின் மனம் இளகியது. "அரசியல் பிழைத்த மன்னனுக்கு அறமே கூற்றாகும். புகழமைந்த பத்தினியைப் பெரி யோர் போற்றி வணங்கத்தகும். முன் செய்த இருவினை களும் உருக்கொண்டு வந்து இப்பிறப்பில் பயன்களை நுகர்விக்கும். இந்த மூன்று செயல்களும் சிலம்பின் காரணமாக விளங்கின. ஆதலால், 'சிலப்பதிகாரம்' என் னும் பெயரால், பல துறைப் பாக்களுடன், உரைப்பாட் டும், இசைப்பாட்டும் விரவிய இயலிசை நாடகச் செய் யுள் ஒன்றை நாம் நாட்டுவோம்" என்றார் அடிகள்.

சாத்தனார் பெருமகிழ்வுற்று, "தமிழகத்தை யாளும் மூன்று முடிவேந்தர்க்கும் உரிய இக்கதையை அடிகள் அருளுக" என்று ஊக்கினார்.

இசைபெற்ற இளங்கோவடிகள் அவ்வாறே, அறத்துப்பால், பொருட்பால்,காமத்துப்பால் ஆகிய முப் பாலும் அடங்கிய, பாட்டுடைச் செய்யுளை அருளினார். அச்சிலப்பதிகாரச் செய்யுளை மதுரைச்சங்கப் புலவரும் நண்பருமான கூலவாணிகச் சாத்தனார் கேட்டார். வீட் டுப்பாலை மணிமேகலையாகப் பாடி முடிக்க அடிகள் கரு தினார். தாமே அதைப்பாடி முடித்திருப்பதாகச் சாத் தனார் உரைத்ததால் "மணிமேகலைமேல் உரைப்பொருள் முற்றிய சிலப்பதிகாரம்" என்று தமது காவியத்தை முடித்தார் இளங்கோவடிகள்.



## ௧. மங்கல வாழ்த்து



கோங்கலர் மாலை யணிந்த சோழனது குளிர் வெண் குடைபோல், இந்த அழகிய உலகிடத்தை, நிலவளித்துக் காக்கிறது திங்கள். ஆதலால் திங்களைப் போற்றுவோம்; திங்களைப் போற்றுவோம்.

காவிரி நாடன் திகிரியைப் போல், மேருவை வலம் வருகிறது ஞாயிறு. ஆதலால் ஞாயிற்றைப்போற்றுவோம், ஞாயிற்றைப் போற்றுவோம்.

கடல்சூ ழுலகிற்குச் சோழன் சுரக்கும் அன்பும் ஈகையும்போல், வானின்று அமுதம் பொழிவது மழை. ஆதலால் மாமழை போற்றுவோம், மாமழை போற்றுவோம்.

நிறைவான நீர்வேலி சூழ்ந்த உலகில், அச்செம்பியன் குலத்தொடும் புகழ் பரந் தோங்குவது அழகிய புகார் நகரம். ஆதலின், பூம்புகார் போற்றுவோம், பூம்புகார் போற்றுவோம்.

திங்களும், ஞாயிறும், மழையும் என்றும் உலகைக் காக்கும் இயற்கைப் பொருள்கள். கடவுளின் அட்ட மூர்த்தங்களில் இரவியும், மதியும் நீரும் சேர்ந்தன. இவை என்றும் இருந்து, உலகிற்கு உதவுவது போல, மன்னன் அறம் என்றும் நிலைத்து உலகைக் காக்கட்டும். தன்னிடம் உள்ள கறையை நீக்காது திங்கள், உலகின் இருளை நீக்கித் தன்னலமற்ற பொதுநலத்திற்கு ஓர் இலக்காயிருக்கிறது. அதுபோல, நீதிமன்னனுடைய

சந்திரவட்டக் குடையும், தனது அன்பு நிழலில் மன்னுயிரைக் காக்கும். திங்களால் பல மலர்கள் மலர்ச்சியுறுகின்றன. கடல் பொங்கி யெழுந்து ஆர்கலித்து இன்பக்கூத் தாடுகிறது. அதுபோல நீதி மன்னனது கொற்றவெண் குடையால் குடிகளின் உள்ளம் மலர்ச்சி பெறுக. மக்கள் வாழ்வு இன்ப மயமாகப் பொங்குக. சூரியனே உலகிற்கு உயிர். அவன் தோன்றியவுடனே, உலகம் இருளொழிந்து, கண்விழித் தெழுந்து, பல தொழில்களைப் புரிந்து வாழ்வை நடத்துகிறது. அது போல, மன்னனது ஆக்கினைசக்கிரம் நாடெங்கும் சுற்றிக் கல்வியொளியும் செல்வத் தொழிலும் வளர்த்து, மடமை வறுமை சோம்பல் ஆகிய துயர்களை யோட்டி அறத்தைப் பாதுகாத்து விளங்குக. கடலினின்று கதிரவன் இழுக்கும் ஆவியே மேகமாகி மழை பொழிகிறது. அதுபோல, நீதி மன்னவன் குடிகளிடம் ஆறிலொரு கடமைவாங்கி, அவ்வருவாயைக் குடிகளின் நலத்திற்கே செலவிடுக. மழையின்றி உலகில்லை. மேகம் தன்னை முற்றிலும் அப்படியே வழங்கி மறைகிறது. எப்பயனையும் எதிர்பாராமல், மழை தன்னையே வழங்கி உலகைச் செழுப்பித்து, உயிர்கள் உண்டு வளரச் செய்கிறது. அதுபோல், அரசன் தனக்குப் பேர்புகழ் வேண்டுமென்றும் கருதாமல் தனது செல்வம், ஆற்றல், அறிவு, அன்பு அனைத்தையுங்கொண்டு குடிகளுக்கு நன்மை செய்க. திங்களும் ஞாயிறும், மழையும் உலகைத் தாங்குவது போல, அரசனது குடையும், கோலும், அன்பளியும் உலகைத்தாங்குக. இவ்வாறு சோழமன்னன் காக்கும் காவிரி நாட்டிற்குத் தலை நகர் அழகிய புகார் என்னும்

காவிரிப்பூம்பட்டினம். பூம்புகார், சோழனது செங் கோன்மையின் விளக்கம். கல்வியும், கலைகளும் தொழில் களும், வாணிபமும், சீரும் செல்வமும் ஓங்கும் புகார் நகரைப் பார்த்தாலே சோழனது ஆட்சித் திறமையும் முறை தவறு நீதியும் புலப்படும். ஆதலால் பூம்புகார் வாழ்க. இக்கதையின் தொடக்கத்தில் பூம்புகாரைப் புரந்தவன் கரிகால் வளவன். அவனது பெருமையை அறிவோம்.



## ச. கரிகால் வளவன்



கரிகால் வளவன், குடிகளுக்கு இதஞ்செய்வதில் அசோகன்; எம்மதமுஞ் சம்மதமான சம நோக்குடன் ஆளுவதில் அக்பர்; கல்வி, கேள்வி, தொழில், வாணிபம் ஆகிய இவற்றை வளர்த்து, நாடு செழிக்கச் செய்வதில் அகுஸ்தன்; பகைவரைப் போரில் வெல்வதில் நெப்போலியன், ஸீஸர், அலெக்ஸாந்தர், அன்னிபாலன். இத்தகைய பெருமை வாய்ந்து, ஒரு பெரிய செந்தமிழ் சாம்ராஜ்யத்தை நிலைநாட்டின கரிகால் வளவனைப் பொருநராற்றுப்படை, பட்டினப் பாலை என்னும் இரண்டு நூல்களும் சிறப்பிக்கின்றன.

கரிகாலன் தந்தை 'இளையோன்' என்னும் இளஞ் சேட்சென்னி. தாய் அழுந்தூர் வேண்மகள். இவன் பிறந்த ஆண்டு, கி. பி. 35 என்றும், 50 என்றும் பல வாறு சொல்லுவர். சிலப்பதிகாரக் கதைத் தொடக் கத்தில் காவிரிப்பூம் பட்டினத்தில் ஆண்ட சோழன் கரிகாலனே என்பது பல அறிஞர் முடிபு. 'எப்போது' என்பது நமது கேள்வியன்று. 'எவ்வாறு அவன் வாழ்ந் தான்?' என்பதே நமது ஆராய்ச்சி. கல்வி கேள்வி, போர்க்கலை இவற்றில் முற்றிக் கரிகாலன் வீர இளைஞனா யிருக்கையில் தந்தையை யிழந்தான். சோழத் தலைநக ரான உறையூரில் உட்சண்டையும் குழப்பமும் எழுந் தன. கரிகாலனைக் கொல்லப் பகைவர் கத்தி தீட்டி யலைந்தனர். கரிகாலன் உறையூரை விட்டோடினான்; மாறுவேடம் பூண்டு தமிழ் நாடெங்கும் சுற்றித் திரிந் தான். இக்காலம், இவன் பொதுஜனங்களுடன் பழகி,

மாந்தர் இயல்பையும்,குறைநிறைகளையும் நன்கு அறிந்து கொண்டான். தனது போர்வலியையும் பலவாறு பெருக்கிக் கொண்டு கரிகாலன், கரூரில் மறைந்திருந் தான். அப்போது, உறையூர் அரசனில்லாது வருந்தி யது. ஓர் அரசனைத் தேர்ந்தெடுக்கப் பொது ஜனங் கள் விரும்பினர். அக்கால வழக்கப்படிச் சீர்காழியி னின்று ஒரு யானை ஏவப்பெற்றது. அது கரூருக் குச் சென்று, ஆங்கிருந்த கரிகாலனைத் தன் முதுகில் ஏற்றி வந்தது. சில நல்லோர் சென்று அரசிற்குரிய அவ் விளவலை அன்போடு அழைத்து வந்தனர். இவ் வாறு கரிகாலன் தேர்ந்தெடுக்கப்பெற்றும், அவனை வெறுத்துப் பகைகொண்டு தாயத்தார் சிறையிட்டனர். இந்த வீரன் இருக்குமட்டும் நமக்கு ஆபத் துத்தான் என்றெண்ணிச் சில பகைவர் அச்சிறைக் கும் தீ வைத்தனர். நெஞ்சுரம் பெற்ற நமது வீரன், தீயைத் தாண்டிச் சிறையேறிக் குதித்து, மாறு வேடம் புனைந்து உயிர் தப்பினன். ஆனல், அவனது ஒரு கால் தீயால் வெந்து கரிந்துபோயிற்று. அதனல், அவனுக்குக் கரிகாலன் என்று பெயர் வந்ததென்பர். 'கரி + காலன்' என்றல் யானைக்கு எமன், யானையைக் கூட முட்டி வெல்லக் கூடியவன், அல்லது பகைவரின் யானைப் படைகளைப் பொருது வீழ்த்த வல்லவன் என்றும் பொருள் கொள்வர். சிறை தப்பிய கரிகாலன், தனது மாமனை இரும் பிடர்த் தலையாரின் உதவி யைக் கொண்டு ஒரு படை திரட்டி, தோரணக் கம்பத்தின் மீதேறிய ஹனுமான் போன்றும், ஏழுதலைப் பாம்பைப் பொருத ஹேர்குலீஸ் போன்றும்

பகைவரைப் பொருது அழித்து, அரசுரிமையைக் கைப் பற்றிக் குலப்புகழ் விளங்க உறையூரில் அரசாண்டான்.

சுடப்பட் டுயிருய்ந்த சோழன் மகனும்,
பிடர்த்தலைப் பேராணைப் பெற்றுக்—கடைக்கால்
செயிரறு செங்கோல் செலீஇனான்; இல்லை
உயிருடையார் எய்தா வினை. (பழமொழி)

ஆத்திமாலை சூடிப் புலிக்கொடி யுயர்த்தி, அறம் நிறுத்திச் செங்கோல் புரிந்தான் செம்பியன். வயதிற் சிறுவனாலும் அறிவாற்றல்களிற் பெரியனான கரிகாலன், குடிதழுவி, மக்கள் குறிப்பறிந்து, அனைவருக்கும் இதமாக நடந்து கொண்டதனால், நாட்டில் அமைதி நிலவியது. ஒருமுறை தமது வழக்குத் தீர்த்துக் கொள்ள வந்த இரு முதியர், இள மன்னனைக் கண்டதும், 'இவ்விளைஞனோ நம் மனமறிந்து நீதி தரவல்லவன்' என்று இரகசியமாகப் பேசினர். அக்குறிப் பறிந்த கரிகாலன், உடனே தனது அறைக்குச் சென்று, நரைத்த கிழவன் மாதிரி வேடம் புனைந்து வந்து, வழக்கைக் கேட்டுச் சரியான தீர்ப்புச் சொல்லி இருவரையும் மகிழ்வித்தான்.

'உரைமுடிவு காணான் இளமையோ' னென்ற
நரைமுது மக்க ளுவப்ப—நரைமுடித்துச்
சொல்லான் முறைசெய்தான் சோழன் குலவிச்சை
கல்லாமற் பாகம் படும். (பழமொழி)

கரிகாலன், தனது அரசில் கல்வியும் தொழில்களும் வளர்ச்சிபெற, மடமையும் வறுமையும் நீங்க, அன்பும் அமைதியும் நிலவச் செய்தான். பிறகு, வீரப்படை திரட்டி, நீடாமங்கலத்திற் கருகேயுள்ள கோவில் வெண்

ணியில் தன்னை யெதிர்த்த பெருஞ் சேரலாதனையும், ஒரு பாண்டியனையும், வேளிர் முதலிய குறுநில மன்னரையும் முறியடித்துத் தமிழகத்திற் புலிக்கொடியை நிலை நாட்டினன். வாகை யென்னும் ஊர்ப்புறத்தே, அவன் ஒன்பது குறுமன்னரை யெதிர்த்துவென்ருன். பிறகு சீஸர், நெப் போலியன் போன்ற வீரரின் ஆவேசத்துடன் படை நடத்தி, அருவாநாட்டுக் (தென்ஞற்காடு) குறும்பரை யடக்கி, அந்நாட்டை 24 கோட்டங்களாகப் பிரித்துத் தனதன்பிற்குரிய வேளாளரை அங்குக் குடியேற்றினன்! அருவாநாட்டின் தலைநகரான காஞ்சீபுரத்தில் காமக் கோட்டம் அமைத்து வழிபட்டான். கரிகாலன் எந் நாட்டை வென்ருலும், அங்கே அமைதியும், அறிவும், மக்கள் முன்னேற்றத்திற்கு வேண்டிய எல்லாச் சாதனங் களும் அமையச் செங்கோல் நடாத்தி வந்தான். அதன் பின் அவன் வேங்கடத்தில் ஆண்ட வடுக மன்னனை வென்ருன்; திருக்கோவலூரைத் தலைநகராகக்கொண்ட மலையமா நாட்டையாண்ட மலையமான், சோழர் ஆணைக்கு உட்பட்டான். பிறகு கரிகாலன் நாகப்பட் டினத்தைத் தலைமையாகக்கொண்டு, பன்றி நாட்டை யாண்ட ஒளிநாகரை வென்ருன். பாண்டிநாட்டைக் கைக்கொண்டான்; பூழி (வட மலையாளம்), குடம் (தென்மலையாளம்), குட்டம் (கொச்சி), வேநாடு (திரு வாங்கூர்), கற்கா (பாலக்காடு) இவ்வைந்தும் சேர்ந்த சேரநாட்டை வஞ்சியினின் ருண்ட சேர மன்னனைப் புறங்கண்டான்; முல்லை நிலப் போதுவரைக் கீழ்ப் படுத்தினன்; இருங்கோவேள் முதலிய வேளிரை வணக்கினன்; இவ்வாருகத் தமிழகம் முழுதும் வென்ருன்.

“பல்ஒளியர் பணிபொடுங்கத்
தொல்அருவாளர் தொழில்கேட்ப
வடவர் வாடக் குடவர் கூம்பத்
தென்னவன் திறல்கெடச் சீறி, மன்னர்
மன்னெயில் கதுவு மதனுடை நோன்றாள்
மாத்தானை மறமொய்ம்பிற்
செங்கண்ணாற் செயிர்த்து நோக்கிப்
புன்பொதுவர் வழிபொன்ற
இருங்கோவேள் மருங்குசாய” —பட்டினப்பாலை

இன்னும் போர்வெறி தணியாத கரிகாலன், வடநாட்டிற் படைநடத்தி, இமயப்பிடரில் புலிக்கொடி பொறித்து, வச்சிரம் (பண்டில் கண்டு), மகதம் அவந்தி முதலிய நாடுகளில் ஆண்ட வடமன்னரை வணக்கித் திறைகொண்டு மீண்டனன். மைசூர்வரை விரிந்த மௌரிய சாம்ராஜ்யத்தை நிலைநாட்டினான் அசோகன். கரிகாலன், இமய முதல் குமரி வரை விரிந்த பரத கண்டம் முழுதிலும் தனது தமிழ் சாம்ராஜ்யத்தை நிலை நாட்டி யாண்டான்; அம்மட்டுமோ? கடற்படை கொண்டு இலங்கையிற் புகுந்து, முதற் கயவாகுவை வென்று, பன்னீராயிரம் சிங்களரைச் சிறைப்பிடித்து வந்தான்.

இவ்வாறு கரிகாலன் தான் வென்ற நாட்டை, ஆங்காங்கு வலிய படைகளை வைத்துக் காத்து, பிறகு குடிகள் முன்னேற்றத்திற்கு வேண்டிய பல நன்மைகளைச் செய்தான்: காடுவெட்டி நாடாக்கினான்; குளந்தொட்டு வளம் பெருக்கினான்; அக்காலம் காவிரி வெள்ளத்தால் பயிர்களுக்கும் உயிர்களுக்கும் கணக்

கற்ற சேதம் நேர்ந்தது. காவிரி கொள்ளிடம் ஆகிய இரண்டின் வெள்ளமும் தனித்தனியே பிரிந்து விவசாயத்திற்குப் பயனாகும்படி பாய, அணைகளும் வாய்க்கால்களும், மதகுகளும் கட்டினான்; இப் பெரிய காரியத்திற்குத் தன் ஆட்சிக்குட்பட்ட சிற்றரசரையும், தான் போர்களிற் சிறைபிடித்த வீரரையும் பயன் படுத்தினான்; காவேரியாறு பாயும் இடங்களில், ஆங்காங்குள்ள சிற்றரசருக்கு வேலையைப் பங்கிட்டு, இக்காரியத்தை வெகு திறமையுடன் நிறைவேற்றினான். இதனால் வடநாட்டிற்குக் கங்கை போலவும், ஐரோப்பாவிற்கு டான்யூப் போலவும், எகிப்திற்கு நைல் போலவும், சோழநாட்டிற்குக் காவேரி நல்வளமளித்தது. மக்கள் கரிகாலனை வாழ்த்தி, 'கரிகால் பெருவளத்தான், பொன்னிநல் வளவன், வளவர்கோன், திருமாவளவன்' என்று கொண்டாடினர்; "பொன்னிக் கரைகண்ட பூபதி, ஆயிரம் விளையுட்டாகக் காவிரி புரக்கும் நாடு கிழவோன்" என்று புலவர் புகழ்ந்தனர்.

முதலாவது சந்திரகுப்தனைப்போலவே நமது கரிகால் வளவனும், தனது அரசியலை இலாகா இலாகாவாகப் பிரித்துத் தக்க அறிவாளிகளைக் கலந்து கொண்டு குடிதழுவிக் கோலோச்சினான். தமிழ் மன்னர், ஐம்பெருங் குழுவும், எண்பேரும் ஆயமும் புடைசூழ அரசாண்டு வந்தனர். ஐங்குழு நாட்டுக்காரியங்களைக் (National Service) கவனிக்கும். எண்பேரும் ஆயம் அரசனுக்கு வேண்டிய சொந்தப்பணிகளைச்(Personal Service) செய்யும். ஐம்பெருங் குழு:—அமைச்சர், புரோகிதர், படைத்தலைவர், தூதுவர், சாரணர் ஆகி

யோராவர். எண்பேரும் ஆயம்:—கணக்கர், கருமகாரர், பொக்கிசக்காரர், வாயிற்காப்பார், நகரமாந்தர், படைத் தலைவர், குதிரைவீரர், யானைவீரர், ஜனப்பிரதிநிதிகளாகி, நாட்டார் நன்குமதிக்கும் அமைச்சர், உள்நாட்டு வெளி நாட்டு நடப்புகளை நன்கறிந்தும், நாள்கோள் அறிந் தும் 'இன்னகாரியம் இன்னகாலத்தில் தொடங்கலாம்' என்றறிவிக்கும் நிமித்திகர், நாட்டின் சுகாதாரத்தைப் போற்றும் மருத்துவர், மதசம்பந்தமான காரியங்களைக் கவனிக்கும் குருக்கள், ஜனங்களால் தேர்ந்தெடுக்கப் பெற்ற மகாசனங்கள் ஆகியோர். இவர்களே அரசன் துணைவர் ஆவர். இவர்களுடன் கலந்துகொண்டும், இன்னும் நாட்டிற் பெரிய புலவர், அறிவாளர் துணை கொண்டும் அரசன் முறையாக நாடாண்டான். மலை நாட்டுப் பேகனும், புறம்புநாட்டுப் பாரியும், கோயிலூர் காரியும், பொதிய மலை ஆயும், குதிரைமலை அதியமானும், கொல்லிமலை ஓரியும், மலைநாட்டு நள்ளியும் இவன் காலத்து வள்ளல்கள். இவ்வெழுவரும் ஒன்றுபட்டுக் கரிகால் வளவனை நேசித்தனர். இவர்கள் புலவருக்கு ஏராளமான பரிசிலளித்துக் கல்வி வளர்த்தனர். வளவன் ஏராளமான புலவர்களை வரவேற்று ஆதரித்தான். அவன் மாமனுன இரும்பிடர்த்தலையார் பெருந் தமிழ்ப் புலவர். அவரை எப்போதும் கரிகாலன் துணைக் கொண்டிருந்தான்; நாட்டில் கல்வி, கேள்வி, கலை, கவிதை ஆகிய இவை வளரத்தக்க அறிவுப் பணிகளைத் தக்கார் மூலம் செய்தான்; தனது வருமானத்தில் ஏராளமான பணத்தைக் கல்வி, கலை, தொழில் வளர்ச்சி களுக்கே செலவிட்டான். ஆண் பெண் ஆகிய இரு

பாலாரும் இவன் காலத்திற் கல்விகற்றுப் பெரும் புலமை பெற்றனர்.

கரிகாலன் சீர்காழித் தாலுக்காவிலுள்ள நாங்கூர் வேளாளர் குலத்திற் பெண்ணெடுத்தான். வேளாளரை இவன் மிகவும் ஆதரித்தான். இவனுக்கு, சேட் சென்னி, நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, மாவளத்தான் என்னும் ஆண் மக்களும், ஆதிமந்தியார் என்னும் பெண் ணும் உண்டு. ஆதிமந்தியார் கல்வி கேள்விகளில் தேர்ந்து, கடைச்சங்கம் வீற்றிருந்த பெண் புலவருள் ஒருவரானார்.

வெள்ளிவீதியார், வெண்ணிக் குயத்தியார், குற மகள் இளவெயினி, குறியெயினி, காக்கை பாடினியார், நச்செள்ளையார், மாசாத்தியார், எயிற்றியார், காமக் கணிப்பசலையார், பூங்கண் உருத்திரையார், பொன் மணியார், பாரிமகளிர், ஔவையார் ஆகிய இவர்களெல் லாம் இவன் காலத்தில் சங்கம் வீற்றிருந்த பெண் புலவர். இவர் பாடிய பாக்கள் கடைச்சங்க நூல்களில் உள்ளன. பாவலரையும், நாவலரையும், வற்றாப் பரிசில் வழங்கி எக்காலமும் ஆதரித்தான் வளவன். மாமூலர், பரணர், நக்கீரர், உருத்திரங்கண்ணனார், முடத்தாமக் கண்ணியார், கருங்குழலாதனார், கழாத்தலையார் முத லிய பாவலர் இவனது அறம், வீரம், வண்மை முதலிய அருந்தன்மைகளைப் பாடிப் புகழ்ந்தனர். புலவரை முகமலர்ந்து வரவேற்று, மனமறிந்து பொன்னும் மணியும் உதவி, தானே வழியனுப்பித் தேர்மிசை போக விடுவானும் கரிகாலன். முடத்தாமக்கண்ணி யார் கரிகாலன் மீது பொருநராற்றுப்படை பாடினார்.

உருத்திரங் கண்ணனார் பெருமாவளவன் வீரம், வண்மை, அரசியல், செங்கோன்மை அவனது தலை நகர்ச் சிறப்பு முதலியவற்றைப் புகழ்ந்து 'பட்டினப் பாலை' என்னும் அரிய நூலாக்கிப் பதினாறு நூறாயிரம் பொன் பரிசிலாகப் பெற்றார். இதனை,

> " தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன்
> பத்தோ டாறுநூ றாயி ரம்பெறப்
> பண்டு பட்டினப் பாலை கொண்டதும் "

எனவரும் கலிங்கத்துப் பரணியிற் காண்க. இந்தக் காலம் பிரமாதப்படும் நோபல் வெகுமதியைப் போன்ற எத்தனையோ மடங்கு பெரிய பரிசில்களை, நமது பழந்தமிழ் மன்னர் தக்க புலவருக்கு வரையாது கொடுத்தனர். தமிழும் கலையும் பரவப் பல்கலைக்கழகங் களும், புலவர் கூடித் தமது திறமைகளைக்காட்டப் பட்டி மண்டபங்களும் மூவேந்தர் நாடுகளிலும் ஏராளமா யிருந்தன. நானூறுக்கு மேற்பட்ட எண்ணுள்ள புல வர்மணிகள் மன்னர் வண்மையால் தமிழ் வளர்த்தனர். பத்துப்பாட்டு, நெடுந்தொகை நானூறு, குறுந்தொகை நானூறு, பரிபாடல், நற்றிணை நானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, கலித்தொகை, பதினெண் கீழ்க் கணக்கு, சிற்றிசை, பேரிசை, முத்தொள்ளாயிரம் முதலிய அரிய பெரிய நூல்கள் பல அக்காலத்தில் வெளி வந்து தமிழுக்குப் பொன்றாப் புகழளித்தன. இசை நூல்கள், கூத்த நூல்கள், நாடகத் தமிழ் நூல்கள் பல அக்காலத்தில் உலாவின.

பெருமாவளவன் சுத்த சமரசச் சைவன்; திருக் கச்சி ஏகம்ப வாணர் கோயிலைக்கட்டி வழிப்பட்டவன்.

“ கரிகாலனை நண்ணுவார் எழில்கொள் கச்சிநகர் ஏகம் பத்து அண்ணலார் ” என்று ஞானசம்பந்தர் திருமா வளவனைச் சிறப்பித்துப் பாடியிருக்கிறார். அசோகன் தனது மகள் சங்கமித்திரையையும், மகன் மகேந்துவை யும் பௌத்தமத பிரசாரத்திற்காகத் தென்னாட்டிற்கு அனுப்பினான். அக்காலம் முதல் இங்கும், இலங்கை யிலும் பௌத்த சமயம் நன்கு ஊன்றிக் கொண்டது: அதன் பின் வடக்கிருந்து ஜைனமுனிவர் வந்து இங்கே சமண மதத்தைப் பரப்பினர். கரிகாலன் அரசில் பௌத்தமடங்களும், சமணப்பள்ளிகளும் இடர் இன் றித் தழைத்தன. பிறருக்கு இடரின்றி, அவரவர் தத்தமது சமய நெறிபற்றி வாழ்வதைக் கரிகாலன் தடுத்திலன். புகாரில் மருவூர்ப் பாக்கத்தில் யவனர், சாவகர், சோனகர் முதலிய பிற நாட்டார் வந்து குடி யேறியிருந்தனர். அவர்களையும் வளவன் நன்கு மதித் தான். அந்தணர் தமது வேதக் கொள்கையைக் கடைப்பிடித்து நடக்க வேண்டிய ஆதரவீந்தான். ஒரு சோலையிலுள்ள பலவகைக் கனிமரங்கள்போலவே, பல வகுப்பினர் கரிகாலன் குடைக்கீழ் அமைதியாக வாழ்ந்தனர். போர் தொடங்கு முன்னர், அந்தணர், அறவோர், பெண்டிர், குழந்தைகள், முதியர், பிணியா ளர் இவர்களைப் பறையடித்துப் போகச் சொல்லிப் பிறகே அவன் பகைவரை எதிர்ப்பான். கரிகாலன் வேளாளர், அந்தணர், வீரர், வணிகர், கவிஞர் அனைவ ருக்கும் பாதுகாவலனாயிருந்து, நாட்டையும் மன்னுயி ரையும், அறத்தையும், அறிவையும் தொழில்களையும் வளமுறுத்தினான். அவன் குராப்பள்ளி யென்னும்

திருவிடைக்கழியில் இறுதி சேர்ந்தபோது, *"அறிந் தோன், மன்ற அறிவுடை யாளன், இறந்தோன்றானே யளிதிவ் வுலகம் (வீரப்போர், வேதநெறி யாவும் அறிந்தவன்; பலகலையறிவுடையவன்; அவன் இறந் தான். உலகம் இரங்கத்தக்கது)" என்று கருங்குழ லாதனார் பாடினார்.

உள்நாட்டிற் கல்வி, தொழில், விவசாயம் அனைத் தையும் வளர்த்த வளவன், கப்பல் வாணிபத்தால் நாடு செல்வச் செழிப்படையக் கருதி, அதற்கேற்ற துறை முகப்பட்டினம் காவிரிப்பூம்பட்டினமே என்றறிந்து, புகார் என்னும் அந்நகரை அளகாபுரிபோலப் புதிதாகக் கட்டியமைத்தான்.

## கால் ஆராய்ச்சி

குறிப்பு:—மூன்றாவது சங்ககாலம் கி.பி. இரண்டாம் நூற் றாண்டு என்பதே அறிஞர் முடிபு. அதுவே தமிழிலக்கியத்தின் பொற்காலம்; அது தமிழர் நாகரிகம் உச்ச நிலைபெற்று நாடெல் லாம் பரவியிருந்த காலமாகும். இலங்கை காயவாகு, சேரன் செங்குட்டுவன் காலம் கி. பி 125—180 என்று கே. ஜி. சேஷய்யர் "சேரமன்னர்" என்னும் தமது ஆங்கில நூலில் விளக்குவது பொருத்த மானதே. செங்குட்டுவன் ஐம்பத் தைந்து ஆண்டுகள் அரசாண்டான். காயவாகு வஞ்சிநகர் வந்த போது செங்குட்டுவனுக்கு ஐம்பது வயதென்பர். 'செங்குட்டு வன் தாயார் நற்சோணை, கரிகாலன் மகள் என்று கனக சபை சொல்லுவது பொருந்தாது. நற்சோணை கரிகாலன் கூடப் பிறந்தவளா யிருக்கலாம். திகழொளி ஞாயிற் றேழ்பரி நெடுந் தேர்ச் சோழன் மகள் நற்சோணை. இச்சோழன் கரிகாலன்

* புறநானூறு

தந்தையான இளஞ்சேட் சென்னிதானே என்பது ஆராயத் தக்கது. சிவராஜ பிள்ளை தமது 'Chronology of the tamils' என்ற நூல் 126-ம் பக்கத்தில், நற்சோணை கரிகாலன் கூடப்பிறந்தவள் என்றே குறிக்கிறார். பெருஞ்சேரலாதன் 58 ஆண்டுகள் ஆண்டதாகக் கருதுகின்றனர். சிலப்பதிகாரத்தில், எதிர்காலத் தன்மை யொருமையாக "அன்" ஈறு வழங்குகிறது. (மாறி வருவன்; யானறிருவன்) "நீர்" என்னும் முன்னிலை (அடிகள் நீரே, கூறுமினரே) பெரு வழக்காக வருகிறது. "நான்" என்னும் தன்மை (நான் கண்டீர்) ஏராளமாக வழங்குகிறது. சங்க நூல்களில் "அல்" ஈறே (தின்பல்) வழங்கும். "நீர்" என்பது அரிதாகவே முன்னிலையில் வரும். "யான்" எனும் தன்மையே வழங்கும். ஆதலால், சிலப்பதிகாரம் கடைச்சங்க காலத்திற்குப் பிறபட்டதென்று புலவர்மணி வையாபுரிப் பிள்ளை ஆராய்கிறார். காலம் எப்படியாயினும், நூலை நமக்குக் காப்பாற்றித் தந்த திருவருளை இறைஞ்சுவாம்.



# ரு. பூம் புகார்

"பூம்புகார் போற்றுதும்! பூம்புகார் போற்றுதும்!"

கம்பர் அயோத்தி நகரைப் "போகக்கனியொன்று பழுத்தது போலும்" என்றார். "நாகலோகமும், தேவலோகமும் போன்ற போகமும், நீண்ட புகழும் நிலைபெற்ற புகார்" என்றார் இளங்கோவடிகள். * போதியமும், இமயமும், புகாரும் ஒன்றென்றார் அடிகள். எப்படி? பொதியமும் இமயமும் நடுங்குவதில்லை, ஒடுங்குவதில்லை, நிலை பெயர்வதில்லை. அதுபோலவே பூம்புகாரும் என்பர் கல்வி கேள்விகளில் தேர்ச்சி பெற்று உண்மையை முற்றும் உணர்ந்த மேலோர். திருமாவளவன் குடைக்கீழ், புகாரின் பழங்குடி மக்கள், கல்வி, கேள்வி, அறம், அன்பு, தொழில், வாணிபம், சீர், செல்வம் அனைத்திலும் சிறந்தோங்கினர். 'ஊர் பிடிக்கவில்லை, அரசு பிடிக்கவில்லை' யென்று யாரும் மன வெறுப்புடன் வலசை போவதில்லை. மேற்சொன்ன மலைகளைப் போல இவ்வூர்ப் பழங்குடிகள் நிலை பெற்று வாழ்கின்றனர். புறப்பகைவரால் ஊருக்கு நடுக்கம் இல்லை. அவ்வூரார் பகைவரை வென்று புறங்கண்ட வீர மன்னன்கீழ் வாழும் வீரத்தமிழர். அவ்வூர்ப் பழங்குடி மக்கள் அறிவிலும், பலத்திலும், வளத்திலும் ஒடுங்குவதில்லை. ஏனெனில் நாட்டில் வறுமை, மடமை, அடிமைப் பிணிகள் இல்லை. அறிவும், ஆற்றலும், தொழிலும், செல்வமும், ஆண்மையும் செழித் தோங்கினர் செம்பி

* மங்கள வாழ்த்துப் பாடல்.

யன் குடிகள். பொதியம் தமிழ் முனிவரின் தவநிலயம். இமயம் தமிழ்த் தந்தையான சிவபிரானின் அருள் நிலயம். புகார் நகரம் தமிழ்ச்செல்வத்திற்கும், திருவருட் செல்வத்திற்கும் நிலயமாக விளங்கியது. இவ்வாறு தனக்குரிய தனிச்சிறப்புற்ற புகார், நாகலோகம்போலப் போகத்திலும், தேவலோகம்போல வற்றாப் புகழிலும், அருட் செல்வத்திலும் சிறந்தோங்கியது.

* * * *

* இடமகன்ற புவி மடந்தைக்கு அலைநீர் ஆடை ; மலை திருமுலை ; அதனின்றெழும் ஆறு ஆரம் ; மேகம் கூந்தல் ; அவள் மேல் மூடிய இருட் போர்வையைக் கதிர்க்கரம் பரப்பி நீக்கி, உதயகிரியில் தோன்றுகிறான் உலகம் விளங்க ஒளிரும் இரவி. அப்போது பூம்புகார் தேவலோகம்போல் நம்முன் விளங்குகின்றது.

காவிரி கடலுடன் கலக்கும் சங்கமுகத்தில் உள்ளது புகார். பாண்டி நாட்டிற்குக் கொற்கைபோலச் சோழ நாட்டிற்குப் புகார் சிறந்த துறைமுகப்பட்டினமாம். தற்போது பம்பாய் கராச்சி முதலிய துறைமுகங்களைப் போலவே, முற்காலம் காவிரிப்பூம் பட்டினம் என்னும் புகார், பாரதநாட்டிற் சிறந்த துறைமுகங்களில் ஒன்றாக விளங்கியது. இத்துறைமுகத்தில் இறக்குமதியான பொருளும், ஏற்றுமதிக்கான பொருளும் புலிமுத்திரையிடப்பட்டு, மூட்டை மூட்டையாகப் போரேறி நின்றதைப் பட்டினப்பாலை விளக்குகிறது :—

"மாரிபெய்யும் பருவம்போல
நீரின்று நிலத்தேற்றவும்,

---

* இந்திர விழவூரெடுத்த காதை.

நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்,
அளந்தறியாப் பலபண்டம்,
வரம்பறியாமை வந்தீண்டி,
அருங்கடிப் பெருங்காப்பின்,
வலியுடை வல்லணங்கினோன்,
புலிபொறித்துப் புறம்போக்கி
மதிநிறைந்த மலிபண்டம்,
பொதிமூடைப் போரேறி......"

*இங்குக் குதிரைகள் வந்து இறங்குகின்றன ("நீரின் வந்த நிமிர் பரிப் புரவி"). யவன சோனக வணிகர் நமது நாட்டுச் சரக்குகளை வாங்கிச் செல்லக் கப்பல் கொண்டுவந்து நிற்கின்றனர். நமது நாட்டில் விளையும் மிளகு, அகில், துகில், உணவுப் பொருட்கள், கரும்பு, தானிய வகைகள், முத்து, மணி, பவளம் முதலியவை ஏராளமாக ஏற்றுமதியாகின்றன.*

* * * *

*இத்தகைய வாணிபச் செல்வத்தால், புகார் செழிப்புற்று விளங்குகிறது. அதன்கண் "குழல் அகவ, யாழ் முரல, முழவதிர, முரசியம்ப" நாளெல்லாம் திருநாளாயிருக்கின்றன.* மருவூர்ப் பாக்கம், பட்டினப் பாக்கம் *என்று இரண்டு பிரிவாயிருக்கிறது புகார். இரண்டிற்கும்* இடையேயுள்ள பொது நிலம் *மரமடர்ந்திருக்கிறது. அங்கே நாளங்காடிகள் (பகற்கடைகள்) கூடும்.*

*மருவூர்ப் பாக்கத்தை நோக்குவோம்: அங்கு நிலா முற்றங்கள், பெரிய பண்டகசாலைகள், மான் விழி போன்ற சாளரங்களைக் கொண்ட மாளிகைகள் ஆகியவற்றைக் காண்கிறோம். காவிரியின் சங்கமுகத்தினருகே யவனர் வசிக்கின்றனர். அவர் வாணிபத்தில் நல்ல லாபம்*

பெறுகின்றனர். கண்டார் கண்களைக் கவர்கின்றனர். கடற்கரையில், கப்பல் வாணிபத்தாற் செல்வந் தேடத் தமது சொந்த நாட்டை விட்டுவந்து, பரதேசத்துக் கடலோடிகள் கலந்து வசிக்கின்றனர். சாந்து, கந்தப் பொடி, குளிர்ந்த வாசனைச் சந்தனம், விடுபூ, தொடுபூ, கட்டுப்பூ, நேர்கட்டி, செந்தேன், கிரியாசம், பச்சிலை, கற்பூரம், அகில் முதலிய நறும்புகைச் சரக்குகள், இன்னும் பிற வாசனைச் சாமான்கள் இவற்றை விற்பவர் நகர வீதிகளில் திரிகின்றனர். பட்டு, *கம்பிளி, பருத்தி இவற்றைச் சேர்த்துப் பல நுண்ணிய தொழில்களைச் செய்யும் நெய்வோர் இருக்கைகள் ஒரு தெருவிற் காண்கின்றன. மாசில்லாத முத்து, மணி, பொன், அருங்கலச் செல்வம் ஆகிய அளந்து கரைகாணு வளங்கள் கலந்து குவிந்து கிடக்கும் அகன்ற தெருக்கள் காண்கின்றன. இவ்வாறு வகை வகையாகத் தெரியும் பண்டங்களுடன், நெல், புல், வரகு, தினை, சாமை, இறுங்கு, துவரை, இராகி, எள்ளு, கொள்ளு, பயறு, உழுந்து, அவரை, துவரை, கடலை, மொச்சை, மூங்கில் நெல், காராமணியாகிய பதினெட்டு வகைக் கூலங்களும் குவிந்து விற்கப்படும் கூலவீதிகள் காண்கின்றன. பிட்டு வாணியர், அப்பஞ் சுடுவார்,

---

* "பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்
கட்டு நுண்வினைக் காருகர் இருக்கையும்"

இதில் 'மயிர்' என்பதை 'எலி மயிர்' என்பர். ஆட்டுமயிர் என்று கொண்டு நம் நாட்டில் காச்மீரம் போலக் கம்பளிகளும் சால்வைகளும் நெய்தார்கள் என்பதும் பொருத்தமாகும். "கட்டுநுண் வினை" என்பதைப் பாவு விரித்துத் தறியிற்கட்டி நுட்ப வேலைப்பாடுகளுடன் நெய்யும் நெசவு என்க.

உப்பு வாணிகர், வெற்றிலை கட்டுவோர், ஏலம் இலவங்கம் சாதிக்காய் கர்ப்பூரம் தக்கோலம் ஆகிய பஞ்ச வாசங்களை விற்கும் வாசவர், ஒருபுறம் காண்கின்றனர்.

பதநீர் (கள்) விற்கும் பெண்டிர், மீன் விற்கும் பரதவர், ஆட்டு வாணியர், ஆகியோர் செறிந்த புலாற் கடைகள் ஒரு புறங் காண்கின்றன. ஒருபுறம் எண்ணெய் வணிகர் காண்கின்றனர். மற்றொருபுறம் வெண் கலக் கன்னாரும், செம்புக் கொட்டிகளும் மரத்தை வெட்டிப் பல சாமான்கள் செய்யுந் தச்சரும், வலிய கைகளையுடைய கொல்லரும், சைத்திரிகரும், சிற்பாசாரியரும், மண்ணினாற் பல சாமான்கள் பண்ணும் குயவரும், பொன்னணிசெய்யும் உருக்குத் தட்டாரும், முத்து மணி இரத்தினங்களால் ஆபரணங்கள் செய்யும் இரத்தினசாரியரும், தையற்காரரும், கம்மியரும், செம்மாரும் (சக்கிலியர்), சீரை, கெட்டி இவற்றால் மலர் மாலை, பொம்மை முதலிய மாசற்ற தொழில்கள் பல பெருக்கி வாழ்வோரும், ஒரு புறம் காண்கின்றனர். குழல், யாழ் முதலிய இசைக்கருவிகளில், குரல், துத்தம், கைக்கிளை, உழை, விளரி, தாரம் (சரிகமபதநி) ஆகிய ஏழிசைகளையும் வழுவின்றி, சுத்தமாக இசைக்க வழி காட்டுந் திறமைவாய்ந்த அரிய பெரிய குழலர், பாணர், ஆகிய இசைப் புலவர் ஒரு தெருவில் வசிக்கின்றனர். இன்னும் சிறுசிறு தொழில்களைச் செய்து பிழைக்கும் பல தொழிலாளர் மாசற்ற மருவூர்ப் பாக்கத்தில் வசிக்கின்றனர்.

* * *

இனிப் பட்டினப் பாக்கத்திற்குச் செல்வாம்: அங்கே நாம் காணும் இடங்களாவன: இராஜ வீதி, கொடித்

தேரோடும் வீதிகள், பெரிய கடைத்தெருக்கள், பெருங் குடி மக்களாகிய தனவணிகரின் மாடமாளிகைகள் விளங்குந் தெருக்கள், அந்தணர் வசிக்கும் இடம்; நாட்டார் நலத்தை விரும்பிப் பயிர்த்தொழில் செய்யும் உழவர், ஆயுள் வேதர் (மருத்துவர்) காலக்கணிதர், சோதிடர் முதலியோர் தத்தந் தொழிலுக்கேற்ற முறையில் இருக்கும் இடங்கள்; முத்துக்கோப் போரும், வேகடிகளும், மணிமாசு நீக்குவோரும், தமக் குச் சிறப்பான கோட்பாட்டின்படி வளையறுப்போரும் இருக்கும் பெரிய தெரு; அரசர் முன்னிலை நின்று துதிக்கும் சூதர், இருந்து துதிக்கும் மாகதர், அரசர் புகழைப்பாடும் வைதாளிகர், நாழிகை சொல்லும் கடிகையார், பிறர் மனமகிழ வேடம்புனைந்தாடி நலம் பெறும் சாந்திக்கூத்தர், மதங்கர், களத்தாடுங் கூத்தியர், அகக்கூத்தாடும் கணிகையர், பரிசங் கொள்ளும் விலை மாதர், குற்றேவல் செய்யும் ஏவற்பெண்கள், தோற் கருவி, நரம்புக் கருவி, துளைக்கருவி, உருக்குக்கருவி முதலியவற்றை வாசிக்கும் குயிலுவர், போர்ப்படைக் கும், திருவிழாக்களுக்கும் பலவகைப் பறைகொட்டுவார், விகட கவிகள் (நகைவேழம்பர்) முதலியோர், தத்தம் இனத்தின் வகை தெரியும்படி இருக்கும் இடங்கள்; குதிரைப் பாகர், யானைப் பாகர், தேர்ப்பாகர், கடுங் கண் மறவர் ஆகிய இவர்கள், அரண்மனைப் புறத்தைச் சுற்றியிருக்கும் இடங்கள்; இவ்வாறு பெருமை யோங் கிப் பெரியோர் நிரம்பிப் பாடல் பெற்றுச் சிறந்தது பட்டினப்பாக்கம்.

* * * *

இந்த இரண்டு பாக்கங்களுக்கும் நடுவேயுள்ளது இடை நிலம். இரண்டு வேந்தரின் பாசறைகளுக்கு

இடையேயுள்ள களத்தில் போரொலி கேட்பது போல மருதூர்ப் பாக்கத்திற்கும் பட்டினப் பாக்கத்திற்கும் இடையேயுள்ள இந்த இடைநிலத்தில், நாள் அங்காடிகளின் ஒலிகள் கேட்கும். இந்நிலம் மரங்கள் அடர்ந்த சோலை. வியாபாரிகள், அம்மரங்களையே கால்களாகக் கொண்டு, ஒழுங்காகக் கடைகள் கட்டியிருக்கிறார்கள். இச்சோலையில், விற்போர் ஓசையும், வாங்குவோர் ஓசையும் ஓயாது கேட்கும்.

இந்த நாளங்காடியில், ஒரு பூதத்தின் பலிபீடம் உள்ளது. அப்பூதம், வெற்றிவேல் மன்னனான முசுகுந்தனுக்கு வந்த இடர்களை நீக்க, இந்திரனால் அனுப்பப் பெற்று, அந்நாள் முதல் இந்நகரைக் காத்து நிற்கிறது. சித்ரா பௌர்ணிமையன்று மறக்குலப் பெண்கள், அழகான (காமர்) கோலத்துடனே, அப்பூதத்தின் பலிபீடத்தில் பூக்கள் தூவி, அவரை, துவரை, எள்ளுருண்டை, நிணச்சோறு இவற்றைப் படைத்துப் பொங்கலிட்டு, நறும்புகை காட்டி, நாணமில்லாதவர் போலச் சிங்கியடித்து, கைகோத்துக் குரவைக் கூத்தாடி (ஆவேசம் நடித்து) "எமது மன்னன் ஆளும் நிலமடங்கலும், பசி, பிணி, பகை நீங்கி மழையும் வளமையும் சுரந்து செழித்து வாழ்க!" என்னும் ஓசையதிரும். 'இவ்வாறு இப் பலிபீடத்தில் வழிபடுவோர் மிக்க வலியுடையவராவர்' என்று முசுகுந்தன் நியமித்தான். மருவூரில் உள்ள மறவலி வீரரும், பட்டினத்திலுள்ள படை வீரரும் "மன்னனுக்கு உற்ற தீங்குகளை நீக்குவாயாக" என்று பலிக்கொடை புரிந்து பூதத்தை வணங்குவர். இவ்வீரர், வேலும், கவணுங்கொண்டு

போர்க் களத்திற் பகைவரை வென்று, தாம் அறுத்த தலைகளைக் கொணர்வர். (அத்தலைகள், கண் சிவந்து கடுநோக்குடன், பார்க்கப் பயங்கரமாயிருக்கும்); நலத்தைத்தரும் அந்தப் பலி பீடத்தில் தமக்கும் அரசிற்கும் சேமமுண்டாகும்படி அத் தலைகளை வைப்பார். புலியைக் கொன்ற ஏற்றின் தோல் போர்த்த மயிர்க்கண் முரசத்தை இடிமுழக்கம் போல் ஆர்த்து "உயிர்ப் பலி தந்தோம் கொள்க!" என்று கூவுவர்.

இனித் திருமாவளவன் அரண்மனையை நோக்குவாம். முற்காலத்துத் தமிழர் வாழ்வை நினைத்தால் அலிக்கும் ஆண்மைக்கனலேறும்; கோழைக்கும் வீரச் சிலிர்ப்புறும். திருமாவளவன் செருவெங் காதலன்; போர் புரிந்து பகைவரை வென்று, நாடெல்லாந் தமிழ்க் கொடியை நடுவதற்குக் காதல் வெறியேறியவன்! அவன் பக்கத்திலுள்ள இருநிலங்களான சேரபாண்டியர் நாடுகளை வெற்றி கொண்டான்; அதன்பின் தன்னுடன் பொர யாரும் வராததால்,போர்த்தினவெடுத்து, நாள் பார்த்து, வாளெடுத்துக் குடையுயர்த்தி, மயிர்க்கண் முரசடித்து, "இறைவனே இன்று நான் வடதிசை நோக்கிப் படை நடத்துகிறேன். வடநாட்டிலாயினும் எனது வலிய தோட்கள் பகைவரைப் பெறுக!" என்று வணங்கிச் சென்றான். அசையாத ஊக்கத்துடன் போர் நசை கொண்டு, கரிகாலன் வடக்கே படை நடத்தினான். யாரும் அவனை எதிர்க்கவில்லை. இமயமலை வரையிலும் சென்றான். அதற்குமேற் செல்லமுடியாமல், 'இப் பயங்கரமான இமயமலை பகையாக நின்று தடுப்பதா' என்று முனிந்து, அம்மலையின்

பிடரில் தனது புலிக்கொடியைப் பொறித்தான். 'தன்னுடன் பொர வடநாட்டிற் பகைவர் இல்லையே' என்றேங்கித் திரும்பும்போது, சோணை நதிக்கரையிலுள்ள வச்சிர நாட்டரசன், இத்தமிழ் மன்னனுக்குத் தனது முத்துப் பந்தலைத் திறையாகக் கொடுத்தான். வாட்போரிற் சிறந்த மகத மன்னன், போரில் தோற்று, தனது அருமையான பட்டிமண்டபத்தைத் திறையாகத் தந்தான். அவந்தி வேந்தன் நீண்டோங்கிய தனது தோரணவாயிலை உவந்தளித்தான். பொன்னாலும் மணியாலும் புனையப்பெற்ற இவை மூன்றும், மேற்சொன்ன மன்னரின் முன்னோர் செய்த உதவிக்காகத் தெய்வத் தச்சனை மயனால் செய்துகொடுக்கப் பெற்றவையாம். இம் முத்துப் பந்தலும், பட்டி மண்டபமும், தோரணவாயிலும், திருமாவளவன் அரண்மனையைக் கவினுறுத்தின. இக்கருத்தைக் குறிக்கும் கீழ்வரும் அடிகள் தமிழன் இரத்தத்தில் ஊறுக :—

"இருநில மருங்கிற் பொருநரைப் பெறாஅச்
செருவெங் காதலிற் றிருமா வளவன்,
வாளும், குடையும், மயிர்க்கண் முரசும்,
'நாளொடு பெயர்த்து, நண்ணார்ப் பெறுக இம்
மண்ணக மருங்கின் என் வலிகெழு தோள்'எனப்
புண்ணிய திசைமுகம் போகிய அந்நாள்,
அசைவி லூக்கத்து *நசைபிறக் கொழியப்
'பகைவிலக் கியதிப் பயங்கெழு மலை'யென
இமையவர் உறையும் சிமையப் பிடர்த்தலைக்
கொடுவரி யொற்றிக் கொள்கையிற் பெயர்வோற்கு,

---

* போர் வெல்வதன்றி வேறு விருப்பின்றி.

மாநீர் வேலி வச்சிரநன் னாட்டுக்
கோன் இறை கொடுத்த கொற்றப் பந்தரும்,
மகதநன் னாட்டு வாள்வாய் வேந்தன்,
பகைபுறத்துக் கொடுத்த பட்டிமண் டபமும்,
அவந்தி வேந்தன் உவந்தனன் கொடுத்த
நிவந்தோங்கு மரபிற் றோரண வாயிலும்,
பொன்னினு மணியினும் புனைந்தன வாயினும்
நுண்வினைக் கம்மியர் காணா மரபின..."

* * *

*பட்டினப் பாக்கத்தில் ஐந்து அற்புத மன்றங்கள் காண்கின்றன. முதலில் ஒரு வெள்ளிடை மன்றம் காண்கிறது. அதில் சரக்கு மூட்டைகள் குவிந்திருக்கின்றன. அம் மூட்டைகளில் 'இன்னார் சரக்கு' என்று முத்திரை யிடப்பட்டிருக்கிறது. உள்ளூரார் பெயர் தவிர, அயலூரார் பெயர்களும் அம் மூட்டையிற் காண்கின்றன. மூட்டைக் குரியவர் தத்தமது சரக்குகளை எடுத்துச் செல்வர். காவலின் தேவைகூட இல்லாமல், சரக்குகள் ஒழுங்காக உரியாருக்குச் சேருகின்றன. யாராயினும் கள்வர் ஒரு மூட்டை திருடினால், அவர் அம்மூட்டையைத் தந் தலையில் வைத்துக் கொண்டு சுழன்று திரிவதன்றி, எங்குங் கொண்டுபோக முடியாது. அந்த வெள்ளிடை மன்றத்தை நினைத்தாலே கள்வர் நடுங்குவர். புகாரில் கள்வர் இல்லை; பிறவூர்களில் இருந்து வந்தால்தான் உண்டு. அவ்வாறு கள்வர் வருவதில்லை, காவலன் ஆட்சி அத்தகையது.*

*அப்பால் ஒரு இலஞ்சி மண்டபம் உள்ளது. 'இலஞ்சி' யென்றால் மடு, பொய்கை யென்று பொரு*

ளாம். கூன், குறள், ஊமை, செவிடு, தொழுநோயர் ஆகியோர் அப்பொய்கையில் முழுகி வலஞ்செய்தால், குறைகளெல்லாம் நீங்கி, உடல் நல்ல நிறம் பெற்று அழகுறுவர்.

அப்பால், ஒரு மண்டபம் உள்ளது. அதில் ஒளி வீசும் நெடிய கல் நடப்பெற்றுள்ளது. வஞ்சர் மருந்து வைத்துப் பித்தானோர், நஞ்சுண்டு உடல் நடுங்கித் துன்புறுவோர், பல்லழுந்தக் கொடிய பாம்பு பிடுங்கப் பெற்றவர், பிதுங்கிய கண்களையுடைய பேய் பிடித்துக் கடுந்துயர்ப்படுவோர் - இவரனைவரும், அந்த ஒள்ளிய கல்லைச் சுற்றிவந்து தொழுதால் இடர் நீங்கி யின்புறுவர்.

அதன் பிறகு பூதச் சதுக்கம் உள்ளது; அதில் ஒரு பூதம் உண்டு. "தவவேடம் பூண்டு அதற்குரிய தன்மையில்லாது பிறரை ஏமாற்றும் போலித் துறவிகள், போலி மினுக்குகளால் தம்மை மறைத்துக் கொண்டு அவஞ்செய்யும் விபசாரிகள், செங்கோன் மன்னனுக்கு எதிராகச் சதிசெய்யும் அமைச்சர், பிறர்மனை நயப்போர், பொய்ச்சாட்சி சொல்வோர், புறங்கூறுவோர், இவர், இதோ என் கையில் உள்ள பாசத்திற்படுவர்" என அவ்வூரெல்லையினின்று நாலு காதம் கேட்கும்படி, கடுங்குரலெடுத்துக் கூவும் அப்பூதம். தனது பாசத்தில் அகப்பட்ட மேற்சொன்ன பாவிகளை அது புடைத் துண்ணும். அதாவது, அந்த வூர் நாற்காத எல்லைக்குள் போலித் துறவு, விபசாரம், பிறர்மனை நயத்தல், ராஜத்துரோகம் பொய்ச்சாட்சி, புறங்கூற்று முதலிய குற்றங்கள் நுழையா. அவ்வாறு குற்றஞ் செய்தவர் கடுமையான

தண்டனைக் குள்ளாவர். அத்தகைய குற்றங்களை யாரும் துணிந்து செய்யமாட்டார் என்றவாறு.

அப்பால் ஒரு பாவை மண்டபம் காண்கின்றது. அங்கொரு பாவை யுள்ளது. அரசன் செங்கோல் கோடினாலும், அறங்கூறும் அவையில் (நீதிமன்றத்தில்) தரும சாத்திரத்திற்கு விரோதமாக, ஓரகமான நீதி சொன்னாலும், 'நீதி கோடியதே' என்று அப்பாவை நாவினாற் சொல்லாமல் நவை நீர் உகுத்து அழுமாம்.

இதனை,

> அரைசுகோல் கோடினும், அறங்கூ றவையத்து
> உரைநூல் கோடி யொருதிறம் பற்றினும்,
> நாவோடு நவிலாது, நவைநீர் உகுத்துப்
> பாவை நின்றழூஉம் பாவை மன்றமும்.

எனவரும் சிலப்பதிகார அடிகளான் கண்டு தெளிக.

அதாவது, நமது தமிழ் மன்னரின் அறமன்றத்தார், அறக்கோட்பாடுகளை நாவன்மையால் திரித்தும் மிகுத்தும் கூறாது, எள்ளளவும் ஓரகமில்லாது, நேர்மையான நீதி கூறுவர். கல்வி கேள்வி அறிவாற்றல்களில் மிக்க அறச்சபையார் தப்பித் தவறி அறங்கோடினால், அங்குள்ள கற்பாவைகூடக் கண்ணீர் விட்டழும். அக்காலத்தில் அறவழியினின்று, அணுவும் பிசகாத நீதி வழங்கியது என்றவாறு.

மரகத மணியும் வைரமும் பவளத்திரளும் பதித்த மன்னன் மாளிகை, அவனது வெற்றிப் புகழைப்போல வானளாவ ஓங்கி நிற்கிறது. இவ்வூரில் சிவன்கோயில், முருகன்கோயில், பல தேவர்கோயில், விஷ்ணுகோயில், இந்திரன் கோயில், அருகர் பள்ளி, புத்தர்பள்ளி முத

லிய புண்ணிய நிலயங்கள் முரணின்றித் தழைத்தோங்கும். இவற்றிலெல்லாம் மாந்தர் அவரவர் கொள்கைக்கேற்ற அறநூல்களைப் படிப்பர்.

காவிரிப்பூம் பட்டினம், அக்காலத்தமிழர் நகரமைப்பிற்கு ஓர் எடுத்துக்காட்டாகும். இக்காலச் சிற்பிகளும் வியக்கும்படியா யிருக்கிறது இந்நகரமைப்பு. ஒரு சமுதாயத்திற்கு இன்றியமையாத தொழில்களை முறை வகுத்து, அந்தந்தத் தொழின்முறைக் கேற்றபடி மக்களையும் அவர் இருக்கும் தெருக்களையும் அணிவகுத்து, கோயிற்பூசை முதல், வெற்றிலைக் கடை வரையில், ஒரு ஒழுங்குபற்றி அமைதியாக நடக்கச் செய்த செங்கோலாட்சியின் திறமையை எவ்வாறு புகழ்வோம்! சமயம், கல்வி, கலை, தொழில், வீரம், வாணிபம், பயிர் எல்லாம் செழித்தோங்கின; பண்டைத் தமிழகத்தில், பொது மக்களுக்குவேண்டிய ஏற்பாடுகளெல்லாம் ஒரு புறம் நன்கு முறை வகுக்கப்பெற்று நடந்தன; அரசனுக்கும், அரசியலுக்கும் வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் இன்னொரு புறம் ஓங்கின. இவ்வாறு "அறனொடு புணர்ந்த, திறனறி செங்கோல்" செழித்த இப்பூம்புகாரின் செல்வத் திரு விளங்கும் தனவணிகர் தெருவிற்குச் செல்வோம்:



# ௬. கண்ணகி திருமணம்

“ அங்க ணுலகில் அருந்ததி யன்னளை
மங்கல நல்லமளி யேற்றினர் ”

காவிரிப்பூம் பட்டினம் வணிகர் செழித்த மாநகராகும். பரதர், கடலோடிகள், மன்னர் பின்னவர், இளங்கோக்கள், தருமக் கிழவர், ஆள்காவலர், உழவர், வணிகர், முத்தொழிலாளர், செட்டியார், சிரேட்டிகள் என்று வைசியர் பெயர் பெறுவர். இவர், கலத்தினும் காலினும் (கால்=வண்டி) பெரும் பொருளீட்டுவர். இவர், புகழ் சிறந்த அரசனும் விரும்பும் திருவினர். இவர் வாணிபத்தை வளர்க்கப் பரதேச வர்த்தகர் பலர் புகாரில் வந்து ஈண்டியிருந்தனர். இதனை,

“ நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்*கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும், பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும், குணகடல் †துகிரும்
கங்கை ‡வாரியும், காவிரிப் பயனும்
ஈழத் துணவும், §காழகத் தாக்கமும்,
அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி ”

எனவரும் பட்டினப்பாலைச் செய்யுளிற் காண்க.

---

* கறி=மிளகு. † துகிர்=பவளம்.
‡ வாரி=பொருள். § காழகம்=பர்மா.

"கொள்வதும் மிகைகொளாது, கொடுப்பதும் குறை கொடாது, பல்பண்டம் பகர்ந்து வீசுவர்" இவ்வூர் வணிகர். இவர்களால், இவ்வூர், ஆர்கலியுலகம் அனைத்தும் வந்தாலும் வேண்டிய அரும்பொருளை வழங்கத்தக்க வளஞ் சிறந்தது. இவ்வூரைப் போக பூமிபோல இன்புறச் செய்தவர் இரண்டு தனவணிகர் : ஒருவன் பெயர் மாநாய்கன்; மற்றொருவன் பெயர் மாசாத்துவான். "நாய்கன்" என்றால் செட்டியார். 'மாநாய்கன்' என்றால் பெரிய செட்டியார். 'சாத்து' என்றால் வணிகக்கூட்டம். 'மாசாத்துவான்' என்றால் வணிகர் கூட்டத் தலைவன். இருவரும் அரசன் அன்பை நிறைவாகப் பெற்றவர். பொருளை ஏராளமாக ஈட்டி, ஏராளமாக ஈந்து, குபேரனும் கர்ணனும் ஒருங்கே சேர்ந்ததுபோல இவர் வாழ்ந்தனர்.

மாநாய்கன் 'ஈகையில் வான்மேகம்' எனப் புகழ் பெற்றவன். அவனது குலக்கொம்பே நமது கதாநாயகியான கண்ணகி. பன்னிரண்டு வயதுள்ள கண்ணகி, பொன்னொளிர் மின்னலைப்போலப் பொலிவுற்றிருந்தாள். மலர்மகள் போன்ற சிறந்த வடிவழகி கண்ணகி. 'மாசற்ற அருந்ததி-கற்பை யொத்தது இவளது கற்புத் திறம்' என்று பிறமாதர் தொழுதேத்தும் பெருங்குணச் செல்வி கண்ணகி.

"போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்
தீதிலா*வடமீன் திறமிவள் திறமென்றும்,
மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள் ; பெயர் மன்னும் கண்ணகியென்பாள்மாதோ"

* அருந்ததி.

மாசாத்துவான் பெருநில முழுதும் ஆளும், திருமாவளவனைத் தலைமையாக வைத்துப் போற்றும் ஒப்பற்ற குடிகளுடன் உயர்ந்தோங்கும் செல்வச் சீமானாயிருந்தான். கப்பல் வாணிபத்தாலும், தரைவாணிபத்தாலும், அவன் பெருநிதி யீட்டினான். அதைக்கொண்டு இல்லாதார்க்கு நல்லுதவி செய்தான் இத்தருமவான். இவ்வாறு ஈட்டலும் ஈதலுமே தனது அறமாகக் கொண்ட இந்த இருநிதிக் கிழவன் மகனே நமது கதாநாயகனான பதினாறு வயதுள்ள * கோவலன். கோவலன், அறிவு, அழகு, தொழில், செல்வம், அனைத்திலும் சிறந்து, உலகமும் சிறிதென ஓங்கும் புகழ் பெற்றான். பண்ணினும் இனிய தீஞ்சொற் பாவையர், இவனைக் கண்டு வியந்து, 'இவ்வழகனே செவ்வேள்' என்று தமது ஆயத்திற் பாராட்டிப் போற்றுவர். (ஆயம்=தோழியர் கூட்டம்)

"மண் தேய்த்த புகழினான், மதிமுக மடவார் தம்
பண்தேய்த்த மொழியினார் ஆயத்துப் பாராட்டிக்
'கண்டேத்துஞ் செவ்வேள்' என்று, இசைபோக்கிக்காதலாற்
கொண்டேத்துங் கிழமையான் கோவலனென்பான்மாதோ"

இத்தகைய இனிய தன்மையும், தகைமையும் பெற்ற கோவலனைக் கண்டு கண்ணகி காதலித்தாள். இருவர் கண்ணும் கருத்தும் கூடின. பெருங்குணக் காதலியாகிய கண்ணகி, செவ்வேள் போன்ற கோவலனை மனத்துட் கொண்டேத்தினாள். இருவர் காதலையும் பெற்றோர் அறிந்தனர். இரு தனவணிகப் பெரியாரும் ஒரு நன்னாளைக் குறித்து, அன்று தமது அருமை மக்களது திருமணக் காட்சியைக் காண விரும்பினர்.

* கோபாலன்.

முரசுகள் இயம்பின; முருடுகள் (மத்தளங்கள்) அதிர்ந்தன; சங்குகள் முழங்கின; அரசன் பவனி யெழுந்ததுபோல வெண்குடைகள் எழுந்தன; பெண்கள் யானைமேல் ஏறி ஊரில் உள்ளவருக்குத் திருமணச் செய்தியை அறிவித்தனர். ஊரில் *மங்கல அணி யெழுந்தது.

மாலை தாங்கிய வைரமணித்தூண் மண்டபத்தில், நீல விதானங் கட்டிய அழகான முத்துப் பந்தலின் கீழ், வதுவரர் அமர்ந்தனர். அப்போது, சந்திரன் ரோகிணியைச் சேருந் தருணம். அதாவது, ரோகிணி நட்சத்திரம். அனுபவத்தில் முதிர்ந்த அந்தணர் வேத வழிகாட்டிச் சடங்கை நடத்தினர். அருந்ததி போன்ற கற்பரசியான கண்ணகியும், கோவலனும் தீயை வலஞ் செய்த காட்சியைக் கண்டவர் முற்பவத்தில் என்ன நோன்பாற்றினரோ! திருமணங் காண வந்தோர் வாசமும், மலரும் கொண்ட மேனியராய், தம்பதிகளை ஒசிந்து நோக்கி, புகழ்ந்துரைத்து, மங்கலம் பாடினர். முகிழ்த்த முறுவலும், ஏந்திளமுலையும், விரிமலர்க் கூந்த

---

* மாங்கல்ய சூத்திரம் யானைமேல் ஏற்றி ஊர்வலஞ் செய்யப்பெற்றது என்பார் அரும்பதவுரையார். "மங்கல அணி யெழுந்தது" என்றால் 'ஊரெங்கும் மங்கல விழா அணி யெழுந்தது' என்பார் அடியார்க்கு நல்லார். இதைக் கொண்டு சிலப்பதிகாரக் காலத்தில் தமிழர் திருமணத்தில் தாலிகட்டும் வழக்கமில்லை யென்று கொள்வாருமுண்டு. திருமணச் சடங்கு கூறுமிடத்திலாயினும், பிற்காலம், மதுரையை எரியூட்டி வளையை உடைத்தெறிந்து கண்ணகி செல்லும்போதாயினும், தாலியைப்பற்றியே பேச்சில்லை யாதலால் மேற்சொன்ன உண்மை கொள்ளத்தக்கது என்பர்.

னும் கொண்ட மலர்க்கொடி போன்ற அழகிய மாதர், சாந்து, நறும்புகை, மாலை,சுண்ணம், விளக்கு, நன்கலம் முளை கிளம்பிய பாலிகை, நிறைகுடம் ஆகிய மங்கலங் களை யேந்தினர்; "மணமகள் கண்ணகி, தனது காவ லனை எக்காலும் பிரியாமல், கைநெகிழாமல் கூடி வாழ்க! தீதறுக! நலம் பொங்குக!'' என்று வாழ்த்தெடுத்துச் சில மலர்களைத் தூவினர்; பிறகு உலகிற்கு அருந்ததி போன்ற கற்புடைய கண்ணகியைக் கணவனுடன் மங் கல நல்லமளி யேற்றினர். அவ்வாறு வதுவரரைப் பள்ளியறை சேர்க்கையில், "இமயமலைக்கு இப்பால், எமது திருமாவளவன் பொறித்த புலிக்கொடி, அதற்கு அப்பாலாகி, மேருமலையை அளாவுக! எப்பக்கமும் போர்வெற்றி பெருகிய எமது செம்பியன், உல கெல்லாம் ஒரு தனியாழி யுருட்டி (ஏகசக்கிராதிபத்தி யம் வகித்து) விளங்குக!" என்று மன்னனுக்கு வாழ்த் தெடுத்தனர். குடிகள் இவ்வளவு அன்பு வைக்கும்படி அக்காலத் தமிழ் மன்னர் செங்கோல் செலுத்தினர்!

கண்ணகியும், கோவலனும் அறம் பொருளின்பம் நிறைந்த இல்லறம் நடாத்தினர். காதற் கொழுநனாகிய கோவலன் தடமலர்க் கண்ணியான கண்ணகியுடன் இல்லறத்தில் அன்றிலைப்போலக் கூடி வாழ்ந்தான்.



## எ. மங்கல மனையறம்

கோவலனும் கண்ணகியும், தமது நெடுநிலை மாளிகையின் இடைநிலையில் (நாலாந் தட்டு), மயனாற் செய்யப்பெற்றது போன்ற ஒரு மணிக்கால் அமளியில் வீற்றிருந்தனர். அம்மாளிகைச் சாளரம் மணித் தாமத்தாலே ஒழுங்குற அமைக்கப் பெற்றது. அதன் வழியே மாலைத் தென்றல் வீசியது. அத்தென்றல் கழுநீர், ஆம்பல், நன்கு தளையவிழ்ந்து வண்டு மொய்க்கும் குவளை, மற்ற வயற்பூக்கள் இவற்றின் வாசத்தை அள்ளி யணைந்து வந்தது. வெண் மடல் விரிந்த தாழை, மாதவி, சண்பகப் பொதும்பர் இவற்றினின்றும் பூந்தாதுக்களை வாரியுண்டு, ஒள்ளிய முகங்கொண்ட மாதரின் சுருண்ட அளகத்தில் உண்டாகும் மணத்தைப் பெறுதற்கு வழிகாணாது திரியும் வண்டுகளுடன் சாளரத்துட் புகுந்தது மணவாய்த் தென்றல். தென்றல் காதற்கடவுளின் தேரல்லவா ? நமது காதலரை அது மகிழ்வித்தது. அவர் காதல் பெருகியது. இருவரும் மணமலர்க் கணைகளுடன் மன்மதன் வீற்றிருக்கும் மேன்மாடி நிலாமுற்றத்தை யடைந்தனர். அங்கு வண்டுகள் உண்ணும்படி, பல நறுமலர்களால் ஆகிய சேர்க்கையில் (ஆழிசூழ்ந்த தொல்லுலகம் முழுவதையும் விளக்கும்) ஞாயிறும் திங்களும் போலக் காதலர் இருவரும் வீற்றிருந்தனர். கோவலன், தனது அருமைக் காதலியான கண்ணகியின் பெருந் தோளில் கரும்பும் வல்லியும் எழுதினான் ; அவள்

## கண்ணகி - கோவலன்



மாசறு பொன்னே, வலம்புரி முத்தே,
காசறு விரையே கரும்பே தேனே!

மார்பில் தொய்யில் எழுதினான். பிறகு இருவரும் வண்டு மலர்த்தி நிலவும் மல்லிகை மாலையும், செங்குவளை மாலையும் அணிந்தனர். அம் மாலைகள் குலைந்து நெறி பிறழும்படி இருவரும் மார்புறத் தழுவிப் புணர்ச்சி யின்பத்தில் மயங்கிக்கிடந்தனர். தீராக் காதலில் மூழ்கிய கோவலன், அம்மயக்கம் நீங்கிய பின்னர், காதலி யின் திருமுகத்தை நோக்கி, நலம் பாராட்டுரைகளைக் கூறினான். அவையாவன :—

"காதலி, இமையவர் போற்றப் பரமசிவன் குழவித் திங்களை முடிமிசைச் சூடியது அருமையான காட்சி தான் ; ஆயினும் அப்பரமன் அப் பிறையை உனது திருநுதலாகும்படி கொடுத்தலே பொருந்தும். ஏனெனில், பாற்கடலில் திருமகளாகிய உன்னோடன்றோ அத்திங்கள் பிறந்தது ? அது உனக்கே யுரிமையன்றோ ? போர்முனையில், புகழ்பெற்ற வீரருக்கு, மன்னர் படைக் கலங் கொடுத்தல் பண்பாகும். அந்தப் பண்பினால், அனங்கன் தனது பெரிய கரும்புவில்லை நினது இரண்டு கரிய புருவங்களாகத் தரத்தகும். அமுதம் மூப்பை யொழித்து என்றும் இளமையைத் தருவதாம். நீயே எனக்கு அமுதம். பாற்கடல் தோற்றிய அமுதிற்கு முன்னேயே நீ தோன்றினை. அந்த அமுதுடன் தோன்றியது இந்திரன் வச்சிராயுதம் ; அதை அவன், உனது இடையாகும்படி தரவேண்டும். ஆறுமுகக் கடவுள், தனது அழகிய சுடர் நெடு வேலையே நினது முகத்தில் இரு கண்களாக அமைத்தான். அது, உனது வேல் விழிகளால் என்னை வருத்தவன்றோ ? பெரிய சிறகை விரித்தாடும் நீலமணி மயில், நினது சாயலுக்குத்

தோற்றுத் தண்கான் அடைந்தது. அன்னமானது, நினது மென்னடைக்குத் தோற்று நன்னீர்ப் பண்ணை நளிமலரிற் செறிந் துறைகின்றது. மென்னடை மாதே! குழலும், யாழும், அமிழ்துங் குழைத்த நினது மழலைச் சொல்லிற்குத்தோற்று வருந்திய கிளிகள், உன்னைவிட்டுப் பிரியாமல், உனது மலர்க் கைகளில் உறைவன வாயின. எதற்காக? உனது இன்சொல்லைக் கேட்டுவந்து தாமும் அதைக் கற்கவேயாம். நறுமலர்க் கோதையே, உனது மங்கலமான இயற்கை யழகே எல்லா அழகையும் வென்று விளங்குகிறதே; உனது நலம்பாராட்டும் தோழியர், உனக்குப் பொன்னணிகள் சூட்டுவதால் என்ன பயனைக் கண்டனர்? அவ்வணிகளுக்கு நீ அழகு செய்வதல்லால், அவை யுனக்கு அழகுசெய்யத் தேவையில்லையே! பலவகையாக நீ முடிக்கும் கூந்தல் இயற்கை மணமுடையது. அதற்குச் சில மலர்கள் சூட்டுவதை விட்டு, உனது தோழிகள் மெல்லவிழ் மாலை சூட்டுகின்றனர். அம்மாலை 'நான் கண்ணகி கூந்தலை அடையவேண்டும்' என்று கேட்கத் தோழியர் அதன் அவாவைத் தீர்க்க அவ்வாறு செய்குனர் போலும்! உனது தோழியர், உன் கூந்தலுக்கு அகிற் புகையும் போட்டு, அதன்மேல் மான்மதச் சாந்தையும் (புனுகு கத்தூரி போன்ற வாசனைகள்) பூசுவதேன்? அந்த மான்மதச் சாந்து, 'தோழியே நான் கண்ணகி கூந்தலால் மணம்பெறச் செய்யாயோ?' என்று கெஞ்சியதனலோ? இன்றேல், இவருக்கு மான்மதத்துடன் வந்த உறவு எதனல்? உனது திருமுலைத் தடத்தில் தொய்யிலெழுதி, அதற்குமேல் முத்துவடத்தையும்

அவர் அணிவதேன்? அந்த முத்துவடத்திடம் அவர் கொண்ட உறவு யாதோ? ஒருகால், 'தோழி, நான் கண்ணகி மார்பைச் சேரவிழைகின்றேன், துணை செய்' என்று அம் முத்தாரம் கெஞ்சியதோ? மங்கல வணியும் அதிலுமே பாரமாகி உனது சிற்றிடை வருந்துகிறதே, அதற்கு மேலே, நகைகளும் முத்துவடமும், மாலைகளும் சாந்தும் இவர் அணிவதேன்? ஆ! இவர்களுக் கென்ன பேய் பிடித்துக் கொண்டதோ? அதனாலே தான் உன்னை யிப்படிச் சுமையேற்றி வருத்துகின்றனரோ?

"தாழ்ந்தடர்ந்த கூந்தலையுடைய தையலே, தூய பொன்னிறப் பாவாய், முத்தனைய மூரலாய், குற்றமற்ற நறுமண வுயிர்ப்பினாய், கரும்பனைய இனிமையாய், தேனனைய இன் சொல்லாய், பெறற்கரிய பாவையே, என் ஆருயிர்க்கு மருந்தே, பெரிய தனவணிகக் குடிச் செம்மலான மாநாய்கன் பெருமை விளங்க வந்த அழகிளம் பெண்ணே, உன்னை என்னென்றிசைப் பேன்? மலை பெறுதற்கரிய மணியே என்பேனா! பாற் கடல் பெறவொண்ணாத அமுதே என்பேனா! யாழிற் பிறத்தற்கரிய இசையின்பமே என்பேனா!

"மாசறு பொன்னே, வலம்புரி முத்தே,
காசறு விரையே, கரும்பே, தேனே,
அரும்பெறற் பாவாய், ஆருயிர் மருந்தே,
பெருங்குடி வாணிபன் பெருமட மகளே,
மலையிடைப் பிறவா மணியே யென்கோ!
அலையிடைப் பிறவா அமிழ்தே யென்கோ!

யாழிடைப் பிறவா இசையே யென்கோ !
தாழிருங் கூந்தல் தையால் நின்னை......!"

இவ்வாறு இடைவிடாமல் இன்னுரை கூறி, நலம் பாராட்டினன் கோவலன். நமது பழந்தமிழர், பெண்ணைப் பெருமைப்படுத்திய வகை இதனால் விளங்கும். இந்நூலைப் படிக்கும் ஒவ்வொருவரும், தமது மனைவியை இவ்வாறு நேசித்து இனிமை கூறவேண்டும். *வயங்கிணர் தாரானாகிய கோவலன், †தயங்கிணர்க் கோதையாகிய கண்ணகியுடன் இவ்வாறு மகிழ்ந்திருந்தான். கோவலன் தாயார், இவர்களைத் தனிக்குடித்தனம் வைத்து, அன்பும் அறமும் பொருந்திய இல்லறம் நடத்திக்காண விரும்பினள். அதற்காக ஒரு பெரிய மாளிகையை அமைத்தாள். அதில் இவர்களுக்கு வேண்டிய பலவகைச் செல்வங்களையும், பணிவிடை செய்யச் சேவகர் முதலிய எல்லாவற்றையும் ஒழுங்காக அமைத்தாள். இந்த மாளிகையில், கோவலனும் கண்ணகியும், எக்கவலையும் இன்றிச் சுயேச்சையாக வாழ்ந்தனர். ஊருக்கு வரும் துறவிகளை வரவேற்று வழிபட்டு இவர் அறத்தைப் போற்றினர்; அறவோருக்கு வேண்டியதை உதவினர்; இன்முகங்காட்டி விருந்தினரை உபசரித்து ஊட்டினர். அன்பும் அருளும் இவர் வாழ்விற் பொருந்தின. கணவன் கருத்தறிந்து, கண்ணகி செய்வன செய்தாள். இவ்வாறு பல ஆண்டுகள் இவர் சிறப்பாக இல்லறங் காத்தனர்.

---

* தாதும் பூங்கொத்தும் நிறைந்த ஒள்ளிய மாலை.

† தாதும் பூங்கொத்தும் நிறைந்து அசைந்தாடும் மாலை.

போகப் பொருட்களெல்லாம் இவர்களுக்கு நிறைந்திருந்தன. இருவர் மனமும், காதலால் கலந்து குழைந்து ஒன்றாயின. இருவரும் எல்லா இன்பங்களும் அனுபவித்தனர்; 'மண்மேல் யாதும் நிலையில்லை; செல்வம், செல்வோம் எனச் செல்லும்; இருக்கும் போதே இயன்ற நல்லறம் செய்யவேண்டு' மென்று கருதித் தாமும் துய்த்து, அறவோர், துறவோர், வறிஞர், விருந்தினர் முதலானோருக்கும் ஏராளமாக ஈந்து வாழ்ந்தனர்.





# அ. மாதவி

## நமது நாட்டியக் கலை

அழகனை அழகுக் கலைகளால் வழிபட்டனர் நமது பாரத நாட்டினர். நமது கோயில்கள் அருங்கலை நிலையங்களாம். ஆடல், பாடல், காவியம், ஓவியம், சிற்பம் முதலிய கலைகள், ஒரு நாட்டின் நாகரிக வாழ்விற்கு இன்றியமையாதனவாம். நமது பெரியார் இக்கலைகளைக் கடவுள் வழிபாட்டுடன் இணைத்துப்புனிதமாக்கினர். மனிதனது மனக்கிளர்ச்சிக்கும், புலனுணர்விற்கும், ஒரு கடவுட்சுவையும் பேரின்பப் பயனும் நல்கவே, மகான்கள் இக்கலைகளை வகுத்து, அவற்றிற்குத் தமது அருளறிவால் இலக்கணமுஞ் செய்தனர். அக்காலம் அவர் அருளிய இலக்கணங்களே வழிவழியாக இன்றும் வழங்குகின்றன. 'பரதார்ணவம்' என்னும் பெயரால் பரத ரிஷி நாட்டியக் கலையை அருளினார். பாவனை, ராகம், தாளம் இம்மூன்றும் ஒத்தியங்கி இன்பமளிப்பது பரத நாட்டியம். உருக்வேதத்தினின்று வாத்தியம், யஜுர் வேதத்தினின்று அபினயம், சாமவேதத்தினின்று கானம், அதர்வணத்தினின்று ரஸம் கிரகித்து, மாந்தருக்கு அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நாற்பயனையும் அளிக்கவே நாட்டியக் கலை வகுக்கப்பெற்றதாக அபிநய தர்ப்பணம் கூறும்.* அக்காலப் பெரியார் இக்

---

* நாட்டியக் கலை :—" நான் நாட்டியக்கலையைச் சிறப்பாகக் கருதுவது மிகையன்று : தேவர் விழிகளுக்கு இனிய வேள்வி விருந்தாக அதை முனிவர் கருதுவர். உமையுடன்

கலையின் புனிதத் தன்மையை எவ்வாறு காத்தனர் என்பதை அடியில் வரும் கதையால் அறியலாம் :—

இந்திர சபைக்கு அகத்தியர் வந்தார். செந்தமிழ் முனிவரைத் தேவர்கோன் நல்வரவேற்றான். அச்சமயம், கண்ணும், காதும் கருத்தும் களிக்க ஊர்வசியின் பரத நாட்டியங் காண விரும்பினான் இந்திரன். நாரதர் நயமாக யாழ் மீட்டினார். தோரியமடந்தை (ஆடி மூத்தவள்) வாரம் பாடினாள். ஊர்வசி மட்டும் ஆடாமல் சயந்தனைப் பார்த்து மோகித்து நின்றாள். இந்திரன் மகனான சயந்தனும் அவளைக் கண்டு மனவிகாரங் கொண்டான். இதனால் வீணை மங்கலமிழந்தது. முனிவர் சினந்தார். 'உங்கள் மனவிகாரத்தால், புனிதமான நாட்டியக்கலையை இழுக்குறுத்தினீர்கள். நீங்கள் இருவரும் மண்ணுலகிற் பிறக்கக் கடவீர்' என்று சபித்தார். சயந்தன் வேணுவாகப் பிறந்தான். ஊர்வசி மாதவி யென்னும் நாடகக் கணிகையாகப் பிறந்தாள். தலைக்கோல் தானமாகிய நாடக அரங்கில், மாதவி யாடும்போது, சயந்த வேணு துணை செய்து சாபம் நீங்கியது. இது வெறும் கட்டுக் கதையாயினும், நமது முன்னோர்கள், இழிவான மனவிகாரங்கள் கலக்காமல், பரத நாட்டியக்

---

கூடிய உருத்திரன் தன் வடிவினாலேயே தாண்டவம் லாஸ்யம் என்று அதை இரண்டு விதமாக வகுத்தான். முக்குணங்களில் எழுந்து, நானாரஸங்களுடன் கூடிய மாந்தர் வாழ்வையும் உணர்வுகளையும் இதில் நேராகக் காணலாம். பல சுவை யுணர்வுள்ள மாந்தரை மகிழ்விப்பது அநேகமாக நாட்டியக்கலை யொன்றே யாம்" என்று மாளவிகாக்னிமித்ரத்தில் காளிதாஸன் கூறுகிறான்.

கலையை எவ்வளவு அருமையாகப் பாதுகாத்தனர் என்பதை விளக்கும்.

* * *

தேவரும் முனிவரும் விரும்பிய இந்த நாட்டியக் கலை, கடைச் சங்கக் காலத்தில் அடைந்திருந்த பெருமையை அரங்கேற்று காதை நன்கு விளக்கும். நடன மாதின் இலக்கணம், ஆடலாசிரியன் அமைதி, இசையாசிரியன் அமைதி, முழவாசிரியன் அமைதி, குழலோன் அமைதி, அரங்கின் அமைதி, கூத்திலக்கணம் ஆகியவற்றை அரங்கேற்றுகாதை விளக்குகிறது. இவை சுத்தானந்தப் பிரகாசம் என்னும் நூலைத்தழுவியுள்ளன. அந்நூல் மறைந்தது. இப்போது வடமொழியிலும், ஆங்கிலத்திலும் நமக்கெய்தும் இசைநூல்களையும், பரதநாட்டிய சாத்திரங்களையும் கொண்டும், அடியார்க்கு நல்லார் குறிப்புரைகளைக் கொண்டும் அரங்கேற்று காதையிலுள்ள கலைநுட்பத்தை இயன்றமட்டும் விளக்குவாம்.

ஊர்வசி மாதவியாகப் பிறந்தாள் என்று மேலே சொன்னோமல்லவா ? அந்த மாதவி மரபில், சித்திராபதி யென்னும் ஒரு கணிகை தோன்றினாள். அவள் மகளே நமது கதைக்குரிய மாதவி. மாதவி, பிறப்பிலும் பிறப்பிற்கேற்ற சிறப்பிலும் குன்றாத பூங்குழற்பாவை; பெருத்த தோளும், அகன்ற விழியும் கொண்ட கட்டழகி; சாத்திரப்படி, ஐந்தாண்டில் தண்டியக்கொம்பு கொடுத்து, மாதவிக்கு நடனக்கலை கற்பித்தனர். ஏழாண்டுகள் கலை பயின்று, பன்னிரண்டாம் வயதில், ஆடல், பாடல், அழகு இம் மூன்றிலும் நிறைவுற்று விளங்கினாள் மாதவி. இளமை, அழகு, அகன்ற விழிகள், பெருத்த

மார்பு, வசீகரம், முகமலர்ச்சி, கீதம் வாத்யம் தாளம் இவற்றை அனுசரித்து நடிக்கும் திறமை, பாவனூரஸம் இவை நாட்டியப் பெண்ணின் இலக்கணமாம். கலை விருப்பமும், நற்குணமும், நல்லழகும், ஆடலும், பாடலும் ஒருங்கே வாய்ந்த அணங்கைப் பன்னிரண்டாம் ஆண்டில் அரங்கேற்றுதல் மரபு. அவ்வாறே விரக்கழலணிந்த திருமாவளவன் முன்னே, மாதவியை அரங்கேற்ற விரும்பினர். மன்னன் கண்டு ரசிக்க வேண்டுமானல் நாட்டியத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் சாத்திரப்படி முதல் தரமாக அமைந்திருக்க வேண்டுமல்லவா? ஆடலாசிரியன், வைணிகன், குழலோன், மத்தளக்காரன் இவர்கள் இலக்கணங்களையும், அரங்கின் அமைதியையும் சாத்திர நுட்பங்களையும் ஆசிரியர் இனிக் கூறுகிறார்:



## கூ. ஆடலாசிரியன்



"அழகன், புலவன், சமர்த்தன், கற்பனுசக்தி மிக்கவன், சொல்லும் குரலும் இனியன், பரதசாத்திர நிபுணன்; பாட்டு, நிருத்தம், வாத்தியம் இம்மூன்றிலும் தேர்ந்தோன், ஆடலாசிரியன் ஆவன்" என்றார் நந்திதேவர். "நாட்டியக்கலையிற் சிறந்தோனுகி, பாவனுரஸங்களை விளங்க அறிந்தோன் ஆடற்கமைந்த ஆசானுவன்" என்னும் சிலப்பதிகாரம். ஆடலாசிரியன் அறியவேண்டுவன இவையாம்:—(1) மார்க்கம், தேசி என்னும் இருவகைக்கூத்தின் இலக்கணம். கோயில்களில், தெய்வச்சந்நிதிகளில் ஆடுவது மார்க்கம்; மற்ற மன்றங்களில் விநோதத்திற்காக ஆடுவது தேசி.

(2) பலவகைக் கூத்திலக்கணம்: புகழ்ச்சியும், நகையும், விநோதமும் தோற்றும் பலவகைக் கூத்துக்கள் உள்ளன. சாந்தி, விநோதம் என்று அகக்கூத்து இருவகையாம்: அகக் கூத்தாவது சத்வ, ராஜஸ, தாமஸ குணங்களால் எழும் உள்ளக் கிளர்ச்சிகளை அபிநயித்தல். சுத்தநிருத்தமான சொக்கம், அகச்சுவை பற்றிய மெய்க்கூத்து, கதை தழுவாது, பாட்டின் பொருள்பற்றி அபிநயிக்கும் அபிநயக் கூத்து, ஒரு கதையைத் தழுவி நடிக்கும் நாடகக் கூத்து என்று சாந்திக் கூத்து நால்வகையாம். விநோதக்கூத்து எழுவகைப்படும். அவை யாவன:—குமார் ஒன்பது பேர் காதல் அல்லது வெற்றிப்பாக்கள் பாடிக் கைகோத்தாடும் குரவைக் கூத்து, கலிநடம் என்னும் கழாய்க் கூத்து, கரகம் எனும் குடக் கூத்து, பாய்ந்தாடும் கரணம், நோக்கு, பாவைக் கூத்து,

நகைச்சுவை கொண்ட வசைக்கூத்து அல்லது விதூடகக்கூத்து, சாமியாட்டம் அல்லது வெறியாட்டு. இவற்றுடன், இடம்பொருளேவல்களுக்குத் தக்கபடி புகழ்ச்சியும், நகையும், விநோதமும் தோற்றும் பல வகைக் கூத்துக்களை நட்டுவன் அறிந்திருக்கவேண்டும். நாடகத்தில் ஆடும் நாட்டியம், தாளத்தையே அனுசரித்தாடும் நிருத்தம், ரஸபாவனையை அனுசரித்தாடும் நிருத்யம் என நாட்டியத்தை மூவகையாக நந்தியருளிய அபிநயதர்ப்பணம் வகுக்கும். இம்மூன்றும் ஸுகுமாரமாக நடிக்கும் லாஸ்யம், மிகவும் எழுச்சியுடன் நடிக்கும் தாண்டவம் என்று இருவகையாம். தாண்டவம் வீரரசம் மிகுந்து, பாட்டுடன் பெரும்பாலும் ஆண்களாற் செய்யப்படும். இன்பத்தைக் காட்டும் ஆனந்தத் தாண்டவம், மாலையில் ஆடும் சந்தியாதாண்டவம், சிவனும் உமையும் ஆடும் உமாதாண்டவம், சிவ - கௌரி தாண்டவம், காளிகாதாண்டவம், திரிபுர தாண்டவம், ஸம்ஹாரதாண்டவம் எனத் தாண்டவம் ஏழுவகையாம். லாஸ்யநடனம், காதற்சுவையும் இனிய கலைச்சுவையும் கூடி அழகிய பெண்களால் நடிக்கப்படுவது. கண்ணன் ராசலீலை லாஸ்யமாகும்.

(3) வென்றிக்கூத்து, வசைக்கூத்து, விநோதக் கூத்து முதலிய பலவகைக் கூத்துக்களில், பாட்டின் உறுப்புக்களுக் கேற்றபடி பாவனுரசத்தைப் புணர்த்த வேண்டும். இந்த உறுப்புக்களுக்கு விலக்குறுப்புக்கள் எனப்படும். விலக்குறுப்புக்கள் பதினான்காவன:— *(1) அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நாற்

* அடியார்க்கு நல்லார் உரை.

பொருள்; (2) உள்ளவர்க்கு உள்ளது, இல்லவர்க்கு இல்லது, உள்ளவர்க்கு இல்லது, இல்லவர்க்கு உள்ளது எனக் கற்பனைகாட்டும் யோனி; (3) தேவர், வீரர், காமுகர், நடன், நடி இவரைத் தலைவராகக் கொண்டாடும் விருத்தி; (4) பயிர் முளைத்து, நாற்றாகி, பூத்துக் கருத்தரித்து, கதிர்செறிந்து, அறுவடை செய்து துய்ப்பதுபோலப் பொருட்சுவை காட்டுவது சந்தி; (5) வீரம், அச்சம், இழிப்பு, அற்புதம், இன்பம், அவலம், நகை, நடுநிலை, உருத்திரம் ஆகிய ஒன்பது சுவைகள்; (இச்சுவைகளை அபிநயிக்கும் வகையை எமது நாடகக்கலையிற் காண்க.) (6) தாளவொத்துக் கிசைந்து நடிக்கும் நாடகம்; காதல் நாடகமாகிய பிரகரணம்; ஓரங்க நாடகமாகிய பாணம்; நகைச்சுவை நாடகமாகிய பிரகசனம்; முற்றுகையிடுதலைக் குறிக்கும் நாடகமாகிய டிமம்; வீரச்சுவை ததும்பும் வியாயோகம்; தேவாசுரர் வீரச்செயல்களை மூன்றங்கங்களிற் காட்டும் சமவாகாரம்; பரத்தையிடங் காதலை ஓரங்கத்திற் குறிக்கும் வீதி; அறத்தையே பொருளாகக் கொண்ட அங்கம்; தம்மைக் காதலியாத ஒரு பெண்ணுக்காகத் தேவர், மனிதர் அல்லது அரக்கர் போர் புரிவதாகக் காட்டும் ஈகாமிருகம் ஆகிய பத்துச் சாதி; (7) நவரச பாவனைகளைக் காட்டும் குறிப்பு; (8) உள்ள நிகழ்ச்சியை வெளிப்படத்தோற்றும் சத்துவம்; (9) வெகுளி, சோம்பல், ஐயம், களிப்பு, உவப்பு, பொறாமை, இன்பம், தெய்வாவேசம், மயக்கம், உறக்கம், உடன்பாடு, துயிலுணர்ச்சி, நாணம், வருத்தம், கண்ணோவு, தலைநோவு, நஞ்சு சாவு, மழை, வெயில், பனி, தீ, குளிர், வெப்பம்

இவற்ருல், உண்டாகும் கேடுகள் ஆகிய 24 வகை நடிப்புக்கள் அவிநயமாம். (10) உட்சொல்; புறச்சொல், ஆகாயச்சொல் ஆகிய மூன்று வகைச் சோல்; (11) நான்கடி, எட்டடி, பதினறடி, முப்பத்திரண்டடியாக வரும் சுண்ணம், சுரிதம், வண்ணம், வரிதகம் ஆகிய நான்கு சோல்வகைகள்;(12)வண்ணம், சந்தப்பாட்டு; (13) இசைப்பாட்டு; (14) ஆரியம் தமிழ் ஆகிய நடனத்திற் கேற்றபடி கதையைச் சேதிக்கும் சேதம். இப்பதினன்கும் நடனக் கதைக்கு உறுப்பாகும் விலக்குறுப்பாம்.

*(4) நட்டுவன் பதினேராடல் வகை யறிய வேண்டும் :—அவையாவன. (1) மாயவனுடும் அல்லி, (2) விடையோனுடும் கோட்டி, (3) ஆறுமுகன் ஆடும் குடை, (4) குன்றெடுத்தோன் குடம், (5) முக்கண்ணன் பாண்டரங்கம், (6) நெடியோன் மல்லாடல், (7) வேல் முருகன் துடியாடல், (8) அயிராணி கடையம், (9) காமன் பேடாடல், (10) மாயவன் மரக்காலாடல், (11) திருமகள் பாவையாடல்.

**கடையம் : அயி ராணி மரக்கால் விந்தை, கந்தன்**
**குடை ; துடி மால், அல்லி, அமல், கும்பம்—சுடர்விழியால்**
**பட்டமதன் பேடுதிருப் பாவைஅரன் பாண்டரங்கம்**
**கோட்டியிவை காண்பதினேர் கூத்து.**

இந்த ஆடல்கள் உருத்திரன், கண்ணன், திருமால், ஆறுமுகன், திருமகள் முதலிய தெய்வங்களைப் பாவித்து ஆடலாம். இவ்வாறு பலவகை நடனங்களுக்கேற்ற

* அடியார்க்கு நல்லார் உரை.

பாடல், ஆடல், தாளம், தூக்கு, தாளச்சீர் இவை இலக்கணப்படி சேர ஆட்டுவிக்கவேண்டும் நட்டுவன்.

இனி நடனலட்சணம் காண்க :—" கைவழி நயனஞ் சேர்தல், கண்வழி மனம், மனவழி பாவனை, பாவனைவழி ரசம் நிற்றல் " நாட்டிய லக்ஷணம் என்றார் நந்திதேவர்.

"யதோ ஹஸ்தஸ் ததோத்ருஷ்டிர்யதோத்ரிஷ்டிஸ்ததோமன :
யதோ மனஸ் ததோ பாவோ, யதோ பாவ ஸ்ததோ ரஸ :"

கருத்திற்கொண்ட பொருளை, ஒற்றைக்கைக்குறியாற் காட்டுவது பிண்டி. இரண்டு கைகளாலும் குறித்தல் பிணையல் என்பர். அழகுபெறக் காட்டும் கை எழிற் கையாகும் ; தொழில்பெறக் காட்டுவது தொழிற்கையாகும். பிண்டியும் பிணையலும் புறக்கூத்திற் குரியன. எழிற்கையும் தொழிற்கையும் சத்வ ரஜோ தமோ குணங்களைக் குறிக்கும் அகக்கூத்திற்குரியன. ஒற்றைக் கைக்கும் குவித்த கைக்கும் கூடை யென்று பெயர். அகக்கூத்தில் ஒற்றையிற் செய்யும் கைத்தொழிலும், இரட்டையிற் செய்யும் கைத்தொழிலும் முரண்படாமல் இருக்கவேண்டும். ஆடும்போது அபிநயம் கூடாது. அபிநயிக்கும்போது ஆடல் கூடாது. குரவைக்கூத்திற்கும் வரிக்கூத்திற்கும் உரியபடி கால்களை யெடுத்து வைக்கவேண்டும்.

இனிச்சில முத்திரைகளைக் குறிப்பாம் :—

ஒற்றைக் கைக்குறிகள்:-பதாகம், திரிபதாகம், அர்த்த பதாகம் : கர்தரீ, மயூரம், அர்தசந்திரம், அராளம், சுக துண்டம், முஷ்டி, சிகரி, கபித்தம், கடகாமுகம், ஸூசீ,




1. பதாகம். 2. திரிபதாகம். 3. அர்த்த பதாகம். 4. கர்த்தரீ முகம். 5. சூசீ முகம். 6. அர்த்த சூசீ. 7. சுகதுண்டம். 8. அராளம். 9. அர்த்த சந்திரம். 10. காங்கூலம். 11. அலபத்ரம். 12. திரிசூலம். 13. முஷ்டி. 14. மிருக சீர்ஷம். 15. சிகரம். 16. சர்ப்ப சீர்ஷம். 17. முகுளம். 18. கடகா முகம். 19. சதுரம். 20. தாம்ர சூடம்.

சந்த்ரகலா, பத்மகோசம், ஸர்ப்ப சீர்ஷம், மிருகசீர்ஷம், ஸிம்ஹமுகம், லாங்கூலம், ஸோலபத்மம், சதுரம், ப்ரமரம், ஹம்ஸாஸ்யம், ஹம்ஸபக்ஷம், முகுளம், தாம்ர சூடம், த்ரிசூலம், பாலஹஸ்தம், அர்தஸூசி முதலியன.

பிணையற் கைகளாவன :—அஞ்சலி, கபோதம், கர்கடம், ஸ்வஸ்திகம், டோலா, புஷ்பபுடம், உத்ஸங்கம், சிவலிங்கம், கடகாவர்த்தனம், கர்தரீ ஸ்வஸ்திகம், சகடம், சங்கம், சக்ரம், ஸம்புடம், பாசம், கீலகம், மத்ஸ்யம், கூர்மம், வராஹம், கருடம், நாகபந்தம், கட்வா, பேருண்டம், அவஹித்தம் முதலியனவாம்.

இவற்றைத்தவிர, பிரமா, விஷ்ணு, சிவன், சரஸ்வதி, பார்வதி, லக்ஷ்மி, கார்த்திகேயன், மன்மதன், இந்திரன், அக்னி, யமன், வருணன், வாயு, குபேரன், முதலிய தேவர்களையும், தசாவதாரங்களையும், அரக்கரையும், நான்கு வருணங்களையும், நவக்கிரகங்களையும் காட்டும் கைக்குறிகள் தனித்தனி யுண்டு. மேற்சொன்ன பிண்டியும் பிணையலும், இவற்றில் பலவகையாகச் சேரும். இந்த ஹஸ்த லக்ஷணங்களெல்லாம் அபிநயதர்ப்பணம், ஹஸ்தலக்ஷணப்ரதீபம் ஆகிய நூல்களில் விளக்கப்பெற்றுள்ளன. ஆனால் இவை சொல்லால் விளங்கா ; பார்த்தாலே நன்கு விளங்கும். முதன்மையான சில கைக்குறிகளைப் படத்திற் காண்க.

ஆடும்போது கால்களுக்கும் அபிநய லக்ஷணங்கள் உண்டு :— ஸ்தானகம், ஆலீடம், பிரேரிதம், ஸ்வஸ்திகம், ஸமஸூசி, பர்வஸூசி, ஸமபாதம், ஏகபாதம், நாகபந்தம், மோதிதம் முதலியன. காலைத் தூக்கிச் சுற்றுவதற்கு, சக்ரம், ஏகபாதம், குஞ்சிதம், ஆகாசம் முதலி

யவைகள் உள்ளன. நடத்தல், தாவல், நகர்தல், ஓடல் விரைதல், நடுங்கல், புரளல் முதலிய பல நடைகள் உள் ளன. வாத்து, மயில், மான், யானை, குதிரை, சிங்கம், பாம்பு, தவளை, ஹனுமான், வீரன் போன்ற நடைகள் பல வுள்ளன. அபிநயத்தில் தாய், தகப்பன், தந்தை, மாமனார், மாமியார், கணவன், மனைவி, சக்களத்தி, நாட்டுப்பெண் முதலியோரைக் கைகளைக்கொண்டு அங் கத்திற் பலபாகங்களைத் தடவிக்குறிக்கும் குறிகள் உள்ளன. சமம், ஆலோகிதம், ஸாசி, பிரலோகிதம், நிமிளிதம், உன்மீளிதம், அனுவ்ருத்தம், அவலோகி தம் ஆகிய எட்டுப் பார்வைகள் உள்ளன. சுந்தரி, பரிவர்திதம், திரஸ்சினம், ப்ரகம்பிதம் என நான்கு வகையாகக் கழுத்தசைவுகள் உள்ளன. இவற்றின் நுட்பங்களை நாட்டிய சாத்திரங்களிலும், நாட்டியப் புலவர் ஆட்டும்போதும் பார்த்துத் தெரிந்துகொள்ள வேண்டும்.



## ௧0. இசைக் கலை



"உள்ளத்தில் ஓங்காரமாய் நின்ற ஐயா" என்று இறைவனை வழுத்துகிறார் மாணிக்க வாசகப்பெருமான். அந்த ஓங்காரத்தின் விரிவே நாதயோக மான இசைக்கலை. உயிரும், உலகும் நாதக் கடலிலே மிதக்கின்றன. "ஓமிதி ஸர்வம்" என்னும் வேதம்—ஓமே எல்லாம். ஓம் உள்ளொலி. அதனின்று சத்தம் பிறந்தது. அதனின்று எழுத்து. அதனின்று சொல் தொடர், மொழிகள், நூல்கள், காவியம், சங்கீதம் எல்லாம் உண்டாயின.

இசைபிறக்கும் வகையறிவதற்கு நமது உடலமைப்பு பற்றி அறியவேண்டிய தவசியமாம். நமது உடலில் இருகூறுகள் உள்ளன. ஒன்று இயற்கை; மற்றொன்று ஆன்மா. இயற்கையுடலை ஆன்மா தாங்குகிறது. இயற்கை க்ஷேத்திரம்; ஆன்மா க்ஷேத்திரஞ்ஞன். இயற்கையுடல் 24 தத்துவங்களால் ஆனது.

அவையாவன :—வான், வளி, தீ, நீர், மண் ஆகிய ஐம்புதங்கள்; ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் ஆகிய தன்மாத்திரைகள்; மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய அறிபொறிகள் ; வாக்கு, கை, கால், கருவாய், எருவாய் ஆகிய வினைப்பொறிகள் ; மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய உட்கரணங்கள். இந்த இயற்கையுடல் 72,000 நரம்புகளால் இயங்குகின்றது. அவற்றில் முதன்மையானவை பத்தாம் :—இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, அலம்புடை, சங்கினி, குகு,

சிகுவை, புருடன். இவற்றை இயக்கும் தச வாயுக்கள், பிராணன், அபானன், உதானன், ஸமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் ஆகியவையாம். இவ் வாயுக்கள், நமது உயிர்ப்பு, மலஜல விசர்சனம், பேச்சு, போக்குவரவு, அறு சுவை, சீரணம், இமைப்பு, விழிப்பு, உணர்வு, விக்கல் முதலிய பல செயல்களைச் செய்ய நரம்புகளுக்கு இயலுவிக்கும். பசி, அதிசயம், நினைத்தல் அச்சம், துன்பம் மூப்பு, வியர்த்தல், நீர் வேட்டல், வேண்டல், வெகுளி, மதம், கேதம், நோய், பிறப்பு இறப்பு, உவகை, உறக்கம், இன்பம், ஆங்காரம், உலோபம், சோம்பல், மைதுனம் ஆகிய குணங்களெல்லாம் இந்த நாடிகளின் அதிர்ச்சியாலும் அதற்கேற்றபடி காற்றின் விகாரத்தாலும் உண்டாவனவாம். உடலின் சூத்திரக்கயிறுகள் இடை, பிங்கலை, சுழுமுனை ஆகிய மூன்று நாடிகளாம். பீர்க்கங்கூட்டின் துளைபோலுள்ள முது கெலும்படுக்குகளின் வழியே இவை செல்கின்றன. இவையே பொறி புலன் மனம் மூளை அனைத்தையும் ஆளுகின்றன. இவற்றில் நடுநரம்பாகிய சுழிமுனை நெடுகலும், சக்தி நிலயங்களான ஆதாரகமலங்கள் அடுக்கப்பெற்றுள்ளன. மூலாதாரம் சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனாஹதம், விசுத்தி, ஆஞ்ஞை ஆகிய ஆறு ஆதார சக்கிரங்களும் முறையே ஆசனம், குறி, தொப்புள், இதயம், கண்டம், புருவமத்தியில் இருக்கின்றன. இவை சூக்குமமான நரம்புப் பின்னல்கள். இவற்றிற்கு மேல், உச்சியில் ஆயிரம்

இதழ்த் தாமரையாகிய ஸஹஸ்ராரம் உள்ளது. அதிலேதான் நமது உடலிற் குடிகொண்ட ஆத்ம தெய்வம் உள்ளது. மூலாதாரத்தில் உறங்கும் குண்டலி சக்தி ஆறுதாரங்களைத் திறந்துகொண்டு, ஸஹஸ்ராரத்திற்கு ஏறிச்சென்று, ஜீவாத்மாவுடன் கலந்து மஹா குண்டலினியாக மாறும்போதே, நம்மிடம் உள்ள தெய்வத் தன்மைகளும், தத்துவங்களும் துலங்கும். புருவ நடுவேயுள்ள ஆஞ்ஞா சக்கரத்திற்கு மேல் புத்தியுள்ளது. அதற்கு மேல், நாத வெளியுள்ளது. அதற்கு மேல் பரநாதம் உள்ளது. இந்நிலை யடைந்தவருக்கு உள்ளே எப்போதும் ஓங்காரநாதம் கேட்டுக்கொண்டேயிருக்கும். அதுவே ஓர் இனிய யாழ் - குழல் - மத்தளக் கச்சேரிபோல் ஒலிக்கும். அங்கிருந்தே நாதக்கலை பிறந்தது. சரியானபடி நாதக்கலை பயின்று நல்லொழுக்கத்துடன் தெய்வ பக்தி செய்பவருக்குக் குண்டலி சக்தி எழுந்து ஆதாரங்களை மலர்த்தும். அருட்கவிகள், அவ்வாறே சக்திபெற்று, விசுத்த சக்கிரம் அல்லது கண்ட சக்கிரம் திறக்கப்பெற்றவராவர். தியாகையர், சம்பந்தர், அப்பர், மாணிக்கவாசகர், மீரா, கபீர் முதலிய அருட் கவிகளெல்லாம் நாதோபாசனையால் திருவருளின்ப மெய்தினர்.

செல்வத்துட் செல்வம் செவிச்செல்வமே. கேட்கச் செவியும், பாடக் குரலும் அமைவது ஒரு வரப்பிரசாதமேயாம். சங்கீதம் இசைவழிபாடேயாம். ஆழ்வார்களும், நாயன்மார்களும் இந்த இசை வழிபாட்டால்

இறைவனை யடைந்தனர். கீதம், வாத்தியம், நிருத்தம் ஆகிய மூன்றும் சேர்ந்தது சங்கீதமாம். நாதத்தினின்றும் சுருதி, சுருதியினின்றும் ஸ்வரம், ஸ்வரத்தினின்றும் இராகம், இராகத்தினின்றும் கீதம் உண்டானது. சங்கீதத்திற்குச் சுருதி மாதா ; லயம் பிதாவாகும். சுருதி என்பது இசையொலி ; லயம் என்றால் தாளம், காலக்கணக்கு இவையாம். ஸ்வர தாள ஞானத்துடன், பாட்டின் பொருளுணர்ந்து, இனிய குரலும் உள்ளவனே பாடகனாவதற்கு அருகன். குரல் நன்றாயில்லாதவர் வாத்தியப் பயிற்சி செய்யலாம் ; தவுல், மத்தளம், கஞ்சரா போன்ற தோற்கருவி, புல்லாங்குழல், நாதஸ்வரம் போன்ற துளைக்கருவி, வீணை, பிடில் போன்ற நரம்புக்கருவி, ஜாலராபோன்ற காஞ்சனக் கருவிகளைப் பயிலலாம்.

அனைத்தினும் சிறந்தது வாய்ப்பாட்டேயாம். அந்தராத்மாவினின்று பாட்டு வருகிறது. அதுவே அந்தக் கரணங்களை ஏவி, ஒரு தீயை, ஒரு ஆர்வத்தை உண்டு பண்ணுகிறது. அந்த ஆர்வத் தீ காற்றை உந்துகிறது. காற்று நாபி, இதயம், கண்டம், உச்சி, மூக்கு, இதழ், நா, பல்லணம் இவற்றைத் தொழிற்படுத்துகிறது. அதனால், உயிர் மெய் யெழுத்துக்கள் உண்டாகின்றன. உயிரெழுத்துக்களும், இடையின எழுத்துக்களும் கழுத்திற் பிறக்கும். மெல்லெழுத்துக்கள் மூக்கில், வல்லெழுத்துக்கள் மார்பை இடமாகக் கொண்டு பிறக்கும். எழுத்துக்கள் அளபெடுத்து ஆலாபனமாய் நீண்டு,

இசையாகிப் பண்ணாகும். நெஞ்சு, கழுத்து, நாக்கு, மூக்கு, அண்ணம், உதடு, பல், தலை ஆகியவை நாதம் பிறக்கும் எட்டுப் பெருந்தானங்களாம். எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு ஆகிய எட்டுச் செயல்களுடன் சங்கீதம் இயங்கும். ஆளத்தி (ஆலாபனம்) 'தென்னா தென்னா' என்று நடக்கும். ந, த, ம இம் மூன்றெழுத்துக்களும் ஆளத்திக்கு உரியன.

இவையெல்லாம், நாதயோக தத்துவ சாத்திர சம்மதமாம். சிலப்பதிகாரக் காலத்தில் தனித்தமிழ் இசை வழங்கியது. எனினும் இசைப்புலவன் 'தேசிகத் திருவின் ஓசை' கடைப்பிடிக்க வேண்டும் என்றிருப்பதால், இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொற்களும், அவை கலந்த பாக்களும் தமிழகத்தில் வழங்கின என்றும். பழந்தக்கராகம், பழம்பஞ்சுரம், செந்துருத்தி, தக்கராகம், தக்கேசி, இந்தளம், திருத்தாண்டகம், காந்தாரம், சாதாரி, சீகாமரம், கௌசிகம், வியாழக்குறிஞ்சி, பஞ்சமம், காந்தாரபஞ்சமம், குறுந்தொகை, குறிஞ்சி, கொல்லி, நட்டராகம், பியந்தைக் காந்தாரம், யாழ்மூரி, மேகராகக் குறிஞ்சி, அந்தாளிக்குறிஞ்சி, நேரிசை முதலிய பழம்பண்கள் தேவாரப் பாசுரங்களில் முழங்கும். இவற்றிற்கு இணையான தற்கால ராகங்களும் உண்டு. எல்லா இசையும் ஏழிசை அல்லது சப்தஸ்வரங்களின் விரிவே. ஏழு இசை விளக்கம் அடியிற் காண்க :—

## ஏழிசை விளக்கம்

| சுரம் | எழுத்து | தமிழ்ப் பெயர் | ஆரியப் பெயர் | இடம் | மாத்திரை | மணம் | சுவை | ஓசை |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஸ | ஆ | குரல் | ஷட்ஜமம் | மிடறு | 4 | காட்டு மல்லிகை | பால் | வண்டு |
| ரி | ஈ | துத்தம் | ரிஷபம் | நா | 4 | முல்லை | தேன் | கிளி |
| க | ஊ | கைக்கிளை | காந்தாரம் | அண்ணம் | 3 | கடம்பு | தயிர் | வாசி |
| ம | எ | உழை | மத்திமம் | சிரம் | 2 | வஞ்சி | நெய் | யானை |
| ப | ஐ | இளி | பஞ்சமம் | நெற்றி | 4 | நெய்தல் | ஏலம் | தவளை |
| த | ஓ | விளரி | தைவதம் | நெஞ்சு | 3 | வீரை | வாழை | பசு |
| நி | ஔ | தாரம் | நிஷாதம் | நாசி | 2 | புன்னை | மாதுளை | ஆடு |

இந்தச் சுருதிகள் ஆரோஹணம், அவரோஹணம் ஆகி, நாலு காலத்திலும் நடக்கும். இந்தச் சுருதிகளுக்கு ஆரோஹணம், அவரோஹணம், டால், ஸ்புரிதம், கம்பிதம், ஆஹதம், பிரத்யாகதம், திரிபுச்சம், ஆந்தோளம், மூர்ச்சனை ஆகிய தசவித கமகங்கள் உண்டு. இவை சுரத்தை நீட்டல், குறுக்கல், சேர்த்தல் இவற்றால் உண்டாம். சங்கீதப் பயிற்சியில் பல வரிசைகள் உண்டு:—சரளி வரிசை 12; ஸ்தாயி வரிசை 4; ஜெண்டை வரிசை 12; இம்மூன்றும் ஸ்வரப் பழக்கத்திற்காம். 14 அக்ஷரங்கொண்ட துருவதாளம், 10 கொண்ட மட்டியதாளம், 6 கொண்ட ரூபகதாளம், 10 கொண்ட செம்பைதாளம், 7 கொண்ட திரிபுடைதாளம், 14 கொண்ட அடதாளம், 4 கொண்ட ஏகதாளம், 3 கொண்ட திருச்ரஜாதி ஏகதாளம், 11 கொண்ட துருவதாளம் ஆகிய தாளங்களுடன் கூடிய எட்டு அலங்கார வரிசைகள் உண்டு. இவற்றிற்குமேல் கீதங்கள், பிறகு வர்ணங்கள், பிறகு கீர்த்தனங்கள், பல ராகங்கள் பயில வேண்டும். இராக ஆரோகண அவரோஹணங்களில் ஏழு ஸ்வரங்களும் சம்பூர்ணமாக சுத்தமாக, அமைந்தவற்றிற்கு மேளகர்த்தா ராகங்கள் என்பர். சுரங்கள் குறைந்தும், வளைந்து கூடியும் வருவன ஜென்ய ராகங்களாம்.

மேள கர்த்தா ராகங்கள் 72 ஆம். அவையாவன:— கனகாங்கி, ரத்னாங்கி, கானமூர்த்தி, வனஸ்பதி, மானவதி, தானரூபி, ஸேனாவதி, ஹனுமதோடி, தேனுக, நாடகப்ரிய, கோகிலப்ரிய, ரூபவதி, காயகப்ரிய, வகுளாபரணம், மாயாமாளவகௌளம், சக்ரவாகம், சூர்ய

*காந்தம், ஹாடகாம்பரி, ஜங்காரத்வனி, நடபைரவி, கீரவாணி, கரகரப்ரிய, கௌரிமனோஹரி, வருணப்ரிய, மார ரஞ்ஜனி, சாருகேசி, சரசாங்கி, ஹரிகாம் போதி, தீரசங்கராபரணம், நாகாநந்தினி, யாகப்ரிய, ராகவர்த்தினி, காங்கேய பூஷணி, வாகதீச்வரி, சூலினி, சலநாட, ஸாலகம், ஜலார்ணவம், ஜாலவராளி, நவநீதம், பாவநி, ரகுப்ரிய, கவாம்போதி, பவப்ரிய, சுபபந்துவராளி, ஷட்விதமார்க்கணி, ஸ்வர்ணாங்கி, திவ்யமணி, தவளாம்பரி, நாமநாராயணி, காமவர்த்தனி, ராமப்ரிய, கமநாச்ரும, விச்வம்பரி, சியாமளாங்கி, ஷண்முகப்ரிய, ஸிம்ஹேந்த்ரமத்திமம், ஹேமவதி, தர்மவதி, நீதிமதி, காந்தாமணி, ரிஷபப்பிரிய, லதாங்கி, வாசஸ்பதி, மேசகல்யாணி, சித்ராம்பரி, ஸுசரித்ரா, ஜோதிஸ்வரூபிணி, தாதுவர்த்தனி, நாசிகாபூஷணி, கௌஸலம், ரஸிகப்பிரிய.*

ஜேன்ய ராகங்கள் :—*அஸாவேரி, அடாணா, அம்ருதவாஹினி, ஆனந்தபைரவி, ஆபோகி, ஆபேரி, ஆரபி, ஈசமனோஹரி, உதயரவி சந்த்ரிகா, கன்னட, கதனகுதூஹலம், கமலாமனோஹரி, கமாசு, கமநக்ரிய, கலாவதி, காம்போஜி, காபி, காபிநாராயணி, கீரணா வளி, குந்தலவராளி, கேதாரம், கேதாரகௌளம், கை கவசி, கோகிலத்வனி, கௌள, கௌளிபந்து, ஸஹானா, சாயாதரங்கிணி, சுத்த தன்யாசி, சுத்தபங்காளா, சுத்த பைரவி, சுத்தஸாவேரி, ஜகன்மோகினி, ஜயநாராயணி, ஜயஸ்ரீ, ஜஞ்சுரட்டி, தன்யாசி, தனுகீர்த்தி, தர்பார், தேவ காந்தாரி, தேவமனோகரி, தேசாக்ஷி, தோடி, நவரஸ கன்னட, நவரோஜி, நாகஸ்வராளி, நாட்டை, நாட்டக்*

குறிஞ்சி, நாதசிந்தாமணி, நாதநாமக்கிரியை, நாயகி, நாராயணகௌள, நாராயணி, நீலாம்பரி, பங்காள, பந்துவராளி, பலஹம்ஸ, பிலஹரி, பின்னஷட்ஜமம், புன்னுகவராளி, புஷ்பலதிக, பூர்ணசந்திரிகா, பூரிகல்யாணி, பூபாலம், பூஷாவளி, பேகட, பைரவி, பைரவம், பியாகு, பிரதாபவராளி, மலயமாருதம், மணிரங்கு, மத்யமாவதி, மந்தாரி, மலஹரி, மாஞ்சி, மாதவமனோஹரி, மாளவி, மாளவஸ்ரீ, முகாரி, மோஹனம், யதுகுல காம்போஜி, யமுனுகல்யாணி, ரீதிகௌள, வராளி, வஸந்த, விஜயவஸந்த, வேகவாஹினி, ஸ்ரீரஞ்ஜனி, ஸ்ரீராகம், ஸரஸ்வதி, ஸரஸ்வதிமனோஹரி, ஸாரங்க, ஸாரங்கநாட்ட, ஸாரமதி, ஸாவேரி, சுருட்டி, ஸௌராஷ்ட்ரம், ஹம்ஸத்வனி, ஹுஸேனி. (100)

நாம் சாதாரணமாகக் கேட்கும் பிரபல ராகங்கள் பெரும்பாலும் ஜென்ய ராகங்களே. பைரவி, காமாஜ், ஜிஞ்ஜோடி, பூபாலீ, பிஹாரி, காபி, ஜில்ஹா, பிஹாக் முதலியன பிரபல வடநாட்டு ராகங்கள். 5 ஸ்வரங்களுள்ள ராகங்களை ஓடவம் என்றும், 6 ஸ்வரமுள்ளதை ஷாடவம் என்றும், 7 ஸ்வரங்கள் உள்ளதை ஸம்பூர்ண ராகமென்றும் வடநாட்டார் சொல்வர்.

சிலப்பதிகாரத்தில் சங்கீதக் கலை சேர்ந்திருக்கிறது. ஆதலால் இங்கே இசை நுணுக்கத்தையும் இராக வரிசைகளையும் பற்றி விரித்தாம். இனி இசையாசிரியன் இலக்கணத்தைக் காண்பாம். பரதநாட்டியத்திற்கேற்ற இசைப்புலவன், சாதாரண இசைப்புலவனைவிட அதிகமான பயிற்சி பெற்றிருக்கவேண்டும்.

யாழ், குழல், தாளம், சீர், வாய்பாட்டு, சன்னக் குரலுடன் கச்சிதமாக வாசிக்கும் மத்தளம், முன்னே சொன்ன கூத்தின்வகை, இவற்றுடன் இசைந்த பாடலை இனிமையாக, சுருதி லயங்களுடன் பொருந்தப் பாட வேண்டும். வரிப்பாட்டிற்கும் ஆடலுக்கும் உரிய பொருளை இலக்கி, இயற்சொல், திரிசொல், திசைச்சொல் வடசொல்ஆகிய தேசியச்சொற்களின் ஓசைகளைச் சுத்த மாகக் கடைப்பிடித்து, அந்த ஓசையின் இலக்கணங் களை யெல்லாம் குற்றமறத் தெரிந்த அறிவாளியா யிருக்கவேண்டும் பாடகன். அவன், பாட்டுக் கட்டிய கவியின் மனக்குறிப்பு, கருத்து இன்னதென்றறிய வேண்டும். ஆடலின் தொகுதி யறியவேண்டும். இன்ன பகுதிக்கு இந்தப் பாட்டுப் பொருந்தும் என் றறிந்து பாடவேண்டும். நவரஸ நடனங்களில், ரஸத் திற்கேற்றபடி பாடவேண்டும். கூத்து நடக்கும் பொழுது, ஆடலாசிரியன் மனமறிந்து பாடவேண்டும். இசைப்பயிற்சி மட்டுமின்றி,இசைநூல்களிலும் மாசற்ற பயிற்சி பெற்று, பாட்டிலக்கணத்தை விரிக்கவும், வகுக் கவும், வல்லவனுயிருக்கவேண்டும் பாடலாசிரியன்.

## கவிஞன்

ஆர்கலி முப்புரமும் சூழ்ந்து, வேங்கடத்திற்கும் குமரிக்கும் இடையேயுள்ளது தமிழகம். அதிலுள்ள தமிழர் அறிந்து மெச்சும்படி இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழிலும் புலமை பெற்றிருக்கவேண்டும் கவிஞன். வேந்தர் முன் கூத்து (வேத்தியல்), வேறு பொதுவான கூத்து ஆகியவற்றை விளக்கும் பரத நாட்

டியமாகிய நன்னூலை நன்குக் கற்றுக் கடைப்பிடிக்க வேண்டும் கவிஞன். பாடகன் ஆலாபனம் செய்வதை நன்கு கவனிக்கவேண்டும். இன்ன ராகம், இன்னதாளம் என்றுணர வேண்டும். அவற்றிற் கேற்றபடி கவிஞன், தனது கவிநயத்தைத்தோற்றவேண்டும். பகைவர்செய்த வசைமொழிகளை அவன் இன்னவென் றறியவேண்டும். தனது கவிதையில் எதிரிகள் கூறும் குற்றங்களை அசட்டை செய்யாமல் அறிந்துகொண்டு, அவற்றைக் களைந்து, நாச்சோர்வின்றி எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி, இசை நாடக நாட்டிய இலக்கணங்களை யறிந்து கவிபுனைவோனே கூத்திற்கேற்ற நற்புலவ னவன்.



# கக. முழவோன்



அபினயத்திற்குப் பாட்டும், ஆட்டத்திற்குத் தாள மிருதங்கமும் வேண்டும். தண்ணுமைக் காரன் இலக்கணம் அறிவாம். தாளத்திற்கு மாத்திரைக் கணக்கு, காலம், நடை, ஆவர்த்தனம், முத்தாய்ப்பு ஆகிய இலக்கணங்கள் உண்டு. பாட்டிற் கேற்றபடி தாளம்; தாளத்திற் கேற்றபடி மத்தளங்களின் கெத்து வாசிக்கப்பெறும். துருவம், மட்டியம், ரூபகம், ஜெம்பை, திரிபுடை, அடதாளம், ஏகதாளம் ஆகிய ஏழு முதன்மையான தாளங்களுண்டு. இவை ஒவ்வொன்றிற்கும், திச்ரம், சதுஸ்ரம், கண்டம், மிஸ்ரம், ஸங்கீர்ணம் என்று ஐந்து ஜாதிகள் உண்டு. இந்த ஜாதி பேதங்களால் $7 \times 5 = 35$ தாளங்கள் ஆகும். உதாரணமாக ஏகதாளம், திச்ரஜாதி ஏகம், சதுச்ரஜாதி ஏகம், மிச்ரஜாதி ஏகம், ஸங்கீர்ணஜாதி ஏகம் எனவாம். இந்த 35 தாளங்களும் பஞ்சகதி பேதத்தால் $35 \times 5 = 175$ தாளங்களாகப் பெருகும். இந்த 175 தாளங்களுக்கும் சூக்மம் என்பர். ஐம்பூதங்களில் ஒன்றிலொன்று கலந்திருப்பது போல, இத்தாளங்களும் ஒன்றிலொன்று கலந்து விரியும். இவற்றைத் தவிர, இன்னும் 108 தாளங்கள் உண்டு. ஒவ்வொரு தாளத்திற்கும் மாத்திரைக் கணக்குண்டு ; இன்ன காலத்தில் எடுத்தல், இத்தனை எண்கள் விடுத்தல், இத்தனை அடித்தல் என்று கணக்குண்டு. அவற்றிற்குத் தத்தகாரமும் உண்டு. “தரிகிடதகதிமி, தாதிகிணதோம் தகஜணு, தகிகிண தோம்” என்று தாளத்திற்கேற்ற தத்தகாரத்தை

மனத்திலுன்னியே மத்தளம் முழக்குவர். இவற்றின் விரிவையும் விளக்கத்தையும் மிருதங்க போதினியிற் கண்டுகொள்க. 'தாளவோத்து' என்று ஒரு பழந்தமிழ் நூலும் இருந்ததுண்டு.

தமிழகத்திற் பலவகை முழவுகள் வழங்குகின்றன. அவை பேரிகை, படகம் (சிறுமுழவு) இடக்கை, உடுக்கை, மத்தளம், சல்லிகை, கரடிகை, திமிலை, குடமுழா, தக்கை, தணற்பறை, டமருகம், தண்ணுமை, தடாரி, அந்தரி, முழவு, சந்திரவளையம், மொந்தை, முரடு, நிசாளம், சிறுபறை, அடக்கம், தகுணிச்சம், நாழிப்பறை, துடி, பெரும்பறை முதலியனவாம். இவற்றில், மத்தளம், இடக்கை, பேரிகை, கரடிகை, போன்றன அக முழவாம். தண்ணுமை, தக்கை, தகுணிச்சம் போன்றன அகப்புற முழவாம். கணப்பறை போன்றன புற முழவாம். நெய்தற்பறைபோன்றன புறப்புற முழவாம். இவற்றை முழக்கும் இடம் காலம் உண்டு. உதாரணமாக, போரில் முரசு, வீரமுழவு முதலியன முழக்குவர். காலையில் துடி முழக்குவர். நாழிகையறிவிக்க நாண்முழ வடிப்பர். இவையெல்லாம் காரணப் பெயர்களே. மத்து என்றால் ஓசை. எல்லா இசைவிருந்துகளுக்கும் தளமாயிருப்பதுபற்றி மத்தளம் எனலாயிற்று. "ஜல்" என்ற ஓசை செய்வதால் சல்லிகையாயிற்று. இடக்கையால் முழக்குவதால் இடக்கையாயிற்று. கரடிபோலச் சத்தமிடுவதால் கரடிகை யாயிற்று.

முழவாசிரியர் (1) ஆடல்வகை, (2) பாடல்வகை, (3) இசைநுணுக்கம், (4) இயல், இசை நாடகத் தமிழிலக்கணம், (5) ஏழுஸ்வரங்களில் அமைந்த இசைப்பாட்டு,

(6) இசை யுறுப்பாகிய தாளம், (7) செந்தூக்கு, மதலை, துணிபு, நிவப்பு, கோயில், கழால், நெடுந்தூக்கு ஆகிய ஏழு தூக்குகள், (8) இவற்றிற்கு ஒவ்வாத குற்றங் குறைகள், (9) இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்னும் தேசிகம்—ஆகிய ஒன்பது பொருளையும் பிழையில்லாமல் உணரவேண்டும். ஓர் உருவை இரட்டிக்கிரட்டி சேர்த்தல் கூடையாம். நடனத்தில் அவ்வாறு சேரும் இடத்தை, குறைவில்லாது மிகும்படி ஆவர்த்தனங்களைத் துரிதமாக வாசிக்கவேண்டும். வாரமாவது பின்பாட்டு; பின்பாட்டுப் பாடும் இடத்தில், இசையைச் சரியானபடி வாங்கி முழக்கல் வேண்டும். அவ்வாறு வாங்கி யடிப்பதில் யாழ், குழல், வாய்ப்பாட்டு அனைத்தும் இசைந்து கேட்கும்படி, கூத்தின் குறிப்பறிந்து, கூரிய நகங்களையுடைய விரல்களை மத்தளத்தில் சேர்த்து, இதமாக முழக்க வேண்டும். மற்றக் கருவிகளில் குறைவிழுந்தால் அந்த ஒலியை நிரப்பும்படி தத்தக்காரங்களை மிகுத்து வாசிக்க வேண்டும். மற்றக் கருவிகளும் பாட்டும் தெளிவாகக் கேட்கும்படி அடக்கி வாசிக்கவேண்டிய இடத்தில் அடக்கி வாசிக்க வேண்டும். பாட்டிற்கும் வாத்தியங்களுக்கும் வைத்துள்ள சுருதிக்கு அதிகமாகாமல், அதை ஒட்டி, அதில் லயிக்கும்படி, அளவாகக் கவனித்து, கைத்தொழிலை அழகுபெறச் செலுத்தி, சிதைவில்லாமல், கணக்குப்படி வாசிக்கும் மத்தளக்காரனாகிய அருந்தொழில் முதல்வன் நாட்டியத்திற்கு அமையவேண்டும்.



## கஉ. குழலோன்

குழல், வேங்கை, சந்தனம், மூங்கில், வெண்கலம், கருங்காலி முதலியவற்றாற் செய்யப்படும். இவற்றில் வேய்ங்குழல் மிகவினிது. குழல் சுமார் 20 விரற்கடை நீளமுள்ளது. நாலு விரற்கடை சுற்றளவுள்ளது. அதில் வெண்கலத்தால் அடைசு கட்டுவர். இடது வாயை அடைத்து வலதுவாய் திறந்திருக்கச் செய்வர். முதல் வாயினின்று ஏழு விரற்கடை, வளைவாயினின்று 2 விரற்கடை தள்ளி, நடுவிலுள்ள 9 விரற்கடையில் எட்டுத் துளையிடுவர். ஒன்று தொழிற்படாத முத்திரை. மற்ற 7 துளைகளிலும் ஏழு விரல்களை வைத்து வாசிப்பர். அவற்றில், இடக்கையில், சிறுவிரலும் பெருவிரலுந் தவிர மற்ற மூன்று விரல்கள், வலக்கையில் கட்டை விரல் தவிர மற்ற நான்கு விரல்கள் இருக்கும். குழல், நமது மூச்சினால் ஸப்தஸ்வரங்களை உயிர்த்து இசை தரும் கருவி. குழல், நாதஸ்வரம், பாண்டு முதலிய துளைக்கருவிகள் நமது மூச்சைக் கொடுத்து வாசிப்பதால் மிகவும் சிரமமான வாத்தியங்களாகும். கண்ணன் குழல் கோபியர் உள்ளத்தைக் கவர்ந்தது. பாம்பு, பசு போன்ற விலங்குகளும் குழலுக்குக் கட்டுப்படும். நாட்டியத்தில் குழலின் முதன்மையைத் தமிழர் நன்கறிந்து போற்றினர். இனிக் குழலோன் இலக்கணம் அறிவாம்.

இசைநூல்களிற் சொல்லிய இயல்பின்படி பாடலாசிரியன், இராக சஞ்சாரத்தில் இசைகொள்ளும் எழுத்துக்களின் மேல்வந்த வல்லொற்றுக்களை (க், ச், ட், த், ப், ற்)

மெல் லொற்றுக்கள்போலப் பண்படுத்துவான் ; இதற்குச் சித்திரப் புணர்ச்சி யென்பர். இசைகொள்ளாத எழுத்துக்களின்மேல் வரும் வல்லொற்றுக்களை மெல் லொற்றுக்கள் போலவே (ங், ஞ், ண், ந், ம், ன்) நெகிழ்த் துப் புணர்த்துவான். இதற்கு வஞ்சனைப் புணர்ச்சி யென்பர். இத்திறனுடைய பாடலாசிரியனை யொத்த அறிவு குழலாசிரியனுக்கும் வேண்டும். குழலில் சுட்டு விரல் முதலாக விட்டுப்பிடிப்பது ஆரோகணம். சுண்டுவிரல் முதலாக விட்டுப்பிடிப்பது அவரோகணம். ஆரோகணம் அவரோகணம் சேர்ந்து வர்த்தனையாகும். வர்த்தனையை நான்கு காலத்திலும் மயக்கமில்லாமல் தெளிவாக மூச்சைப் பெய்து வாசிக்கவேண்டும். இவ் வாறு வர்த்தனைகளால் சுமார் 103 பண்ணீர்மை வாசிக் கத் தெரிய வேண்டும். ஸ்வர வரிசையில் முதலான ஸ குரல் என்றும், ஐந்தாவது பஞ்சமமான ப இளி என் றும் பெயர்பெறும். இவை யிரண்டும் மாறாது இயல்பா யுள்ள சுருதிகளாம். எந்தப்பாடகனும் வாத்தியக்கார னும், முதலில் ‘ ஸா....பா....ஸா....பா.... ’ என்று குரலைச் சுருதியுடன் இணைத்துக்கொண்டுதான் பாடத் தொடங் குவான். இந்த இரண்டு ஸ்வரங்களும் கண்டசுத்தி செய்யும். ‘பா’ சுருதிகளுக்கெல்லாம் அடிமணைபோன் றிருப்பதால் அதற்குப் பட்டடை என்று பெயர். குழ லோன் ஊதும் ஷட்ஜம பஞ்சம சுருதிகள் அதாவது ஸா....பா, யாழிசைப் புலவன் நரம்பில் மீட்டுதற்கு ஒத்து இணைந்து கேட்கவேண்டும். அத்தனை லயக்கிரமத் துடன் யாழுடன் சேர்ந்து, மத்தளக்காரன் கெத்து களுடன் பொருந்திக் குழலூதவேண்டும். பாட்டின்

பஞ்சமச் சுருதியை எப்போதும் யாழில் இணைந்திருக்க வைத்து, பாடகன் பாடும் இராக இயல்பை யறிந்து, அந்த ராகத்தை வாங்கி, ஸ்வரசஞ்சாரத்தால் வளர்த்து, பாடகன் பாடும் பண்ணுக்கு வேறுபாடான பண் விரவாமல், அதாவது இராக வொழுங்கு பிசகாமல், பாடகன் பாட்டைத்தழுவி இன்பமாக குழலில் இயக்கி, இசைபட வைத்து வாசிக்கவேண்டும். முத நடை, வாரம், கூடை, திரள் என்று இசையில் நான்கு இயக்கங்கள் உண்டு. முதனடை மிக மெது வாகத் தாழ்ந்து இசைப்பது. திரள் மிகத் துரிதமாக முடுகிய நடையில் இசைப்பது. வாரம், சொல், இசை இரண்டும் ஒழுங்காக இசைப்பதாம். கூடை சொற்செறிவும் இசைச்செறிவும் உள்ள பாடல். இவற்றில் சொல்லொழுங்கும், இசையொழுங்கும் காட்டும் வாரம் வருமிடத்தை அபஸ்வரமில்லாமல், கேடில்லாமல், இராக சஞ்சாரங்களாலும், சரளி வரிசைகளாலும் வளர்க்கவேண்டும். பாட்டு மனத்தைக் கவரும் நயமுள்ள இடம் ஈர நிலம் ஆகும். அந்த சுவாரஸ்யமான, மதுரமான, இனிய இடங்களில், பாட்டுடன் ஒட்டி எழுத்தெழுத்தாக ச, ரி, க, ம, ப, த, நி ஆகிய ஸப்த ஸ்வரங்களும் கிணீரென்று கேட்கும்படி வழுவில்லாமல் ஊதும் குழலோன் பரத நாட்டியத்திற்கு வேண்டும்.



## கக. யாழோன்

தமிழர் பழம்பெரும் இசைக்கருவி யாழ். பேரி, சகோடம், மகரம், செங்கோட்டி என யாழ் நால்வகையாம். இவற்றிற்கு, முறையே 21, 16, 17, 7 தந்திகள் உண்டு. பண்டை யாழ் மறைந்தது. இப் போது வீணை, ஸித்தார், யஸ்ராஜ், கோட்டு, ஸ்வரகெத் முதலிய நரம்புக் கருவிகளே வழங்குகின்றன. இப் போது வழங்கும் வீணை பெரும்பாலும் செங்கோட்டி யாழைப் போன்றதே. யாழுக்குருகி இராவணனுக்கு ஆயுளும், ஆற்றலும், ஆயுதமும் ஈந்தான் இறை வன். மனிதவுடலில் இடா, பிங்கலா, சுழுமுனையாகிய நரம்புகள் இணைந்த மேருதண்டத்தின் அமைப்பைப் போலவே யாழும் அமைந்துள்ளது. மனிதக்குரலைப் போலவே யாழும் பேசவல்லது. தசவித கமகங் களும் வீணையிலேதான் சரியாகப் பேசும். மற்ற வாத்தியங்கள் மட்டமே.

இளங்கோவடிகள் பலவித ஸ்வரங்களையும் பண் களையும் யாழில் அமைக்கும் வகையைப்பற்றிக் கூறு கிறார் : அதற்கு வீணையின் தந்தியமைப்பும் மெட்டுக் களும் தெரியவேண்டிய தவசியம். வீணையில் ஏழு தந்திகள் உள்ளன. அவற்றில் பக்கத்தில் தனியேயுள்ள அனுசாரணை, ஹெச்சு பஞ்சமம், ஹெச்சு ஸாரணை இம்மூன்றும் மேளத் தந்திகள். இவை சுருதி கூட்டவே பயனும். வீணையின் மார்பில் உள்ள அனுமந்திரம், மந்திரம், பஞ்சமம், ஸாரணை இந்நான்கு தந்திகளையே இடது கை விரல்களை யழுத்தி மீட்டி இசையுண்டாக்கு

வர். வலதுகை இடைவிடாமல் மேளம்செய்யவேண்டும். வீணையில் இரண்டு ஸ்தாயி மெட்டுக்கள் உள்ளன. ஒரு ஸ்தாயிக்குப் பன்னிரண்டு வீதம் இரண்டிற்கு 24 மெட்டுக்கள் உள்ளன. இவ்வாறு நான்கு கம்பிகளுக்கும் 96 மெட்டுக்கள் அல்லது வீடுகள் உள்ளன.

ஸ்தாயி விவரம் அறிவாம்:—ச, ப இரண்டும் மாருத சுருதிகள். மற்றவையெல்லாம் மாறுவன. இம் மாற்றங்களெல்லாம் சேர்ந்து 16 ஸ்வரபேதங்களாம் :

ஸ ஷட்ஜம்; ரி, சுத்த ரிஷபம், சதுஸ்ருதி ரிஷபம், ஷட்ச்ருதி ரிஷபம்; க, சுத்த காந்தாரம், சாதாரண காந்தாரம், அந்தர காந்தாரம்; ம, சுத்த மத்திமம், பிரதி மத்திமம்; ப, பஞ்சமம்; த, சுத்த தைவதம், சதுச்ருத தைவதம், ஷட்ச்ருதி தைவதம்; நி, சுத்த நிஷாதம், கைசகி நிஷாதம், காகலி நிஷாதம் ஆக ஸ்வர பேதங்கள் 16 ஆம். இப்பதினாறு ஸ்வர பேதங்களில், (1) சதுச்ருதி ரிஷபமும் சுத்த காந்தாரமும், (2) ஷட்ச்ருதி ரிஷபமும் சாதாரண காந்தாரமும், (3) சதுச்ருதி தைவதமும், சுத்த நிஷாதமும், (4) ஷட்ச்ருதி தைவதமும் கைசகி நிஷாதமும் தனித்தனி ஒரே ஸ்தானத்தை அடைவதால் இந்த எட்டிற்கும் நான்கு சுர ஸ்தானங்களே வழங்கும். ஆதலால் பதினாறிலிருந்து நான்கைக் கழித்துப் பன்னிரண்டு சுரஸ்தானங்களே பல இசைக்கருவிகளில் காணும். இவற்றில் எச்சு ஸ்தாயியை வன்மையென்றும், ஷட்ஜம ஸ்தாயியை மென்மையென்றும், மத்திமத்தை சமன் என்றும் சிலப்பதிகாரம் குறிக்கிறது. ஸப்த ஸ்வரத்திற்கும் முற்காலம் வழங்கிய தமிழ்ப் பெயரை முன்பே குறித்தோம். அப்பெயர்களை நினைப்

பில் வைத்துக்கொண்டு யாழாசிரியன் அமைதியைப் படியுங்கள் :—

இந்த யாழில் முழக்குவது ஆயப்பாலை. ஆயப் பாலை பதினுன்கு கோவைகளாகப் பொலிவது. இப்பதினுன்கும், செம்மையாகத் தெளிவாக முறை யாக மீட்டுதல் வேண்டும். அவற்றில் ஏழு பாலைப் பண்களை நிறுத்தல் வேண்டும். ஏழு பாலைகளாவன :— செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும் பாலை, கொடிப்பாலை, மேற்செம்பாலை, விளரிப்பாலை என்பனவாம். இப்பாலைப் பண்களை எப்படி மீட்டுவது, அதற்கு என்னென்ன ஸ்வரங்களைச் சேர்ப்பது என்று இனிச் சொல்லுகிருர் ஆசிரியர்:

வல்லோசையுடையது நிஷாதம், தாரம், நி. மெல் லோசையுள்ளது குரல், ஷட்ஜமம், ஸ. இவையிரண்டும் மெய்க்கிளை நரம்பில் கைக்கிளையாகிய காந்தாரத்தைக் (க) கொள்ளுகின்றன ; அவை நிக ஸக ஆகின்றன. காந்தாரம் ஒழிந்த மற்றப்பாகத்தில் தாரம் நி, விளரி (தைவதம்) த அதாவது நித விரவும். மற்ற ஸ்வரங்களும் ஒன்றிலொன்றழிந்து லயமாகிக் கிளை வழி சேர்ந்து மேல்ஸ்தாயி உழை அல்லது மத்திம மாயும், கிழிசை கைக்கிளையாகிய காந்தாரமாகவும் நிற்பது அதாவது மக வாக முடிவது செம்பாலை யென்க. அதாவது செம்பாலைக்கு, நிக, ஸக, நித, மக என்னும் ஸ்வரங்கள் வேண்டியனவாம். இறுதி இசையான நிஷாதம் ஆதியாக, மற்ற ஸ்வரங்கள் முறை பிறழாமல் வந்து கவும், ஸவும் கூடி, படுமலைப் பாலை யும், ரியும் ஸவும் கூடி செவ்வழிப் பாலையும், ஸவும் ஸவும்

கூடி அரும்பாலையும் ஆம். அரும்பாலைக்கு ஜெண்ட வரிசை மாதிரி ஸ்வரங்கள் இரட்டிக்கும். இவ்வாறே தற்கிழமை திரிந்த பின், அதாவது ஸ்வரமேதமாகியபின், முன்போலவே, தாரமாகிய நி யும் குரலாகிய ஸ வும் சேர்ந்து கோடிப் பாலையும், விளரியாகிய த வும் ஸவும் சேர்ந்து விளரிப் பாலையும், இளியாகிய பவும் ஸவும் சேர்ந்து செம்பாலையும் ஆம். இவ்வாறு பதினான்கு கோவைப்பாலையும் யாழில் மீட்டப்படும். எந்தப் பாலைக்கு எந்த நரம்பு சரியானது, எந்த ஸ்வரங்கள் இணைந்து குறித்த பண் முழங்கும் என்று அணைவுறத் தேர்ந்துகொண்டு, அததற்கு அடைவான ஸ்வரங் களைப் பெய்து யாழிசைக்க வேண்டும். யாழில் எவ் வகை, குழலில் எவ்வகை, இசைவலிவும் மெலிவும் காட்ட வேண்டுமென்றும் புலவனுக்குத் தெரிய வேண்டும். யாழில் அரும்பாலை முதலியன இட முறை மெலியும்; குழலில் கொடிப்பாலை முதலியன வலமுறை மெலியும். இவ்வாறு வலிய, மெலிய, சமனான ஸ்வரங்களை, இசை பொலிவுறும்படி கோத்து, ஸ்வர சஞ்சாரம் திறமையுறச் செய்யும் புலமையுடையோனே யாழாசிரியனாவன். அவன் 103 பண்கள் பயின் றிருக்க வேண்டும்.

இக்காலம் பாலைப்பாட்டு வழக்கில் இல்லை. இப்பகுதியில் வரும் ஸ்வரத்தின் பெயர்களைக் கொண்டே ஒருவாறு அதைத் தெளிவுபடுத்த முயன் றுள்ளேன். பண்டிசை கற்ற புலவர் காணும் வேறு பொருளையும் கொள்க.



# கசு. அரங்கமைப்பு



முற்காலத் தமிழர் அருங்கலைகளை எத்துணை போற்றினர் என்று பாருங்கள்! ஓர் அருங்கலைப் புலவனுக்கும், கலாவதிக்கும் தமிழ் மன்னரும், குடிகளும் சேர்ந்து செய்யும் சிறப்பைக் காணுங்கள்! சிற்ப நூலிலக்கணப்படியே மாதவி நடனத்திற்கு அரங்கமைக்கின்றனர். அரங்கத்திற்கு நிலம் எப்படியிருக்க வேண்டும்? கோயில், பள்ளி, அந்தணர் இருக்கை, ஊருணி, கிணறு, சோலை, புட்கள் முதலியவற்றிற்குக் கேடில்லாமல், உவர், ஈளை, களி, சாம்பல், நாற்றம், பொடி மண் இவை இல்லாததாய், ஊருக்கு நடுவே, தேரோடும் வீதிகளுக்கு எதிர்முகமாக நிலம் அமைக்கவேண்டும். அத்தகைய குற்றமற்ற நிலத்தைத் தேர்ந்தெடுத்தனர். புண்ணிய நெடுவரையாகிய பொதிகையினின்று கண்ணிடை ஒருசாண் கொண்ட மூங்கிலைக் கொணர்ந்து, நல்ல வளர்ச்சிபெற்ற ஆளின் பெருவிரல் 24 கொண்ட அளவில் ஒரு கோல் நறுக்கினர். அதுவே அக்கால *அளவுக்கோல். அதனால் அரங்கின் அகலம் ஏழுகோல், நீளம் எட்டுக்கோல், குறட்டின் உயரம் ஒருகோல் அமைத்தனர். அரங்கின்மேல் பலகை பதித்தனர். அதற்கும் தூண்களின் மேல் பாவிய உத்தரப் பலகைக்கும் இடையே நான்கு கோல் உயரம் இருக்கச் செய்தனர்.

---

* முற்கால நீட்டலளவையைக் காண்பாம் :—அணு 8—1 தேர்த்துகள். தேர்த்துகள் 8—1 இம்மி. இம்மி 8—1 எள். எள் 8=ஒரு நெல்லு. நெல் 8=ஒரு பெரு விரல்.

அரங்கிற் புகவும், அரங்கினின்று செல்லவும் இரண்டு வாயில்கள் அமைத்தனர். அத்துடன் மன்னர் தமது ஐங்குழுவுடன் அமரத்தக்க இடமும் அரச சேவகருக் கேற்ற இடமும், மாந்தர் அமர்ந்து பார்க்கத்தக்க இடமும் முறையாக அமைத்தனர். பிறகு யாவரும் தொழு தேத்தும்படி பூதகணங்கள், நந்தி, அரசன், யானை, பாவை, விலங்குகள் முதலிய உருக்களை அரங்கின் மேலே யெழுதினர். தூண்களின் நிழல் நாயகப்பத்தி (ஆடும் இடம்)யில், விழாமல் மாண்சுடர் காந்தும் நிலை விளக்குகளை யேற்றினர். பிறகு மூன்று திரைகள் அமைத்தனர். அவையாவன :—(1) இடத் தூணுடன் பொருந்திய ஒருமுக எழினி, (2) வலத் தூணிடத்தே யமைந்த பொருமுக எழினி (3) மேற் கட்டுத் திரையான கரந்து வரல் எழினி. பிறகு சித்திர விதானம் விரித்தனர். அதன் மேல் சிறந்த முத்துமாலைகள், பூமாலைகள் வளைவாகத் தொங்கவிட்டு அரங்கை அலங்கரித்தனர். இவ்வாறு கண்ணுக்கு விருந்தாயமைந்த அரங்கில் இனித் தலைக்கோல் நாட்டுகின்றனர்.

## தலைக்கோல் சிறப்பு

தலைக்கோல் என்பது நாடகக் கணிகைக்குச் சிறப்புச் செய்யும் ஒரு கோலாகும் ; பட்டமுமாகும். பகைவர் புறத்தே அறுத்த மூங்கில், புண்ணிய மலையினின்று கொணர்ந்த மூங்கில், அல்லது பகைவரைப் புறங்காட்ட அடித்து அவரிடம் கைப்பற்றிய வெண்குடைக் காம்பு. இம்மூன்றையும் தலைக் கோலாகப் பயன் படுத்தலாம். மன்னன் பகைவரைப் பொருது, புறமுறுத்தி அவ்வழி

யிற்பெற்ற வெண்கொற்றக் குடைக்காம்பையே மாத விக்குத் தலைக்கோ லாக்கினர். அதன் நீளம் ஏழுச் சாண். அதன் கணுக்களில் நவமணி பதித்தனர். இடையிலுள்ள பாகத்தைச் சாம்பூநதம் என்னும் தங்கத் தகட்டால் மூடினர்.

முன்னே சயந்தன் மூங்கிலான கதையைச் சொன் னோம். தலைக்கோலைச் சயந்தனாகவே பாவித்து, அதற்கு ஒரு நன்னாட் பார்த்து, பொற்குடத்திற் புண்ணி யப்புனல் கொணர்ந்தாட்டி, மாலை சூட்டினர் ஆடலா சிரியன் முதலானோர். பிறகு, அழகிய பொன்னணியும் நெற்றிப் பட்டமும் கொண்ட அரச யானையின் தடங் கையில் வாழ்த்துடன் அத்தலைக்கோலைத் தந்து ஊர்வலஞ் செய்தனர். வீர முரசம் இயம்பியது; பல வாத்தியங் கள் முழங்கின. அரசனும், தனது ஐம்பெருங் குழு வாகிய, அமைச்சர், புரோகிதர், படைத்தலைவர், தூதர் சாரணர் முதலியவர்களுடன் தேர்மேலேறி ஊர்வலத் துடன் கலந்து கொண்டான். பிறகு தலைக்கோலைக் கவியின் கையிற் கொடுத்தனர். கவிக்குக் கலையுலகில் முதன்மை யளித்தனர் அக்காலத்தார். இவ்வாறு ஊர் வலம் வந்தவர் அரங்கிற் புகுந்தனர். இத்தனைச் சிறப்புச் செய்து தலைக்கோல் பெற்று, மாதவி அரங்கில் அடி யெடுத்து வைத்தாள்.



# மாதவி நடனம்



எண்ணு மெழுத்து மியலைந்தும் பண்ணான்கும்
பண்ணின்ற கூத்துப் பதினொன்றும்—மண்ணின்மேற்
போக்கினாள் பூம்புகார்ப் பொற்றொடி மாதவிதன்
வாக்கினால் ஆடரங்கின் வந்து.

## கரு. மாதவி நடனம்



மன்றத்தில் அரசன், அமைச்சர், கலைஞர், அறிஞர், பொதுஜனங்கள் யாவரும் அவரவர் தகுதிக் கேற்றபடி யமர்ந்தனர். ஆடிட முக்கோல், நிலையிடம் ஒருகோல், பாடகர்க்கு ஒருகோல், *குயிலுவர் நிலையிடம் ஒருகோல் என்ற ஒழுங்குப்படி தொழிலாளர் நின்றனர். எல்லாம் தயாரானதும், மாதவி வலக்காலை முன் வைத்துப் பொருமுக எழினியுள்ள அரங்கேறி வலது தூண்பக்கம் சேர்ந்தாள். ஒருமுக எழினியுள்ள இடது தூண்பக்கம் †தோரிய மடந்தையர், மாதவி வந்தேறியபடியே வலது காலை முன்வைத்தேறி வந்து நின்றனர். நன்மை யாகவும், தீமை யேகவும் முதலில் ‡தெய்வப் பாடல், ஓரொற்று ஈரொற்று ஆகிய இரண்டு வாரச் செய்யுள், பாடுகின்றனர். அதன் முடிவில் யாழ், குழல், மத்தளம், இடக்கை முதலிய கருவிகள் சேர்ந்து இன்பமாக இசைக்கின்றன.

> கூடிய குயிலுவக் கருவிக ளெல்லாம்
> குழல்வழி நின்ற தியாழே ; யாழ்வழித்
> தண்ணுமை நின்றது தகவே ; தண்ணுமைப்
> பின்வழி நின்றது முழவே ; முழவொடு
> கூடிநின் றிசைத்த தாமந் திரிகை.

குழல், யாழ், மத்தளம், முழவு, இடக்கை, ஆமந்திரிகை முதலிய வாத்தியங்களெல்லாம் ஒன்றை

---

* யாழ், குழல், இடக்கை முதலிய கருவிகளை வாசிப்பவர்.

† ஆடி மூத்தவர். நாட்டியத்திற்குத் துணை செய்பவர்.

‡ அலாரிப்பு.

யொன்று தழுவி, ஒன்றிலொன்று கலந்து, ஒன்றை யொன்றனுசரித்து இசையெழுப்பின. பருந்தும் நிழலும்போலே ஆமந்திரிகையுடன் கொட்டும் தொடர்ந்தது. இரண்டு கொட்டுடன் மண்டலமாக, (ஒரு தாளத்திற்கு இரண்டு பற்றாக ஐந்து தாளத்திற்கும் பத்துப் பற்றும், ஒரு தீர்வும் ஆகப்) பதினொரு பற்றால் சாத்திரப்படிக்குப் பரம்பரையாக வந்த முறை வழுவாமல் தேசிகக் கூத்தாடி, "அந்தரக் கோட்டு" என்னும் ஆரம்ப நடனத்தைச் செய்து முடித்தாள் மாதவி. சுருதி, தாளம், வாத்தியம் இவற்றின் ஒழுங்கைப்பற்றி, அளவு கோடாமல், ஆலாபனம் செய்து, பாலைப்பண் முழக்கினர். உக்கிரம், துருவை, ஆபோகம், பிரகலை முதலிய நான்கு உறுப்புக்களும் நிறைவாக, நன்றாக மங்கலப் பண் அறிந்து, மூன்று ஒற்றளந்து, ஒன்று கொட்டி, ஐந்து மண்டிலத்தால் தேசிகக் கூத்தெல்லாம் ஆடி முடித்ததும், மார்க்க நடனம் நடந்தது. ஆறும் நாலும் பத்து, அதாவது இரட்டித்த பஞ்ச தாளத்துடன், முன் முறையாக, முத்தாளம் முதலாக, ஏகதாளம் ஈறாக வைசாக நிலையிலே ஆடி முடித்தனள் மாதவி.

மன்னன் மகிழ்ந்தான். ஒரு பொன்னியல் பூங்கொடி நேர்நின்று கூத்தாடினாற்போலே, தாண்டவம், நிருத்தம், நாட்டியம் என்னும் மூன்றையும் விலக்குறுப்புப் பதினொன்கும் வழுவாமல் சாத்திரப்படி பரவசந் தோன்ற ஆடிக்காட்டிய பூங்கோதைக்கு, அரசன் பரிசளித்தான். இனி மாதவி நடனக்கலை வளர்க்க உரியள் என்பதற் கடையாளமாகத் தலைக்கோ லீந்தான். மாதவி இவ்வாறு முன்னே அரங்கேறித் "தலைக்கோல்

அரிவை ” என்ற பட்டம் பெற்ருள் ; அரசனிடமிருந்து ஓர் இலைப் பூங்கோதையுடன் ஆயிரத்தெட்டுக் கழஞ்சு பொன்னும் பெற்ருள். இது விதிமுறைப்படி ஒரு நாளைக்குப் பரியமாகும்.

மன்னன் அளித்த மாலையை, மான்விழிக் கூனி கை கொடுத்து, நகர வாலிபர் திரியும் ஒரு தெருவில் அவளை நிறுத்தினுள் மாதவி. எதற்கு ? 1008 கழஞ்சு பொன் கொடுத்து இம்மாலையை விலைக்கு வாங்குவோரே, அக்கால வழக்கப்படி, மாதவியின் மணாளராவர். அக்குறிப்பை யுணர்த்தி மாலையை விலை கூறுபவள் போலே நின்ருள் கூனி. மாதவி யழகையும், அவள் அரங்கேறிய சிறப்பையும் கண்டு, அவள் வசம் மனம் பறிகொடுத்தான் ஓர் அழகிய வாலிபச் செல்வன். அம்மாலையை வாங்க வந்த அந்த அழகனே கோவலன். மாலை பெற்ற கோவலன், கூனியுடன் மணமனைபுக்கு, மாதவியைக் கூடி, தேனில் விழுந்த வண்டைப்போல அவள் மையலில் சொக்கி மயங்கி, அவளை விட்டுப் பிரிய முடியாமல், காதல் பெருகி, மாசற்ற கற்பிற் சிறந்த தனது மனைவியான கண்ணகியை மறந்தான்.



## கக. அந்தி மாலைச் சிறப்பு

கூடினார் பால்நிழலாய்க் கூடார்பால் வெய்யதாய்க்
காவலன் வெண்குடைபோற் காட்டிற்றே—கூடிய
மாதவிக்குங் கண்ணகிக்கும் வானூர் மதிவிரிந்து,
போதவிழ்க்குங் கங்குற் பொழுது.



உலகரசனாகிய பரிதி மறைந்தான் ; திரை நீராடையணிந்த நிலமகள், "விரிகதிர் பரப்பி, உலகம் முழுதையும் ஆண்ட ஒற்றைத் தேராழியான் ஆகிய பகலவனைக் காணேனே ! அங்கண் வானத்தில் அணி நிலா விரிக்கும், அழகிய திங்கட் செல்வன் எங்கேயிருக்கிறான் ?" என்று மனஞ் சுழன்று வருந்தினாள். அவளது நாற்றிசை முகம் பசப்பூர்ந்தது (பசு வெயில் பரந்தது) ; செம்மலர்க் கண்கள் முழுநீர் வாரின. (செம்மலர்கள் கள்ளுகுத்தன) ; மேனி முழுதும் பனித்தது (பனி பெய்தது).

அப்போது, மாலை உலகைப் படையெடுத்து வெல்லும் நேர்த்தியைப் பாருங்கள் :—தாம் வணங்கும் உயிர்த்துணைவரைப் பிரிந்தவர் தனித்துயரெய்துகின்றனர். காதலரைக் கூடினோர் களிமகிழ்வெய்துகின்றனர். புல்லாங் குழலில் முல்லைப்பாட்டு வளர்கிறது ; அதை ஊதுவோர் கோபாலர்களாவர். மாதர் குழலிலும் முல்லை வளர்கிறது. அதை வாய் வைத்து ஊதி, முல்லைப்பண் முழக்குவது மழலைத் தும்பியாம். இவ்வாறு ஆறுகால் உடைய வண்டு இடைப்புகுந்து, பூவிற் பொதிந்த மணத்தை நுகரப் பார்க்கிறது. அப்போது

தென்றலஞ் செல்வன் வந்து, அந்த மணத்தைத் தான் கொண்டு தெருவெல்லாம் பரப்புகிறான். வெவ் வளைக் கையராகிய பெண்டிர், மணிவிளக் கேற்றுகின்ற னர். வெற்றிச் சேனையுடைய மன்னன் இல்லாதபோது, தேசத் துரோகிகளான கெட்ட குடிகளை ஒரு தலையாகப் பற்றி, (ஒழுங்காக வரிசெலுத்தி அரசனுக்கு அடங்கி நடக்கும் குடிகள் கையைத் தலைமேல் வைத்து வருந் தும்படி),ஓர் அயல் அரசன் நிலங்கெட வந்து புகுந்தால் எப்படியிருக்கும்? அப்படியே பகலவன் இல்லாதபோது பெரிய மூதூரான புகாரில் மாலை வந்து புகுந்தது. அந்த மாலையை ஓட்ட வருகிறது வெண்பிறை. பாண்டியர், சோம குலத்தவராவர். அவர் வயதில் இளையவராயினும் பகையரசரை ஒறுக்க வல்லவராவர். போரிற் சிறந்த அத்தகைய தென்னவர் குல முதல்வனான வெண்பிறை, அந்திவானத்தில் தோன்றி, அற்பாயுள் உள்ள மாலையைக் குறும்பெறிந் தோட்டுகிறது. திங்களின் பான்மை, தனது கறையிருளைக்கூடக் கருதாது, உலகின் நிறை யிருளை நீக்குவதல்லவா? அப்பான்மை திரியாமல் திங்கள் பால்போன்ற கதிர்பரப்பி, மீனரசனாக உலகை ஆளுவதால், எங்கும் வெள்ளொளி விளங்குகிறது.

* * *

இந்த நிலவுப் பயன் கொள்கின்றனர் காதலராகிய கோவலனும், மாதவியும். நெடுநிலா முற்றம்; அதில், வீட் டில் வளரும் முல்லை, மல்லிகை, முதலிய மாலை, மலர்ந்த மலர்கள் பல மேவிய பூம்படுக்கையில் இருவரும் பொலி கின்றனர். மாதவியின் அழகிய புடைவைமேல் செம்ப வளக் கோவை செறிந்த மேகலாபரணம் அசைகிறது.

இருவரும் எதிரெதிர் இருந்து, கலவியும் புலவியுமாகக் காதற் களிப்பெய்துகின்றனர். ஆர்வ நெஞ்சமுடன், மாதவி, கோவலனைத் தழுவி முயங்குகின்றாள்; அம் முயக்கத்தாற் கலைந்த அழகை மீண்டும் திருத்திக் கொண்டு, புத்தழகுடன் கோவலனுக்குப் பின்னும் வேட்கை விளைவிக்கிறாள். மேற்றிசையினின்று வந்த கண்டு சர்க்கரையுடன், கிழக்கே விளையும் காரகிலும் சேர்ந்த தீம்புகை கமழ்கின்றது. வடமலையிற் பிறந்த சிலாவட்டத்தில் (சந்தனக் கல்லில்), தென் மலைச் சந்தனக்கட்டை அரைபடுகிறது. தாமரை இளந் தளிர், அதன் மலர், தாதுகுஞ் செழுமலர், அழகிய குவளை, கழுநீர் மாமலர் பைந்தளிர்கள் எல்லாம் சேர்ந்த *படலை மாலையும், கோவையுற்ற பருமுத்தமும் சுந்தரச் சுண்ணத் துகளுடன் அளைந்து சிந்திக்கிடக்கின்றன. அவ்வாறு காதலர் செழுமலர் மெத்தையிற் சேர்ந்து களிக்கின்றனர். மந்தமாருதம் வீசுகிறது; காதலர், ஒருவரிலொருவர் மயங்கி, இன்னும் காதல் மலிந்தனர். ஆருயிர்க் கணவர் மார்பில், காவியங் கண்களைப் பொருந்தவைத்து மகளிர் இன்பத் துயிலெய்தினர். மாதவி மனையில் கலவியின்பம், இன்பம்!

* * *

இச்சமயம் கணவனைப் பிரிந்த பத்தினி கண்ணகி நிலைமை யென்ன? கலக்கம்! துன்பம்! துன்பம்!

“அஞ்செஞ் சீறடி அணிசிலம் பொழிய,
மென்றுகில் அல்குல், மேகலை நீங்கக்

* படலை மாலை=பூவும் பச்சிலையும் சேர்ந்தமாலை.

கொங்கை முன்றில் குங்கும மெழுதாள்
மங்கல அணியிற் பிறிதணி மகிழாள்
கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்.
திங்கள் வாண்முகம் சிறுவியர் பிரியச்,
செங்கயல் நெடுங்கண் அஞ்சன மறப்பப்
பவள வாணுதல் திலக மிழப்பத்
தவள வாணகை, கோவல னிழப்ப,
மையிருங் கூந்தல், நெய்யணி மறப்பக்
கையறு நெஞ்சத்துக் கண்ணகி......"

சேவடி சிலம்பிழந்தது. மெல்லிய ஆடையணிந்த அல்குல் மேகலையிழந்தது. கண்ணகி கொங்கையிற் குங்குமம் எழுதாள். மாங்கல்யந் தவிர வேறணி விரும்பாள். காதிற் குழையில்லை. மதி முகத்தில் சிறு வியர்வை பிரிந்தது. கண்ணில் அஞ்சனம் இல்லை. நெற்றியிற் பொட்டில்லை. அவளது வெண்ணகை, கோவலனை யிழந்து மங்கியது; கூந்தலுக்கு நெய்தடவி வாரவும் மறந்தாள். மனமுடைந்து கவலைபெருகி, நாயகனையே நினைத் தேங்கினாள் கண்ணகி, பத்தினி.

இவ்வாறு காதலரைப் பிரிந்து மெலியும் மாதர், கண்டார் வருந்தும் நிலைமையில் இருக்கின்றனர். அவர் உலைத்துருத்தியின் மூக்கைப் போலத் தமது கணவரை நினைத்து நெட்டுயிர்க்கின்றனர்; மேனி யொடுங்குகின்றனர்; இளவேனிற் பள்ளி மேவாது, ஒழிந்து, குளிர்காலப் பள்ளியடைந்து, தென்றலும், நிலவும் புகாமல், சாளரங்களை இறுக அடைத்து, முடங்குகின்றனர்; மலயச் சந்தனமும், மணி முத்தாரமும் தமது மலர்முலை மார்பை அடையாமல் வருந்தச் செய்கின்ற

னர் ; தாழியிற் பெய்த குவளையும், குளிர்ந்த செங்கழுநீர் மலரும் தாம் படுக்கும் பள்ளியில் மேவாது விலக்குகின்றனர். ஆணைக் கூடும் அன்ன முதிர்த்த தூவி நெருங்கிய அடுக்கு மெத்தையில், முன்னே கணவருடன் கூடிய காலத்தைப்போல, இப்போது களிதுயில் கொள்ளார் ; உள்ளங் கலங்கிக் கடை சிவந்து, குறுக்கிட்டுப் பிறழும் நெடுங்கண், இரவெல்லாம் புலம்பி முத்திறைப்ப வருந்துகின்றனர்.

* * *

இனிப் பொய்கையை ஒரு பெண்ணாக வர்ணிக்கிறார். நன்னீர்ப் பொய்கை யென்னும் பெண், அன்னமாகிய மென்னடை யுடையாள் ; தேன் பொதிந்த நறுமணச் செம்மலர் வாயாள் ; கருமணலில் அலையுந் தெண்ணீர் போலச் சுருட் கூந்தலாள் : காலையில், பாண் வாய் வண்டு, புறநீர்மைப் பண் பாடியதும், அழகிய குவளைக்கண் விழித்தெழுகின்றாள். புள்வாய் முரசம் முழங்குகிறது ; கோழி கூவுகிறது ; முள்வாய்ச் சங்கம் முறை முறை ஆர்க்கிறது. கடல்போன்ற பரப்பையும் ஒலியையும் கொண்ட ஊரைத் துயிலெழுப்பிக் காலை வந்து புகுகின்றது. இரவு நீங்குகிறது. மாலை முதல் வைகறை காறும், நள்ளிரவிலும் ஒருபோதும் உறங்காமல், மணமலர்க் கணையுடன், கரும்பு வில்லைப் பிடித்து, மகரக் கொடியோனான மன்மதன் எங்கும் திரிவதனால், இந் நகரக் காவல் மிகச் சிறந்ததாம். கூடினோர்க்கும், பிரிந்தோர்க்கும் உறக்கமில்லாமல் இரவெல்லாம் கணைபாச்சித் திரிகிறான் மாரன்.



## ௧௭. இந்திர விழா



பூம்புகாரது செல்வச் சிறப்பையும், தொழில் வளத்தையும், நகரமைப்பையும் முன்பே யறிந்தோம். இந்த நகரில் சித்திரை தோறும், இந்திர னுக்குத் திருவிழா நடப்பதுண்டு. இந்திரன் வேதக் கடவுளர் தலைவன். அவன் தனது வச்சிரத்தால் அரக் கரை வென்று அமரரைக் காத்து, அமுத மளிப்போன் ஆவன். அகத்திய முனிவர் ஆணைப்படி, தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் காலம் முதல், வழி வழியாகச் சோழ மன்னர் இந்திரனுக்குத் திருவிழா நடத்தி வந்தனர். ‘ இத் திருவிழாவினால், அரசும் ஞால மும் நலமுறும். இத் திருவிழாவை மறுத்தால் அவை கேடுறும் ’ என்று அக்காலத்தவர் நம்பினர். இவ் விழா, இருபத்தெட்டு நாட்கள் நடக்கும். பூம்புகார் சிறப் பைச் சொல்லும் கட்டுரையில் இவ்வூரில் ஐந்து வகை யான மன்றங்கள் உண்டென்றோம். அவற்றில் அரும் பலியிட்டு இந்திரவிழாத் தொடங்குவர். இந்திரன் கோயிலுக்குக் காப்புக்கட்டி, வச்சிரக் கோட்டத்தில் உள்ள மங்கல முரசைக் கச்சை யானையின் பிடர்த்தலை யேற்றி, ஐராவதம் இருக்கும் கோயிலில், ‘ விழாவின் முதலும் முடிவும் ’ சாற்றுவர்; நிலைபெற்ற கற்பகக் கோட்டத்திலுள்ள மங்கல நெடுங்கொடியை வானுறப் பறக்க விடுவர். இவ்வாறு திருவிழாவிற்குக் கால்

*நாட்டி, முதுகுடிப்பிறந்தோன் முரசறிவிக்கும் வகையை மணிமேகலை அடியில் வருமாறு கூறும் :—*

“ஆயிரங் கண்ணோன் விழாக்கால் கொள்கென,
வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசம்
கச்சை யானைப் பிடர்த்தலை யேற்றி,
முரசு *கடிப்பு †இகூஉம் முதுகுடிப் பிறந்தோன்
திருவிழை மூதூர் வாழ்கென் றேத்தி, - - -
வானமும் மாரி பொழிக, மன்னவன்
கோணிலை திரியாக் கோலோ னுதக ! - - -
தோரண வீதியும், தோமறு ‡கோட்டியும்
பூரண கும்பமும், பொலம்பா லிகைகளும்,
பாவை விளக்கும், பலவுடன் பரப்புமின் !
காய்க்குலைக் கமுகும் வாழையும், வஞ்சியும்,
பூக்கொடி வல்லியும், கரும்பும் நடுமின் !
பத்தி வேதிகை பசும்பொற் றூணத்து
முத்துத் தாம முறையொடு நாற்றுமின் !
விழவுமலி மூதூர் வீதியு மன்றமும்
பழமணல் மாற்றுமின், புதுமணல் பரப்புமின் !
கதலிகைக் கொடியும் காழூன்று §விலோதமும்
மதலை மாடமும் வாயிலும் சேர்த்துமின்
¶நுதல்விழி நாட்டத்து இறையோன் முதலாப்
பதிவாழ் சதுக்கத்துத் தெய்வம் ஈறாக
வேறு வேறு சிறப்பின் வேறுவேறு செய்வினை
ஆறறி மரபின் அறிந்தோர் செய்யுமின்
தண்மணற் பந்தரும், தாழ்தரு பொதியிலும்,
புண்ணிய நல்லுரை யறிவீர் பொருந்துமின் !”

---

* கடிப்பு=முரசடிக்கும் தடி. † இகூஉம்=அறையும்.
‡ சபை, கோயில் வாயில். § காம்பு ஊன்றிய பெரியகொடி.
¶ சிவன், நெற்றிக்கண்ணன்.

"ஒட்டிய சமயத்து உறுபொருள் வாதிகள்
பட்டிமண் டபத்துப் பாங்கறிந் தேறுமின் !
பற்றா மாக்கள் தம்முட னாயினும்
செற்றமும் கலாமும் செய்யா தகலுமின் !
பசியும் பிணியும் பகையு நீங்கி
*வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி
அணிவிழா அறைந்தனன் அகநகர் மருங்கென் !"

இதனால் முற்காலத்தில் திருவிழாக்கள் மக்களின் ஒற்றுமைக்கும், சமயவளர்ச்சிக்கும், சர்வமத சமரஸத்திற்கும், கலை வளர்ச்சிக்கும், பொதுநல வுணர்ச்சிக்கும் ஏதுவாயிருந்தன வென்பது விளங்கும்.

* * *

கோவலன் காலத்திலும் இந்திர விழாவிற்கு இவ்வாறே முரசியம்பினர். அந்நகர் மாளிகைகள் மரகத மணியும், வயிரமும் குயிற்றி, பவளத்திரள் கால் நட்ட திண்ணைகளைக் கொண்டன. அம்மாளிகை வாயிலில் மகர மீன்கள் போல வாய்பிளந்த தூம்புகள் இருந்தன. அவற்றில் கொம்பும், முத்தொழுங்கும், இணைமீன், முரசு, பதாகை, கவரி, நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, விளக்கு ஆகிய அட்ட மங்கலங்களும் பொறித்து மாலை வடிவாகச் செய்த மகர தோரணங்கள் தொங்கின. இவ்வாறு அலங்கரித்த வீதிகளில், பசும்பொன்னால் ஆன பூரண கும்பம், பாலிகை, பாவை விளக்கு, பசும்பொற் கொடிகள், தூய மயிர்க்கவரி, அழகிய சுண்ணம் முதலியவை செறிந்தன. அரசனது ஐம்பெருங் குழுவும், எண்பெரும் ஆயமும், அரச குமர

* வசி = நீர் மழை.

ரும், பரத குமரரும் (வணிகர்), கண்ணைக் கவரும் பரிமேல் ஏறிய குதிரைவீரரும், யானைவீரர் தொகுதியும், குதிரை பூட்டிய தேரினரும் இசைந்து, ஒருங்கு கூடினர். இவ்வுலகின்கண் அரசு மேம்பாடடைய வேண்டி, புகழ்பெற்ற 'மன்னன் வெற்றி கொள்க' என்று அவர் வாழ்த்தினர். ஞாலக் காவலரான 1008 அரசர் தலையிற் சுமந்த, (அல்லது 1008 அரசர் மகுடத்தாற் செய்த) பொற்குடத்தில், பூந்தாது மலிந்த காவிரி - சங்கமத்துறையிலுள்ள புண்ணிய நன்னீர் கொணர்ந்து, மண்ணகம் மருள, வானகம் 'இது தெய்வலோகமோ' என்று அதைப் பார்த்து வியக்க, விண்ணவர் தலைவனாகிய இந்திரனுக்கு அபிஷேகம் செய்தனர். பிறகு ஊன்கொண்டு பிறவாத அருளுடம்புடைய மஹாதேவன் கோயில், அணி திகழும் ஆறுமுகச் செவ்வேள் கோயில், வெண்ணிறப் பலதேவன் கோயில், நீலமேனி நெடியோனான விஷ்ணுவின் கோயில், முத்து மாலையும், வெண்குடையும் அணிந்த வாசவன்கோயில் ஆகிய சர்வசமயக் கோயில்களிலும் வேதா விதித்த நான்மறை வழக்கின்படியே ஓமங்கள் நடந்தேறின. இவை ஒருபக்கம் நிகழ்ந்தன.

மற்றொரு பக்கம், நால்வகைத் தேவர் (வசுக்கள், திவாகரர், உருத்திரர், மருத்வர்), பதினெட்டுக் கணங்கள் (சித்தர், சாரணர், கின்னரர், விஞ்சையர், பைசாசர், பூதர், கருடர், யக்கர், காந்தர்வர், சுரர், தைத்தியர், உரகர், ஆகாச வாசிகள், போக பூமியர், முனிவர், நிருதர், கிரும்புருடர், விண்மீன்) ஆகிய வேறுவேறு கடவுளருக்கும் முறையாக வகையறிந்து திருவிழாக்கள்

நடந்தன. ஒரு பக்கம், அறவோர் பள்ளி, பௌத்தர் பள்ளி, ஸ்ரீ கோயில் ஆகிய புண்ணிய இடங்களில், தானம் தருமோபதேசம், புராணம் முதலிய நற் செயல்கள் சிறந்தோங்கின. அன்றைய தினம் கொடித்தேருடைய சோழ மன்னன் அருள் சிறந்து, தனது பகைவர் அடித்தளையை நீக்கினன். மற்றொருபுறம் மதங்கர், குயிலுவர், யாழ்ப்புலவர், பாட்டுவல்ல பாணர் ஆகியோர் எண்ணரும் சிறப்புடன் இசைக்கும் இசை சிறந்தது. சிறு தெருக்களும், பெரிய வீதிகளும் கண் துயிலாது, தளராது, முழவதிர, திருவிழாக் களிப்பினாற் சிறந்தன.

இந் நகரின் சிறு சிறு தெருக்களிலும், பூமண மேறிய மந்தமாருதம் வீசித் திரிகிறது; கொழுநனைப் பிரிந்து வருந்ாத, மகரக் குழை யணிந்த மாதவிபோலே, கொழுமையும் ஈரமும் நீங்காத, தளிரழகுடைய, மாதவிமலர், வீட்டுமுல்லை, மல்லிகை, இருவாட்சி, தாழிக் குவளை, செங்கழுநீர் இவை சேர்ந்த மாலைகளின் நறுமணம் கமழ்கின்றது. இம்மலைய மாருதம், காமக் களிமகிழ் வெய்திய காதலரைப் போலே, பூப் பொதிந்த நறுமணச் சோலைகளில் ஆடுகிறது; நாளங்காடியில் விற்பனையாகும் பூக்கும்பல்களின் புதுமணத்திற் புகுகின்றது. புகையும், சந்தனமும் புலராது சிறந்து, நகையாடிக் கொண்டிருக்கும் பெண்டிர் கூட்டத்தில் நுழைந்து, அவர் இனிய மொழிகளை நுகர்கின்றது. குரலிசைப் பாணருடனும், விபசாரருடனும் திரியும் கோவலனைப்போல, பஞ்சமச் சுருதிபாடும் வண்டுடனும், இன்னிள வேனிலுடனும்

மலயமாருதம் திரிகின்றது. இவ்வாறு பூமணங் கமழும் தெருக்களில் பரத்தையர் திரிகின்றனர். அவர்கள் எப்படித் திரிகின்றனர்? இராகுவான பகைவனுக்கு அஞ்சி, கரிய முகில் (கூந்தல்) சுமந்து, தன்னிடையுள்ள சிறு முயலை(களங்கம்) ஒழித்து, இரண்டு கருங்கயல்களுடன் (கண்கள்) இடையே குமிழ் மூக்கு எழுதிய வானத் திங்கள் நிலத்தில் திரிகின்றதோ? சிவனெரித்த மேனி மீளவே, மீன் கொடிகொண்ட மன்மதன், சந்திர மண்டலத்தில் அமுதத்தை யூற்றி வளர்த்த மின்னற்கொடி தான் இங்கே இறங்கி வந்ததோ? மன்னன் கரிகாலனுக்குத் தனது பெருவளங் காட்டவே, திருமகள் இப்பதியின்கண் புகுந்தாள்; அவளைத் தேடி, (தீ நிற இலவம்பூ, முல்லை இவற்றைத் தவிர) கருநெடுங் குவளையும், குமிழ மலரும் பூத்து, மாறுவேடத்துடன் கள்ளையுடைய கமலம் திரிந்ததோ? மன்னன் கரிகாலன் செங்கோல், நமன் வரவை மறுக்கும்; அதாவது அவனது நீதிமுறையின் முன்பு கூற்று நிற்க அஞ்சும். ஆதலாலே, பல்லுயிர் உண்ணும் பிளந்த வாய்க் கூற்றம், தனது தொழில் மாறாது நடக்க வேண்டி, ஆண்மை மாறிக் கடுத்த முகமும் இடி குரலும் விடுத்து, நகைமுகங் காட்டி, பண்ணிசை யாழ்போன்ற சொல் மிழற்றி, நாணுடைய கோலம்பூண்ட பெண் போலத் திரிந்ததோ? இவ்வாறு வியக்கும்படி மதி முகமும், வானவல்லிபோன்ற பொலிவும், கமலம் போ லழகும் கொண்டு, கண்டார் மனத்தை யுண்ணும் கூற்றனைய பரத்தையர் திரிந்தனர். இவர்கள் மன்மதனுடைய ஒப்பற்ற படைகளன்றோ? வீதியிற்செல்

னும் ஆண்களை இவர்கள் தடுக்கிறார்கள். அதனால் இவர் முலையில் எழுதிய தொய்யில் ஆண்கள் மார்பிற் பதிகின்றது. அத்துடன் ஆடவர் வீட்டிற்கு வருகின்றனர். வடமீன்போன்று மாறாக் கற்பிற் சிறந்த தமது மனைவியர், அக்கணவரை விரும்பி, மருவி, ஒழுக்கத்துடன் கூடுகின்றனர். அக் கற்புடைய மாதர் ஒள்ளிய முகத்தைக் கணவர் பார்க்கின்றனர். "நீலமணி போன்ற இதழ்கொண்ட குவளை மலரை வென்றது இவர் விழி. அதன் கடைச் சிவப்பு, இக்காதல் விருந்தால் தீர்ந்திலதாயின், இவ்வூடல் தீரும் மருந்து இந்நிலவுலகில் வேறு யாது முண்டோ?" என்று மனமழிந்து நடுங்குகின்றனர்.

இந்திர விழா நாளன்று, உள்ளே நறுமணத்தாது உறைந்து, இதழ் அழிந்து, கள்ளூறி நடுங்கும் கழுநீர்மலரைப்போலே, கண்ணகியின் கவலை நிறைந்த கருவிழிகள், உள்ளத்தில் உறையும் துயரை மறைத்துக் கண்ணீர் உகுத்தன. காதல் மகிழ்ச்சி பெற்ற மாதவியின் செவ்விழிகளும், உள்ளடக்கங் கெட்டு, மேன்மேலும் கோவலனுடன் புணர்ச்சி விரும்பி, உவகைக் கண்ணீர் வடித்தன. கற்பரசியான கண்ணகியின் விழிகள் உறக்கமின்றி, கவலை பெருகி, நாயகனைக் காணமல், அவன் அன்பைப் பெறமல், கருமையுற்று, துன்பக் கண்ணீர் உகுத்தன. மாதவியின் செவ்விழிகள், காதலின்பத்தால் மலர்ந்து, கலவியாய் விரிந்து, மேன்மேலும் கோவலனை விரும்பி இன்பக் கண்ணீ ருகுத்

தன. ஆனால் உலகின் இன்பமும் துன்பமும் நிலையோ? மாதவி யின்பம் எத்தனைநாள்? இதோ அவனுக்கு வலக்கண் துடிக்கிறது; பிரிவு வரப்போகிறது. இதோ கண்ணகிக்கு இடக்கண் துடிக்கிறது; வேசை மயக்கந் தெளிந்து, கோவலன் தரும பத்தினியாகிய கண்ணகியைக் கூடப்போகிறான்.



## கஅ. கடல் விளையாட்டுக் காணல்

வெள்ளிமால் வரையின் வடபக்கம், வித்தியாதரர் இருக்குமிடம்; அங்கே தேன்மலர்ச் சோலை யொன்றுண்டு. அதில் ஒரு வித்தியாதர வீரன் உளன். அவன் கருங்கயல்போன்ற நெடுங்கண்ணுடைய தனது காதலியுடன், காமக் கடவுளுக்குத் திருவிழாக் கொண்டாடுவான். அவன் தனது காதலியிடம் இவ்வாறு சொல்லலானான்:—“ காதலீ, சித்திரை நாளாகிய இன்று, தென்றிசைப் பக்கத்தில் செழித்தோங்கும் காவிரிப்பூம்பட்டினத்தில், இந்திரனுக்குத் திருநாள் நடக்கிறது.

“ முசுகுந்தன் புலியைப்போன்று போர்வலி படைத்தவன். அவன், ஒருகாலத்தில், இந்திரநகரைக் காத்தான்; கடுவேகத்துடன் கூடித் தன்னை யெதிர்த்த அரக்கர் கணத்தைத் தொலைத்தான். அரக்கர், நெஞ்சை இருட்டி மயக்கும் ஒரு தாமதாஸ்திரத்தை முசுகுந்தன் மேல் ஏவி விட்டனர். ஒரு பெரிய பூதம் ஒரு மந்திரம் அருள, அதன் உதவியால் முசுகுந்தன், அரக்கர் வஞ்சகத்தை வென்றான். இதைக்கேட்ட இந்திரன் மிக்க மகிழ்ந்து, அப்பூதத்தை முசுகுந்தனுக்கு மெய்க்காவலாக்கினன். முசுகுந்தனுடன் அப்பூதம் பூம்புகாரில் இருந்து பலியுண்கிறது. அந்த இடத்தை நாம் காணலாம். அவ்வூரில் ஐந்துவகையான அதிசய மன்றங்கள் உள்ளன. அவை முன்னே அமராபதியைக் காத்தன. அவற்றை இந்திரனிடமிருந்து சோழ மரபினர் இங்கே கொணர்ந்து, அவற்றின் திறமை பொய்க்க

வகையில்லாத ஒரு புண்ணிய பூமியில் நிலைநாட்டினர். அந்த ஐவகை மன்றத்தின் சிறப்பையும் நாம் காண்போம். முன்னே இந்திரன் சபையில் அகத்தியர் மகிழ, நாரதர் நயமுடன் வீணை மீட்டினார். தோரிய மடந்தை வாரம் பாடினாள். ஆயிரங் கண்ணனாகிய இந்திரன் செவியும், மனமும் மகிழ ஊர்வசி நடம்புரிவாளென்று எதிர்பார்த்தான். ஆனால் ஊர்வசி சயந்தன் மேற் காதலுற்று, ஆடாது நின்றாள். நாரதர் வீணை மங்கலம் இழந்தது. அதனால் அவளுக்கு மண்மிசை வந்து வாழும்படி ஒரு சாபம் கிடைத்தது. ஊர்வசி மாதவியாகப் பிறந்தாள். " அவள் மரபில் தோன்றிய மாதவியை நாம் காண்போம்: பவளச் செவ்வாயும், துடியிடையும் கொண்ட காதலி, நாமும் தேவேந்திரனை ஆங்கே வணங்குவோம் " என்று சொல்லிப் புறப்பட்டான் வித்தியாதரன்; வழியில் முடி நீண்ட இமயமலை, செழுநீர்க் கங்கை, உச்சயினி, விந்தியமலைக் காடு, வேங்கடமலை, நிலந் தாங்காது விளைவு செழித்த காவிரிநாடு ஆகிய இடங்களைக் காதலிக்குக் காட்டி, முடிவில் பூந்தோட்டங்கள் நிறைந்த புகார் நகரத்திற்கு வந்து, முன்சொல்லியதுபோலவே முறையாக இந்திரனைத் தொழுது, இப்பெரிய மூதூரில் நடக்கும் திருவிழாவைக் கண்டான். அங்கே தேவபாணியால் திருமாலை ஏத்தினர். ' அந்தணர் வேள்வி, அருந்தவம், வேந்தர் செங்கோல், வணிகர் செல்வம், உழவர் வளமை எல்லாம் செழித்து நீடோங்குக ' என்று நால்வருணப் பூதர்க்கும் நால்வகைப் பாட்டுப் பாடினர். தனது அமுத கலைகளால் பல்லுயிர்களுக்கும்

நலம்புரியும் கொள்கையுடன் வானத்திற் செல்லும் மதி யைப் பாடினர்.

இதன் பிறகு மாதவி நடன மாடினாள் : அவள் ஆடிய பலவகைக் கூத்துக்களாவன :—(1) தாளவியல்பு பொலிய, அவதாளம் நீங்க, கோடு கொட்டியாடல் ; முன்னே தேவர் திரிபுரம் எரிக்கச் சிவனை வேண்டி முறையிட்டனர் ; வடவைக் கனல்கொண்ட பேரம்பை எய்தான் இறைவன். திரிபுரம் எரிந்தது. அதைக் கண்டு, உமையாள் ஒருபக்கம் ஒங்க, இவ்வாறு கை கொட்டியாடினன் பரமன். (2) பாண்டுரங்கக் கூத்து:— மேற்சொன்னவாறு, திரிபுரமெரித்தபோது, தேர்முன் நின்ற நான்முகன் காண, பைரவி வடிவாய் இறைவன் வெண்ணீறணிந்து ஆடிய கூத்தே இது. (3) அல்லியத் தொகுதி :—இது அஞ்சனவண்ணனாகிய கண்ணன், கம்ஸன் ஏவிய குவலயாபீடம் என்னும் [illegible]னையின் கொம்பை யொடித் தாடிய கூத்தாம். (4) மல்[illegible]ல்:— இது,பாணாசுரனைக் கொன்ற திருமால் ஆடியது.(5)துடிக் கூத்து:—இது சூரபத்மனைத் திறலழித்த முருகன், நடுக் கடலில், நீர்த்திரையை அரங்கமாகக் கொண்டு ஆடிய கூத்தாம். (6) குடைக்கூத்து:-இது அரக்கர் போருக்கு ஆற்றாது, தமது படைக்கலங்களைக் கீழே போட்டு வருந்தும்போது, தனது குடையைத் தாழ்த்தி அவர் முன் முருகன்ஆடிய கூத்தாம். (7) குடக்கூத்து:—இது தனது மகள் உஷையின் மனத்தைக் கொள்ளைகொண்ட அநிருத்தனைப் பாணன் சிறையிலிட, கண்ணன் அவனு டைய நகரவீதியில் குடங் கொண்டாடிய கூத்தாம். (8) பேடியாடல்:—இது ஆண்மை திரிந்த பெண்கோலத்

துடன் காமன் ஆடிய கூத்தாம். (9) மரக்கால் ஆடல்:— இது கொடுஞ்சின அரக்கர் பாம்பு தேள் இவற்றின் வடிவுகொண்டு வஞ்சமாகப் புகுந்ததைக்கண்டு பொறு மல் அவரை மரக்கால் கொண்டு மிதித்துக் கொல்லு துர்க்கை ஆடியதாம். (10) பாவைக் கூத்து:—இது, அரக்கர் போர்க்கோலம் கொண்டதற் கேற்பப் போர் புரியாமல், அவர் மோகித்து விழும்படி, திருமகள் பாவையாக நடித்த கூத்தாம். (11) கடையம்:—இது பாணனது நகரின் வடக்குவாயிலில் நின்று, இந்திராணி ஆடிய கூத்தாம்.

இந்தப் பதினொ ராடல்களையும் அந்தந்தத் தேவருக் குரிய அணி, கொள்கை, நிலை, துதி அபிநயங்களுடன் சாத்திர மரபின்படி, ஆடிப் பாடினுள் மாதவி. அவளை வித்தியாதரன், சுட்டிக்காட்டி "இதோ பரதசாத்திர விதிப்படி, சிறப்பாக அபிநய லட்சணங்களைக் கடைப் பிடித்து ஆடுகிறாளே, இவளேநான் அன்று இமயத்தின் மீது தாதுகும் பூஞ்சோலையிலிருந்து கூறிய ஊர்வசி மரபிற் போந்த மாதவியாவள்" என்று தன் காதலிக் குக் கூறினன். வித்தியாதரன் காதலியுடன் மாதவியைக் கண்டு மகிழ்ந்தான். அந்தரத் தேவரும் மாறுவேடத் துடன் வந்து, இந்திரத் திருவிழாவையும், மாதவி நடனத் தையும், அவள் அழகையும், அணியையும் கண்டு பரவச மடைந்தனர். கோவலன், மாதவி நடனம் கண்டு ஊடற் கோலத்தோடிருந்தான். ஏன்? தனது காதலியின் ஆடல் பாடல் அழகு அனைத்தையும், தானேயன்றி அனைவரும் காண்கின்றனர். அதனாலே தன்னைப்போலே பிறர்மன

மும் அவள்பாற் செல்லும் என்று அவன் மன வெறுப் புற்றான். ஆட்டம் முடிந்ததும் அவனும் மகிழ்ந்தான்.

* * *

## மாதவி அணிச் சிறப்பு

மாதவி, தன்னை அலங்கரித்துக்கொண்டு கோவலனோடிருக்கிறாள். அவள் அணியின்சிறப்பைக் கேளுங்கள் :—நாவல், கடு, நெல்லி, தான்றி, ஆல், அரசு, அத்தி, இத்தி, கருங்காலி, மாந்தளிர் ஆகிய பத்துத் துவர்கள் ; கோட்டம், துருக்கம், தகரம், அகில், சந்தனம் ஆகிய ஐந்து விரை ; இலவங்கம், பச்சிலை, கச்சோலம், ஏலம், நாகணம், கோட்டம், நாகம், மதா அரிசி, தக்கோலம், நன்னாரி, வெண்கோட்டம், கத்தூரி, வேரி, இலாமிச்சம், கண்டில் வெண்ணெய், கடு, நெல்லி, தான்றி, துத்தம், வண்ணக்கச்சோலம், அரேணுகம், மாஞ்சி, சயிலேகம், புழுகு, புன்னை, நறுந்தாது, புலியுகிர், சரளம், தமாலம், வகுளம், பதுமுகம், நுண்ணேலம், கொடுவேரி முதலிய முப்பத்திரண்டு ஓமாலிகை—இவையனைத்தும் ஊறிக் காய்ந்த நன்னீரில் தைலம் தேய்த்து மணக்கும் கூந்தலை ஆட்டினாள். பிறகு மெல்லிய கூந்தலை, அகிற் புகையில் உலர்த்தி, அதற்குக் கஸ்தூரிக் குழம்பு பூட்டினாள். செம்பஞ் சூட்டிய அழகிய சிற்றடி மெல்விரல்களுக்குப் பீலி, கால்மோதிரம் முதலிய அணிகளைச் சூட்டினாள். காற்சரி, நூபுரம், பாடகம், சதங்கை, பாதசாலம் முதலியவற்றைக் காலுக் கணிந்தாள். துடையணியைத் திரண்ட துடையிற் சேர்த்து, நீலப் பூந்துகில்

உடுத்து, அதன்மேல், முப்பத்திரண்டு ஒள்ளிய முத்து வடங்கள் அமைந்த மேகலாபரணம் பூண்டாள். அழகிய கண்டிகையுடன் சேர்ந்த தோள்வளைகளைத் தோளுக் கணிந்தாள். முகப்பில் மாணிக்கத்துடன், பத்திகளில் வைரங் கட்டிய சித்திரவேலை செய்த சூடகம், செம்பொற் கைவளை, பரியகம் (கைச்சரி), வால் வளை, கைவடம் ஆகியவற்றை மயிர் அரிதாயுள்ள முன்கையில் அமைவுற அணிந்தாள். வாளைமீன் அங் காந்ததுபோன்ற நெளி, செவ்வொளி காந்தும் மணி யோதிரம், வளைத்து ஒளிவீசும் வைரம் பதித்த மரகதக் கடைசெறி இவற்றைக் காந்தள் போன்ற மெல்லிய விரல்கள் மறைய அணிந்தாள். வீரசங்கிலி, அழகிய நுட்பமான வேலைப்பாடுள்ள பூண், நாண், சரப்பளி ஆகியவற்றைக் கழுத்திலுள்ள முத்து, மணி ஆரத்துடனே அணிந்தாள். கழுத்தணிகளின் கொக்கி களினின்றும் ஒழுகிய அழகிய தூய மணிக்கோவையால் பிடரியை மறைத்தாள். முகப்பில் இந்திர நீலம்வைத்து, இடையிடையே சந்திரபாணி யென்னும் வைரந் திரண்ட நீலக்குதம்பையைக் காதில் அழகுற அணிந் தாள். சிதேவி, செழுநீர் வலம்புரி, தலைப்பாளை, தென் பல்லி, வடபல்லி, இவை தொடர்ந்த தலையணிகளைக் கருங் கூந்தலில் அழகுபெற அணிந்தாள். இவ்வளவு பகட் டான அணிகளைச் செய்துகொண்டு மாதவி, கூடலும் ஊடலும் அளித்துக் கோவலனுடன் சேர்ந்து பள்ளி யில் இருந்தாள்.

* * *

## கடற்கரை செல்லல்

இருபத்தெட்டு நாள் இந்திர விழா நடந்தேறியது. மறுநாள் கொடியிறக்குவர். அன்று காலை, ஊராரெல்லாம் பெருந்திரளாகக் கடலாடி, அங்கே கடற்கரையில் பல விளையாடல்கள் புரிவர். அவற்றைக் காண மாதவி விருப்பங்கொண்டு கோவலனுடன் அதிகாலையிற் புறப்பட்டாள்.

அருணோதயக் காட்சியைப் பாருங்கள்! பொய்கைத் தாமரையில் உறங்கும் புட்கள் விழித்தெழுந்து பாடுகின்றன; கோழி கூவுகிறது; காலைச்சங்கு முழங்குகின்றது. யானைகள் பிளிறுகின்றன. வெள்ளி விளக்கம் நள்ளிருளைப் போக்குகின்றது. வான்போல் வண்மையுள்ள கையனை மாலையணிந்த மார்பன் கோவலன் குதிரையேறினான்.* மான் விழியாகிய மாதவி குதிரைபூட்டிய தேரில் ஏறினாள்.†

இனி அவர் செல்லும் வழிக்காட்சிகளைக் காண்போம்:—முதலில் கடைத்தெரு வருகிறது. அங்கே கோடிகோடியான கொழுநிதிக் குப்பைகள் மலிந்த மாடங்கள் காண்கின்றன. அவை திருமகள் இருக்கைகளாம். அவற்றில், இன்று மலரணி விளக்குகளுடன் மாணிக்க விளக்கெடுக்கின்றனர். தாசியர் மலர்களையும், அறுகையும், நெல்லையும் தூவி, இரண்டு பக்கத்திலும் தமது கலன்கள் ஒலிக்கத் திரிகின்றனர். (தாசி

---

* அத்திரி யென்றால் குதிரை, கோவேறு கழுதை இரண்டுமாம்.

† வையம் குதிரைத்தேர், பல்லக்கு, கூடார வண்டி.

கள் = சேடிகள் = வேலைக்காரிகள்) இப்பட்டினப் பாக்கத்தை முற்றுந் தாண்டினால், கடல் வளத்தினால் செல்வச் செழிப்புற்ற மருவூர் வீதிகள் வருகின்றன. தமிழரின் வாணிபச் செல்வத்தை ஆங்கே காண்கிறோம்:—

"மகர வாரி வளந்தந் தோங்கிய
நகர வீதி நடுவட் போகிக்
கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்
வேலை *வாலுகத்து விரிதிரைப் பரப்பில்
கூல மறுகிற் கொடியெடுத்து நுவலும்,
மாலைச் சேரி மருங்குசென் றெய்தி
வண்ணமுஞ் சாந்தும், மலரும், சுண்ணமும்,
பண்ணியப் பகுதியும், பகர்வோர் விளக்கமும்,
செய்வினைக் கம்மியர் கைவினை விளக்கமும்
† காழியர் மோதகத்து ‡ஊழுறு விளக்கமும்
கூவியர், காரகற் குடக்கால் விளக்கமும்
§ நொடை நவின் மகடூஉக் கடைகெழு விளக்கமும்,
இடையிடை மீன்விலை பகர்வோர் விளக்கமும்,
இலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்
விலங்குவலைப் பரதவர் மீன்றிமில் விளக்கமும்
மொழிபெயர் தேத்தோர் ஒழியா விளக்கமும்
கழிபெரும் பண்டங் காவலர் விளக்கமும்
எண்ணு வரம்பறியா இயைந்தோருங் கீண்டி......"

கடைவீதி தாண்டிக் கோவலனும் மாதவியும் மருவூர்ப் பாக்கத்து நகர வீதிகளின் நடுவே போகின்றனர். அவ்வீதிகள் முத்து, பவளம், சங்கு, கப்பல்வாணிபச் செல்வம் தரும் வளத்தாற் சீரோங்கி விளங்குகின்றன.

---

* மணல். † பிட்டு வாணிகர். ‡ குடைவுள்ள.
§ பல பண்டம் விற்போர்.

அதன்பிறகு, வெண்மணல் பரவிய அலைவாயிலில் வரிசை வரிசையாகப் பரதேசிகள் வசிக்கும் சேரிகள் காண்கின்றன. இப்பரதேசிகள் கப்பல் வாணிபத்தால் செல்வச் செழிப்படைந்தவர்; வாணிபத்திற்காகத் தமது சுதேசத்தைவிட்டு இங்கே வந்தவர்கள். இவர்கள் பலவகைக் கூலங்கள் குவித்து, ‘இன்ன சரக்கு’ என்று கொடிகளால் தெரிவித்து, அங்கே வியாபாரம் செய்கின்றனர். இன்னும் சரியாக விடியவில்லை. ஆதலால், இத்தெருக்கள் நெடுக விளக்குகள் எரிகின்றன. அழகுச் சாயங்கள், சாந்து, மலர்கள், சுண்ணம், பணிகார வர்க்கங்கள் ஆகியவற்றைக் கூவி விற்போர் விளக்குகள் தோன்றுகின்றன. திண்ணகத்தால் நெருகிட்டுத் தொழில் செய்யும் கம்மியர் (பணித்தட்டார்) விளக்குகள், பிட்டுவாணிபர், பிட்டுவிலை கூறி விற்கவைத்த விளக்குகள், அப்பவாணிகர் குடக்காலில் வைத்த அகல் விளக்குகள், பல பண்டங்களை விலைகூறி விற்கும் பெண்டிர் கடைகளில் வைத்த விளக்குகள், இடையிடையே மீன்பகர்வோர் விளக்குகள், வாணிபத்தால் விளங்கும் கடற்கரையில் கலங்கரை விளக்குகள், செம்படவர் மீன் பிடிக்கும் படகில் வைத்த விளக்குகள், அன்னிய மொழிபேசும் பரதேசிகள் தமது துறைத் தப்பாமல் இருக்க வைக்கும் விடி விளக்குகள், பெரிய பண்டக சாலைகளில் காவல் புரிவோர் விளக்குகள் ஆகிய எண்ணி லடங்கா விளக்குகள் ஒருங்கே கூடி ஒளிர்தலாலே, இடித்த மாவைப்போன்று பரவிய மணலில் இட்ட கடுகும் தெளிவாகத் தெரியும்படி அத்தெருக்கள் பளிச்சென் றிருக்கின்றன. அத

ஞல் தாழைவேலி மேவிய இந்த நெய்தல் நிலம் தாமரை பூத்த நீர்ப் பரப்பையுடைய மருதவேலிபோல விளங்குகிறது. இக் கடற்கரையில், மலைதரும் பொருள் களும், கடல்தரும் பொருள்களும், நிரைநிரையாகக் குவிந்து கிடக்கின்றன. பல வளங்களைக்கொண்டு கப் பல்கள் இத்துறையில் அசைந்து நிற்கின்றன. அர சிளங்குமரர், அவரது அடிமைத்திரள், பரத குமரர் அவரது பலவகையான ஆயமகளிர், ஆடும் பெண்டிர், பாடும் பெண்டிர் முதலிய பலமாந்தர் கூடி விளங்குகின்றனர் இக் கடற்கரையில். சுற்றிலும் காணும் வெவ்வேறு கோலமும், கேட்கும் பலவேறு ஓசைகளும் விண்ணிலேறிப் போர் செய்யும் பெரும் புகழுடைய கரிகால் வளவன் புதுப்புனலாடும் நாளின் காட்சியைத் தருகின்றன. கடற்கரையை மெலிவித்துப் புகும் காவிரியின் புகார் முகத்தில், நான்கு வருணத்தாரும், எள்விழ இடமில்லாமல் நெருங்கி யிருக்கின்றனர். அவர் களது அடங்காக் கம்பலைகள் ஒன்று சேர்ந்து பேரோசையாக ஒலிக்கின்றன. ஆங்கே கடலின் புலால் நாற்றத்தைப் போக்கி, மடல் விரிந்த தாழம்பூக்கள் வேலிபோலச் சூழ்ந்துள்ளன. ஓரிடத்தில் புன்னைநிழல் உள்ளது. அங்கே புதுமணற் பரப்பில், சித்திரத்திரை கட்டி, விதானம் விரிந்த வெண்கால் அமளியில், மாமலர் நெடுங்கண் மாதவி, கோவலனுடன் கொள்கைப்படி கூடியிருந்தாள்.



## கானல் வரி - காதலர் மன மாற்றம்



*" கானல்வரி யான்பாடத் தானொன்றின் மேல்மனம் வைத்து
மாயப்பொய் பலகூட்டு, மாயத்தாள் பாடினள் "*

## கக. கானல்வரி

இவ்வாறு சித்திரப் படாத்துட் புக்குறையும் மாதவி, கோட்டுமலர் புனைந்து, மைத்தடங்கண் கொண்ட மணமகளைப்போல வனப்புறப் பொலிந்தாள்; தனது சேடி வசந்த மாலை சுமந்த யாழைத் தொழுது வாங்கினாள். இசைக்கலையை மதிக்கவே அவ்வாறு தொழுதாள். குடம், தண்டு, ஆணி, நரம்புகள் அனைத்தும் குறைவற்றிருந்த யாழில், ஸ்வரங்களையெழுப்பி, இசைக் கூறுபாடுகளைச் சோதித்து, மேளஞ் செய்தாள். அவள் எட்டு வகையாக இசை யெழுப்பிப் பார்த்தாள். அவையாவன :—

(1) பண்ணல் : கருதிய பண்ணிற் கேற்ற இணை கிளை பகை நட்பான நரம்புகள் பெயருந் தன்மையும் மாத்திரையும் அறிதல். (2) பரிவட்டணை : சுருதி கூட்டிய யாழ் நரம்பைக் கரணஞ்செய்து தடவுதல். (3) ஆராய்தல் : சுருதி சேர்த்தல். (4) தைவரல் : அனுசுருதி யேற்றுதல். (5) செலவு : ஆலாபனம். (6) விளையாட்டு : பாட நினைத்த வண்ணத்தில் சந்தத்தை விடுதல். (7) கையூழ் : வண்ணத்திற் செய்த பாடலை இன்பமாக இசைத்தல். (8) குறும்போக்கு : முடுகிசை.

இவ்வாறு இசையெழுப்பிச் சுருதிகளைச் சுத்தமாகப் பேச வைத்து, மரகதமணி மோதிரங்கள் இணைந்த காந்தள்போன்ற மெல்விரல்கள், பாடும் வண்டின் இசை போல, பல நரம்புகளின் மேற்படர்ந்து நாதம் செய்தன. (1) வார்தல் : சுட்டு விரலால் மீட்டல். (2) வடித்தல் : சுட்டுவிரலும் பெருவிரலும்கூடி நரம்பை உருவுதல்.

(3) உந்தல் : நரம்புகளனைத்தையும் தடவுதல். (4) உறழ்தல் : ஒரு நரம்பை விட்டு ஒரு நரம்பைத் தெறித்தல். (5) உருட்டல் : இசை நரம்பை விரைவாக வருடுதல். (6) தெருட்டல் : சீருடன்உருட்டி இசைத்தெளி வறிதல். (7) அள்ளல் : இசைச் செறிவு. (8) பட்டடை : பஞ்சம சுருதி மீட்டல். இவ்வாறு இசை நூல் வகுத்த எட்டு வகையாக யாழை மேளம்செய்து, இசை கூட்டி, 'முன்னூல் காதலர் வாசிக்கட்டும்' என்று மாதவி கோவலன் கையில் யாழைத் தந்தாள். கோவலன், மாதவி மன மகிழ அதை வாங்கி, அதில் ஆற்றுப்பாட்டும், கடற்கரைப்பாட்டும் பாடலானான்.

இராக தாள ஒழுங்குடன் தெய்வத்தை அல்லது மக்களைக் குறித்துப் பாடுவது வரிப்பாட்டாம். இங்கே முதல் கானல் வரி, மக்களைக் குறித்த முகமுடை வரியாம். முகமுடைவரியாவது மூன்று முதல் ஏழடி வரை உள்ள இசைப்பாட்டு. கானல் வரிப்பாட்டுக்களில் பல இசை நுணுக்கங்கள் உள்ளன.

இப்பாடல்களின் கருத்தை இங்கே காண்பாம் :—

திங்கள் மாலை வெண்குடையான்
சென்னி, செங்கோல் அதுவோச்சி
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவாய் வாழி காவேரி!
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவா தொழிதல் கயற்கண்ணாய்
மங்கைமாதர் பெருங் கற்பென்
றறிந்தேன் வாழி காவேரி !

காவிரி நாடன் கரிகால் வளவன், கங்கை நாட்டைத் தனது செங்கோல் ஓச்சிப் புணர்ந்தான் (அடைந்து ஆண்டான்). "எனக்குரிய கணவன், கங்கையைப் புணர்வதா" என்று காவிரி பிணங்க வில்லையாம். கற்புடைய மங்கையரின் தன்மையை அது விளக்கிற்றும். அதேபோல, ஆத்திமாலை சூடிய, வெண்குடையானாகிய சோழன், தனது கோடாச் செங்கோல் ஓச்சிக் கன்னி (கன்னியா குமரி)யைப் புணர்ந்தான். அதாவது கன்னியா குமரி வரையிலும் உள்ள தமிழகத்தை வென்று புரந்தான். "கயல்களைக் கண்ணாக உடைய காவிரியே, இவ்வாறு உனது தலைவன் மற்றொரு கன்னியைப் புணர்ந்தாலும், நீ பிணங்க வில்லை. அது மனவுறுதியுள்ள மாதர் பெருங்கற்பின் திறமையே என்றறிந்தேன்." கரிகாலன் கங்கைமுதல் கன்னியாகுமரிமட்டிலும் உள்ள இந்தியாவை ஆண்டதற்கும், இந்த இடங்களில் தமிழரசு நிலவியதற்கும் இப்பாட்டு ஓர் அரிய ஆதாரமாகும்.

"காவிரியே உழவரோசையும், மதகோசையும் உடைநீர் ஓசையும், புதுப் புனலாடும் விழாக்கொண் டாடுவோர் ஓசையும் சிறந்து ஆர்ப்ப நீ நடந்தாய். உலகிற்கு இத்துணை நலத்தையும், சுபத்தையும், மகிழ்வையும் அளிக்கும் நீ வாழ்க! இவ்வாறு விழாவோசைகள் சிறந்தொலிப்பது, ஓயாதொலிக்கும் மழவர் (வீரர்) ஓசையையுடைய கரிகால் வளவனாகிய உனது தலைவன் வளமையேயாகும். அத்தகைய தலைவனைப் படைத்த நீ வாழி, காவிரியே!"

அடுத்த மூன்றும், பாட்டுடைத்தலைவனான சோழன் வாழும் புகாரைச் சிறப்பிக்கும் முகச் சார்த்துவரியாம். இவை தோழி தலைவன்முன் கூறல் ; “ஐய, கரிய மலர் போன்ற நெடுங்கண்ணுடைய காரிகை முன்னே, கடல் தெய்வத்தைக் காட்டிக் காட்டி, நான் உன்னையே காதலிக்கிறேன், உன்னைப்பிரியேன் என்று சத்தியம் செய்தாரையா ஒருவர். அச்சத்தியத்தைப் பொய்த் தார் அந்த அறனிலர். இப்படி அவர் செய்வாரென்று ஏழையோம் அறியோம் ஐயா. விரிகதிர், வெண்மதி, நட்சத்திரக் கூட்டம் இவைபோன்று விளங்கும் வெள்ளை முறுக்குடைய சங்கு முத்து ஆகியவற்றின் ஒளியைக் கண்டு ஆம்பல் இதழ் மலரும் புகார்தான் எமது ஊர். நீதிவழுவாச் செங்கோல் நடக்கும் இப் புகாரில் இவ் வாறு சொல் தவறுவாரும் உண்டோ ?

காதலர் ஆகிக் கழிக்கானற் கையுறைகொண்டு எம்பின்வந்தார்
ஏதிலர் தாமாகி, யாம்இரப்ப நிற்பதையாங் கறியோம் ஐய,
மாதரார் கண்ணும், மதிநிழல்நீர் இணைகொண்டு மலர்ந்தநீலப்
போது மறியாது, வண்டூச லாடும் புகாரே எம்மூர்.

அவர் காதலராகி, பெரிய நெய்தற் சோலையை மொய்ப் பணமாகக் கொண்டு எமது பின்னே வந்தார். அப்படிப் பட்டவர் நாங்கள் அவரை இரக்க, அன்னியர் போல நிற்கிறார். மாதர் முகத்திலுள்ள விழிகளுக்கும் மதிநிலா வில் மலர்ந்த நீலோற்பலத்திற்கும் வேற்றுமை தெரி யாமல், இரவு வந்ததுகூடத் தெரியாமல், வண்டு ஊச லாடும் புகாரே எங்கள் ஊர். இந்த ஊரில் இவ்வாறு காதல் கொண்டவர் ஏதிலர் போலிருப்பது வியப்பா யிருக்கிறது.

மாதர், கடல் மணலில் சிற்றில் கட்டி விளையாடுவர். திரைகளால்மொத்துண்ட சங்குகள், அலையுடன் வந்து சிற்றில்களை உழுதழிக்கும்; மாதர்மயங்கி மெல்விரலால் ஓச்சுவர். அவர் கோதை பரிந்தசையும்; குவளை மாலை அறுந்து சிந்தும். அப்படிச் சிந்திய மலர்கள் சிறங் கணிக்கும் (சுருங்கிப் பார்க்கும்) விழிகளைப்போலிருக் கும். அங்குப்போவார், நாட்டம் மேற்செல்லாது அவற் றையே பார்த்திருப்பார். அத்தகைய புகாரே எம்மூர்.

அடுத்த மூன்று கானல்வரிகளும் முகமில் வரி களாம். உதிர்ந்த புன்னைப் பூந்தாதுக்கள் போர்த்த கடற்கரையில், தலைவன் தலைவியைக் காண்கிறான். அவளது மதிமுகத்திலுள்ள கயற்கண் அவனுக்கு நோய் தருகிறது. அவள் சிற்றில் முதலியன விளை யாடும் இடத்திற்கு அவன் வருகிறான்; சிற்றில் அலை மோதிய வலம்புரிச் சங்குகளால் உழுது அழிக் கப்பட் டிருக்கும் தோற்றத்தைக் காண்கிறான். "எனது நோய் தீர்ப்பவள், அழகுத்தேமல் படர்ந்த அந்த மென்முலையாளே என்கிறான். மணங்கமழும் இந்தப் பூங்கானலில் (கடற்கரையில்), ஓர் அணங்கு உறைகின்றாள். அவள் புலாலுலர்த்தி, அதைப் புட்கள் உண்ணாது வண்டார்க்கும் ஒருசிறு கொன்றைக் கொம் பைக் கையில் பிடித்து இங்குறைகின்றான். ஆ! அவள் இங்கே இவ்வாறு உறைவதை அறியேன். அறிந்தால் இந்த இடத்தை அடைந்து, இவ்வாறு நோய் வருந் தேனே.

வலைஞர் சேரியில், வலை யுலரும் முன்றிலில், மீனு லர்த்த வேண்டி, இன்னொரு கொலைவேல் நெடுங்கண்

கொடுங் கூற்றம் வாழ்கின்றது. அதை நான் அறி யேனே. அறிந்தால் இக் கடற்கரைக்கே வந்திருக்க மாட்டேனே. ஐயோ அக்கூற்றம் என்னைத் தனது கண் ணாலே தாக்கி நோய்தந்து வருத்துகிறதே.

*　　*　　*　　*

அடுத்த மூன்று பாட்டில் தலைவன் தலைவியைத் தனியிடங் கண்டு புகழ்கின்றான். இது நிலை வரியாம்.

கயல் எழுதி, வில்எழுதிக் கார்எழுதிக் காமன்
செயல்எழுதித் தீர்ந்தமுகந் திங்களோ காணீர்
திங்களோ காணீர் *திமில் வாழ்நர் சீறூர்க்கே
அங்கணேர் வானத்து அரவஞ்சி வாழ்வதுவே!

கயல்விழிகள், விற்புருவம், காமன் செயல் மூன் றும் விளங்கும் இவள் முகமாகிய திங்கள் வானத்தி லிருந்தால், இராகு பிடிக்குமென்று அஞ்சிப் பரவரது சிற்றூரில் வாழ்வதைப் பாருங்கள்!

எறிவளைகள் ஆர்ப்ப, இருமருங்கும் ஓடும்
கறைகெழுவேற் கண்ணோ கடுங்கூற்றம் காணீர்!
கடுங்கூற்றம் காணீர், கடல் வாழ்நர் சீறூர்க்கே
மடங்கெழு மென் சாயல் மகளா யதுவே!

இரு பக்கமும் ஓடும் இவளது வேற்கண்கள் கூற்றோ? இந்த நெய்தல் மாக்களுக்குக் கூற்றமே இப் பெண்ணாக வந்திருக்கிறதோ? மீன் உலர்த்திக் கொண்டு பறவைகளை ஓட்டும் இவள், கண்டார்க்குக் காமநோய் தரும் அணங்கோ? அடம்புக்கொடி படர்த்த இக்கான

* மரக்கலம்.

லில், அணங்கு தான் இப்படி ஐம்பால் கொண்ட பெண் பாலாக விளங்குகிறதோ ?

*　　　*　　　*

அடுத்த மூன்றும் தோழன் கேள்விக்குத் தலைவன் சொல்லும் முரிவரியாம். "தோழா எனக்கு என்ன நோய், என்னை யார் இப்படி இடர்செய்தவர் என்று கேட்கிறாய். சொல்கிறேன் கவனி : சங்குகள் வளரும், திரைவிரி துறையில், திருமணல் விரிந்த இடத்தில், மணமலர் நிறைந்த சோலையில், என் மனத்தைக் கொள்ளை கொண்டவள் தனியே திரிகிறாள். அவள் அங்கங்களே என்னை இடர்செய்தன.

பொழில்தரு நறுமலரே, புதுமணம் விரிமணலே,
பழுதறு திருமொழியே, பணையிள வனமுலையே,
முழுமதி புரைமுகமே, முரிபுரி வில்லிணையே,
எழுதரு மின்னிடையே, எனையிடர் செய்தவையே ! - -
மருவிரி புரிகுழலே, மதிபுரை திருமுகமே,
இருகயல் இணைவிழியே எனையிடர் செய்தவையே ! - -
முளைவளர் இளநகையே, முழுமதி புரை முகமே,
இளையவள் இணைமுலையே எனையிடர் செய்தவையே !

அடுத்த மூன்றும் காதலியைப் பார்த்துக் காதலன் தனது ஆற்றாமை கூறலாம்: "காதலீ, உனது பெரியோர் கடல்புக்கு, உயிர் கொன்று, மீன்பிடித்து வாழுகின்றனர். நீயோ எனது உடலிற் புகுந்து, காதல் நோயால் உயிர்கொன்று வாழ்கின்றாய். உந்தை கொடுங்கண் வலையால் உயிர் கொல்வான் ; நீயும் நெடுங்கண்வலையால் என்னுயிரைக் கொல்வாய். ஓடும் மீன்படகுகொண்டு உன் அப்பன் உயிர் கொல்வான். கோடும் புருவத்தால்

நீயும் என் உயிரைக் கொல்லை. பிறர் துயரத்தை நீ பாராய். இப்படி நீ செய்யும் துயருக்குத் தண்டனை விழும் கவனம். என்ன தண்டனை என்பையோ ? கட்டுக் கடங்காது, கனத்த, பெருத்த, வலிய வெம்முலையைத் தாங்காமல், மழைமின்னலைப்போன்ற உனது நுண்ணிடை முறியும் கவனம். அப்பாரத்தை என் மேலேற்றி, என் ஆற்றாமையைத் தீர்ப்பாயாக?"

இவ்வாறு தனது அடங்கா ஆசையை வெளியிட்டு மறுபடியும் கூடுகிறான் தலைவன். புணர்ந்து நீங்க மனமில்லாமல், மனத்திற் சொல்லிக் கொள்ளுகிறான் :—

"பவளவுலக்கை பிடித்து முத்தங் குற்றுவாள் இவள் ; புன்னை நிழலில் அன்னநடை நடப்பாள். கள்ளுருக்கும் கருங்குவளையைக் கையில் ஏந்தி, புலாலைக் கொத்தவரும் புட்களைக் கடிவாள் ; இவள் கண்கள் வெள்வேல் அல்ல ; அவை வெய்ய, வெய்ய கூற்றமேயாம்.

தவள முத்தம் குறுவாள் செங்கண்
குவளை யல்ல கொடிய கொடிய
அன்னம் நடப்ப நடப்பாள் செங்கண்,
கொன்னே வெய்ய கூற்றம், கூற்றம்.

காதலி விளையாட்டாக ஓடுகிறாள். அவளைக்கண்டு காதலன் சொல்லுகிறான் : "இந்த நீர்வேலி சூழ்ந்த கடற்கரையில் விளையாடித் திரிகிறாள் ஒரு நங்கை. அவள் பின் சேராதே அன்னமே. நீ அவள் நடையை ஒவ்வாய். அவள் மாதிரி நடக்க முடியாமல் தோற்பாய்".

* * *

இப்பாட்டு, காதல் பொறுக்கமுடியாத ஒருவன், தான் காதலிக்கும் ஒரு பெண்ணைப் பார்த்துச் சொல்லுவதுபோ லிருக்கிறதல்லவா? கோவலன் எப் பெண்ணையும் விரும்பவில்லை. அவன் மாதவி மையலிலே சொக்கியிருந்தான். ஆனால் விதியொன்றிருக்கிறதே! அது மாதவி மனத்திற் புகுந்து ஐயத்தைக் கிளப்பியது. "ஆ! என்னை அலட்சியம் செய்து, வேறொரு பெண்ணை யல்லவா காதலித்து இப்படி இவன் பாடுகிறான்" என்று (கலவியால் மகிழ்ந்தவள் போல முகம் மினுக்கி) உள்ளே பிணங்கி, மாதவி தனக்கும் வேறொரு குறிப்பு உண்டு, வேறோர் காதலன்மேல் ஆசையுண்டு என்று பதிலுக்குப் பதில் உணர்த்தும்படி, யாழைவாங்கிக் கானல்வரி பாடு கிறாள். அதைக்கேட்டு நிலத்தெய்வம் வியப்பெய்து கிறது. நீள் நிலத்தோர் மகிழ்வெய்துகின்றனர். அவள் குரலும், விரலும் அத்துணை இனியன. அத்துடன் அப்பாடல்களே கோவலனை வேசை மயக்கத்தினின் றுந் தெளிவித்துத் தனது தரும பத்தினியின்பால் சேர்த் தன. அப்பாடல்களே நாயகனை எண்ணிக் கண்ணீர் விட்டு மெலியும் கண்ணகிக்கு நல்லவாயின.

"மருங்குவண்டு சிறந்தார்ப்ப மணிப்பூ ஆடைஅதுபோர்த்துக்
கருங்கயற்கண் விழித்து * ஒல்கி நடந்தாய் வாழ் காவேரி !

பூவார் சோலை மயிலாடப் புரிந்து குயில்கள் இசைபாடக்
காமர் மாலை அருகசைய நடைந்தாய் வாழி காவேரி !"

கருங்கயற்கண் விழித்தொல்கி நடந்த வெல்லா நின்கணவன்
திருந்து செங்கோல் வளையாமை யறிந்தேன்வாழி காவேரி !

* ஒல்கி = ஒதுங்கி.

காமர்மாலை யருகசைய நடந்தவெல்லா நின்கணவன்
நாமவேலின் திறங்கண்டே யறிந்தேன்வாழி காவேரி.

இவ்வாறு பக்கத்தில் வண்டொலிக்க, மணிப்பூஞ் சேலை யணிந்து, மீன்விழி நோக்கி, பெண்மையால் ஒதுங்கி நீ நடப்பதெல்லாம் நினது கணவன் செங் கோல் கோடாமையால் என்றறிந்தேன். பூஞ்சோலை மயில் ஆட, குயில்கள் இசைபாட, அழகான மாலைகள் அசைய நீ நடப்பதெல்லாம் பகைவரை வென்று புகழ் பெற்ற நினது கணவர் வேலின் திறம் என்றறிந்தேன். அவனது வளநாட்டைக் குழந்தைபோல வளர்க்குந் தாயானுய், நீவாழி. ஊழிகடந்த நினது இப்பேருதவி நீங்காது நீ வாழ்க! நீ இவ்வாறு ஊழியை வென்று பேருதவி செய்தொழுகுவது, உயிர்களைக் காக்கும் ஆஞ்ஞா சக்கிரத்தை ஆளும் பகல் வெய்யோன் (நடுநிலை விரும்புவோனுகிய எம தரசன்) அருளாலே தான். பக லவன் குலத்தோன்றலாகிய சோழன் வாழ்க! சூரியன் கடலாவி யிழுத்து மேகமாக்கி மழை பொழிந்து, நீ வெள்ளமாகப் பெருகுகின்றாய். சூரிய குலத்தோன் மன் னுயிரைத் தன்னுயிர்போலத் தாங்கும் செங்கோன்மை யாலும் நீ வற்ரு நிறைவெய்தி, ஊழிகடந்து உலகிற் குதவி விளங்குகின்றாய். ஆதலால் பகல் வெய்யோன் அருள் வாழ்க! நின் பேருதவி வாழ்க, நீ வாழ்க, காவிரியே !

இனிப் புகார் சிறப்பைப் பாடுகிறாள் மாதவி: கடல் அலைகள் வெண் முத்துக்களைத் தந்து, நெய்தல் பூங்கோதையை விலைஞர் போலக் கொண்டுசெல்லும் புகாரே எம்மூர். இதன்கண் நீள் புன்னைகள் அரும்பிப்

பூத்து நட்சத்திர மண்டலம்போலக் காணும். அத னிடையே சந்திரன் போல அன்னம் உறையும். அவற்றைக் கண்டு வண்டூத ஆம்பல் மலரும். அத் தகைய புகாரில் வாழும் எமது தலைவி, இனிய கதிர் நிலவும் முகத்தாள். அவளது செவ்வாய் மணிமுறு வலுக்கு முத்தும் ஒவ்வாது; எனினும், அம்முறு வலையே கடல் முத்தென்று நாடோறும் மயங்கி, மன் மதன் போல நீர் வருதிர். முறையாக மணந்தவரை, பரதர் பாக்கத்துப் பெண்டிர் செங்கையில் இறையும் வளைகள் தூற்றுவதை நாங்கள் யாங்கும் கண்டறி யோம்.

* * *

இனி, தான் இன்னொருவன்மேற் காதல்கொண்ட தாக மெல்லக் குறிக்கிறாள் மாதவி. புணர் நண்டினை நோக்கி, பூங்கானலில் என்னையும் நோக்கி, உணர் வொழியப் போனார் நெய்தல்நிலத் தலைவர். அன்னங் காள், எம்மை நினையாது அவர் போய்விட்டாரோ? நம்மை மறந்தாரை நாம் மறக்க மாட்டோம். மங்கிய மாலையில், என்கண் அக்காதலரைக் காணாது வருந்து கிறது. என்னைப்போல நீ துன்பமுறாமல் உறங்கு கின்றாய். ஏ நெய்தலே, நீ காணும் கனவினுள், என்னை விட்டகன்ற வன்கணார் இக்கானலில் வரக்கண்டறி வாயோ? ஏ கடலோதமே !

நேர்ந்த நம் காவலர், நேமி நெடுந் திண்தேர்
ஊர்ந்த வழிசிதைய ஊர்கின்ற ஓதமே,
பூந்தண் பொழிலே, புணர்ந்தாடும் அன்னமே,
ஈர்ந்தண் துறையே, இதுதகா தென்னீரே !

நெய்தல் தலைவனே, நினது நிலம் நல்ல முத்தணி பூண்டது ; நலஞ்சார் பவளக் கலையுடுத்தது. செந் நெற் பழனக் கழனிதொறும் திரையுலாவப் பெற்றது. புன்னைப் பொதும்பர் நிறைந்தது. தாளநகை செய்து, பவளவாய் மலர்ந்து, சேரிப்பரதர் வலை முன்றிலில் திரையுலாவப் பெற்ற நெய்தற்றலைவன் நீ. மகரக்கொடியோன் அம்பெய்த புதுப் புண்களை என் அன்னை கண்டால் என்ன செய்வது? இந்தக் கொடுமை செய்தார்யார் என்றால் என்சொல்வது? பிறர் அறியாத எனது நோயை அன்னை அறிந்தால் என்செய்வது?

* * *

இனிப் பொழுதுகண் டிரங்குகிறாள் : மெல்லிருள் பரந்தது. பகலவன் மறைந்தான். என் கண்கள் வருந்தி நீர் உகுத்தன. தளையவிழ் மலர்க்குழலாய், என்னைப் பிரிந்த அவர் நாட்டிலும், என்வளை நெகிழ, எரி சிந்தி வந்த இந்த மருண்ட மாலை உளதோ ?

கதிரவன் மறைந்தனனே ! காரிருள் பரந்ததுவே
*எதிர்மலர் புரையுண்கண் எவ்வநீர் உகுத்தனவே !
புதுமதி புரை முகத்தாய், போனார் நாட் டுளதாங்கொல்
மதியுமிழ்ந்து, கதிர்விழுங்கி, வந்த இம் மருண்மாலை !

பறவைப்பாட்டு அடங்கினவே ! பகலோன் மறைந் தானே ! முழுமதி நோய்செய்ய, எனது நெடுங்கண் கள் நீருகுத்தனவே ! மலரவிழ் கூந்தலாய், என்னைப் பிரிந்தவர் நாட்டிலும் என்னுயிர்மேல் வந்த மறவலி படைத்த இந்த மருண்ட மாலை உண்டோ ?

---

* இரண்டு மலர்போன்ற விழிகள்.

இந்தக்கானல் வெளியில் ஒருவர் வந்து, எமது விளையாட்டை அழித்துச் சென்றார். அவர் நமது மையல் மனம்விட்டு அகன்றிலர். அவரை நமது மான்விழி மறந்திலது. நான் அன்னத்துடன் ஆடக் கண்டு, நேற்று என்னையே ஒருவர் நோக்கி நின்றார். அவர் அழகுத் தேமலைப் போல நம்மை விட்டுப் போகாது மனத்தில் உறைகின்றார். ஏ குருகே, நெய் தற் றலைவனுக்கு எமது நோயைச் சொல்லு. இக் கானலை வந்து அடையாதே, செல்!

இவ்வாறு பாடிய மாதவி, மீண்டும் கைக்கிளையும் குரலும் சேர்ந்த இனிய செவ்வழிப் பாலையிசை யெழுப் பினாள்.

நுளையர் விளரிப்பாலைப் பண் கொள்ளும் மாலையே என்னுயிரை நீ கொள்ள வல்லாய், கொள் :

*பையுள்நோய் கூரப் பகல்செய்வான் போய்வீழ
வையமோ கண்புதைப்ப வந்தாய் மருண்மாலை,
மாலை நீ யாயின் மணந்தார் அவராயின்,
ஞாலமோ நல்கூர்ந்தது வாழி மாலை.

இம் மருண்ட மாலை தீ வீசி வந்தது. இது நம்மை வருத்தும் என் றறியாமல், நின்னைப் பிரியேன் என்று பூக்கமழ் கானலில் பொய்ச்சூள் உரைத்துச் சென்றார் அவர். அதைப் பொறு, பெரியகடல் தெய்வமே அதைப் பொறு என்று நின் மலரடி வணங்குகிறேன்.

* * * *

கேட்டான் கோவலன்: " யான் கானல்வரி பாடினேன். தானும் பாடுவதாக யாழை வாங்கிக்கொண்டு,

---

* துன்பம்.

இன்னொருவன் மேல் மனம் வைத்து, பல மாயப் பொய் களைக் கூட்டி இந்த மாயத்தாள் பாடினாள்." என்று அவன் மனம் வேறுபட்டான். யாழிசையால் ஊழ் வினை சூழ்ந்தது. தான் விரும்பிய மதிமுகத்தாளை அணைத்த கைகளை, நெகிழ்த்தினான். 'பொழுது போயி ற்று' என்று எழுந்தான். உடனே ஏவலாளருடன் கோவலன் மாதவியைப் பிரிந்து சென்றான். அவன் போன பிறகு, தாதவிழ் பூஞ்சோலையில், தனது பாட் டொலி நிறுத்தி, கையற்ற நெஞ்சினளாய், வண்டியி லேறி இது காறும் தன்னைப் பிரியாத காதலனின்றியே மாதவி தனது மனை புக்காள். புகுந்ததும், உலக அரசர் தலைவணங்கும் சூழியானைச் சுடர்வாட் சோழன், சக் கிரவாளகிரியும் உள்ளே அகப்படும்படி வெண் குடை கவிப்ப, நீடூழி வாழ்க" என்று அரசனை வாழ்த் தினாள்.



## ௨0. மாதவி தூது

செந்தா மரைவிரியத் தேமாங் கொழுந்தொழுக
மைந்தார் அசோக மடலவிழக்—கொந்தார்
இளவேனல் வந்ததால் என்னாங்கொல் இன்று
வளவேன்றற் கண்ணி மனம் !

### இளவேனில்



தமிழ்நாடு நீர்வளம் நிறைந்தது. வடக்கு வேங்கட மலை, தெற்கு குமரி, கிழக்கும் மேற்கும் கடல்கள்—இவை அதன் எல்லைகளாம். மாடமாளிகை சிறந்த மதுரை, சோழர் தலைநகரான உறையூர், செழிப்புமிக்க வஞ்சி, புனலோசை மிக்க புகார்—இந் நான்கும் தமிழ்நாட்டின் தலைநகர்களாம்.

இந்நான்கு நகர்களிலும் மன்மதன் அரசு வீற் றிருந்தான். மன்மதனுக்குத் தென்றலே தேர், கிளியே புரவி, அந்தியே யானை; இம்மூன்றையும் முறையே பாண்டியர், சோழர், சேரர் காவலில் வைத்து, தனது படையாகிய மகளிருடன் அவன் புகார் நகரில் வீற் றிருந்தான். வசந்தன் வந்தான். குயில் சின்னமூதி ; அரசன் ஆணையைச் சின்னம் ஊதிக்கொண்டு படை களுக்கு அறிவிப்போன். “ குயிலே, மன்மதன் கொலு வீற்றிருக்கிறான் ; இளவரசனாகிய வசந்தன் வந்துவிட் டான் இங்கே” என்று தென்றலாகிய தூதன் அறிவித் தான். கொடிகள் நெருங்கிய சோலையில் வளரும் குயில், “மன்மத சேனைகளான பெண்டீர், இளவேனிற்

கேற்ற கோலங் கொள்ளுங்கள்" என்று பணிமொழி கூவியது. (பணிமொழி = கட்டளை).

மாமலர் நெடுங்கண் மாதவி குயிலின் கட்டளைக்கு இணங்கினாள். கோவலனைப் பிரிந்து வந்த அவள், வானுற வுயர்ந்த தனது நிலாமுற்றத்தில் உள்ள வேனிற் பள்ளியில் ஏறினாள். தென்கடல் முத்தையும், பொதிகைச் சந்தனத்தையும் தனது குங்கும வனமுலை மார்பிற்குக் காணிக்கையாக அணிந்தாள். பிறகு, பதுமாசனத்தில் இருந்து, கையில் சகோடயாழை வாங்கி வாசித்தாள். வலக்கை, பதாகை - முத்திரையாக யாழ்த் தண்டைப் பிடித்தது. இடக்கை நால்விரல் மாடகந் தழுவியது. தாழ்ந்த இசை (செம்பகை), அளவுக்கு மிஞ்சிய இசை (ஆர்ப்பு), மழுங்கல் (கூடம்), கம்பித்தல் (அதிர்வு) ஆகிய அபஸ்வரங்கள் இன்றி, ஸப்த ஸ்வரங்களையும் இனிது மீட்டி, வலிவு, மெலிவு, சமன் என்னும் மூவகைச் சுருதிகளையும் ஏற்றவாறு தழுவி, அகநிலை, புறநிலை, அருகியல், பெருகியல் ஆகிய மருதப் பண்களை அவற்றிற் கிசைந்த ஸ்வரங்களுடன் தெளிவாக வாசித்தாள்; புறநிலை மருதப் பண் மீட்டும் போது மனநெகிழ்ந்து மயங்கினாள் மாதவி.

மன்மதன் ஆணையை யார் தப்பமுடியும்? அவன் தனது மலர்க் கணையால் உலகை யெல்லாம் ஒரு தனிச் செங்கோல் செலுத்துவோன் அல்லவா? கட்சி வேறுபாடில்லாமல், அவன் ஆணையை உலகெலாம் வணங்குகிறது. மாதவி மேனி பசந்தது.

மாதவி கோவலனுக்குத் திருமுகம் அனுப்பினாள். மாதவி, சண்பகம், பச்சிலை, கருமுகை, வெண்பூ,

மல்லிகை, செங்கழுநீர் ஆகியவற்றால் அடர்த்தி யாக ஒரு மாலை தொடுத்தாள். பித்திகையின் (சிறு செண்பகம்) கொழுமையான முகையை எழுத்தாணியா கக்கொண்டு, அதைச் செம்பஞ்சுக் குழம்பில் தோய்த்து உதறி, முதிர்ந்த வெள்ளைத் தாழைமடலில் பின்வருமாறு எழுதலானாள் :—"இனிய இளவேனிலான இளவரசன், உயிர்களை யெல்லாம், அவை மகிழும் இணைகளுடன் சேர்க்கிறான். அந்திப்போதில் விரகவேதனை அரும்பும். அதில் தோன்றிய திங்கட் செல்வனும் நேர்மையானவ னல்லன், கோட்டமுள்ளவன். கூடினோர் இடையே ஊடினாலும், பிரிந்தவர் துணைகளை மறந்தாலும், அவன் மணமுள்ள பூங்கணையால் அவர் உயிரைக் கொள்வான். இது அவனுக்கு வழக்கம்; புதிதல்ல. இதை நீர் அறிவீ ராக...." அறுபத்துநான்கு கலைகளும் இசைந்தொழுக, பண்ணையும் இசைத்திறனையும் பழித்த இனிய நாவில், கட்டவிழ்ந்த ஒருதலைக் காமத்தில் விளைந்த மழலையாற் சொல்லிச் சொல்லி மேற்கண்ட காதற் பனுவலை எழு தினாள் மாதவி; சேடி வசந்தமாலையைக் கூவியழைத்து, அவளிடம் மாலையைக் கொடுத்து, "இந்தத் தூய மலர் மாலையிற் பொதிந்த பொருளையெல்லாம் கோவலனுக்கு அளித்து, அவனை இங்கே அழைத்துக் கொண்டு வா" என அவள் பணித்தாள்.

அவ்வாறே, வேல்விழிச் சேடி அம்மாலையைக் கோவலனுக்கு அளித்தாள். கோவலன் வேசை நடத்தையை இவ்வாறு கண்டித்து, மாலையை மறுத் தான்.* 1. திலகம், அளகம், விற்புருவம், குவளைக்கண்,

*கோவலன் சொல்லும் எண்வகை வரிகளின் பொருளும் விளக்கமும் அந்தந்த வாக்கியங்களிலேயே அடங்கியுள்ளன.

கொவ்வைச் செவ்வாய், குமிழ் மூக்கு இவற்றைக் கொண்ட அவள், மாதர் வாண்முகத்திற்குரிய மதர்த்த பார்வையுடன், முன்னே தோன்றி என்மேற் காத லானவள்போல நடித்தாள். அந்தக் கண்கூடு வரியை யான் அறிவேன். 2. அவள் புயல்போன்ற கூந்தலாள்; வருந்தி நிலாபொழியும் மதிமுகி ; நெறியின்றித் திரியும் கயல் விழியாள். அவள் தனது சொக்கழகில், இனிய பவளவாய் திறந்து, முத்திள நகைநலங் காட்டினாள். 'வா' என்ன வந்தாள், 'போ' என்னப் போனாள். இக் கருநெடுங் கண்ணி, இப்படிப் பலதடவை நடித்துச் சென்றாள். அந்தக் காண்வரிக் கோலமும் யான் கண் டேன். 3. அந்தி மாலை வந்ததும், என் சிந்தை வேட்கை நோயுறும். என் ஆற்றாமையை அவள் காண்பாள். கிளி மொழியும், அன்ன நடையும், மயில்போன்ற சாயலும் மறைத்து, ஒரு வேல்விழிச் சேடிபோன்று மாறு வேடம் புனைந்து, தனியே அவள் வருவாள். அந்த உள் வரி ஆடலும் யான் அறிவேன். 4. நான் பிரிவால் வருந்துவதை அவள் அறிவாள். காதலுடன் அவள் என்னை அணையமாட்டாள். சிலம்பு புலம்ப, மேகலை ஆர்ப்ப, அணிகளின் சுமை தாங்காத அந்த நுண் ணிடையாள், வாயிற் புறத்தினின்றும் நடிப்பாள். அந்த அற்புதமான புறவரியும் யான் அறிவேன். 5. கோதையும், குழலும், தாதுசேர் அளகமும், ஒரு கோவை முத்து வடமும், திருமுலைத்தடமும் கொண்டு, மின்னிடை வருந்த வாயிற்புறம் வந்து, அந்த நன்னுதல், சேடி மூலமே செய்தி சொன்னாள். உள்ளே புணர்ச்சிக் கருத்துடன், புலவிச் சொல்லுரைத்

தேன். அதை நான் மனம் வேறுபட்டுச் சொன்ன தாகக் கொண்டு, தளர்ந்த மேனியும், அழகிய மென்கூந் தலும் உடைய அவள், ஊடல் நடித்துச் சென்றாள். அந்தக் கிளர் வரியும் யான் அறிவேன். (கிளர்வரி = மாறு பட்ட இருவர் நடுநிற்பவர் சந்துசொல்லக் கேட்டு நடிப் பது.) 6. நான் பிரிந்துறைந்தேன். அவளும் பிரிந்து, எனது நெருங்கிய உறவினரிடம் தனது துயரத்தைத் தேர்ந்து தேர்ந் துரைத்து, என்மேல் அன்பிருப்பது போலே நடித்தாள். அந்தத் தேர்ச்சி வரியையும் யான் அறிவேன். 7. அந்திமாலையில் மயங்கிக் கண்ட பேருக் கெல்லாம் தனது விரகதாபத்தைக் கூறினாள் அந்த வண்டார் கூந்தலாள். அந்தக் காட்சி வரியையும் யான் அறிவேன். 8. தன்னை எடுத்தணைத்து மயக்கம் தீர்க்கும்படி, அவள் அவர் முன் மயங்கினாள். அந்த எடுத்துக்கோள் வரியையும் யான் அறிவேன். ஆயி ழையே, இப் பைந்தொடி நாடகக்கணியை யாதலாலே, இப்படியெல்லாம் நடித்துப் பிறரை மயக்குதல் அவ ளுக்கு இயல்பேயாகும்."

அழகிய தோடணிந்த திருமுகங்கொண்ட மாதவி எழுதிய தாழை-மடல் - திருமுகத்தை, இவ்வாறு சொல் லிக் கோவலன் மறுத்தான். சேடி வசந்த மாலை, மன மிரங்கி, உளம்வாடி, மாதவியிடம் விரைந்து சென்று நிகழ்ந்ததைச் சொன்னாள். 'மாலைப்போது வராதுபோனா லும், காலையில் நாம் கோவலனைக் காண்போம்' என்று செயலற்ற நெஞ்சுடன், பூமெத்தையிற் சாய்ந்து, இமை பொருந்தாமல் இருந்து வருந்தினாள் மாமலர் நெடுங்கண் மாதவி.



# உக. கண்ணகி கனவு



மாலை நேரம் பட்டினப்பாக்கத்தில், வீடுதோறும் மணிவிளக்கேற்றி, முல்லையும் நெல்லும் தூவி அவரவர் குலதெய்வங்களை இறைஞ்சுகின்றனர்; பெண்டிர், கணவர் மகிழ்ந்து கூடுதற்கேற்றபடி தம்மை அலங்கரித்துக்கொள்ளுகின்றனர். அத்தகைய வீடுகளில் ஒன்றில், மாலதி என்னும் அந்தண மனைவி யிருந்தாள். அவளுக்கு மகப்பேறில்லை. ஆதலால், அவள் கணவன் இரண்டாந்தாரம் மணந்து, ஓர் ஆண்மகவைப் பெற்றான். ஒருநாள் இரண்டாவது மனைவி வெளியே சென்றிருந்தாள். அப்போது குழந்தை அழுதது. மாலதி பசியால் துடிக்கும் குழந்தைக்குப் பால் ஊட்டினாள். பால்விக்கிக் குழந்தை மூச்சடைத்து இறந்தது. "ஐயோ தம்மகனை நான் கொன்றதாகவன்றோ தாய் தந்தையார் பழிசுமத்துவர்" என்று ஏங்கி, அக்குழந்தையை எடுத்துக்கொண்டு, கற்பகம் நிற்கும் கோயில், ஐராவதக் கோயில், அழகிய பலதேவர்கோயில், கிழக்கே சூரியக் கோயில், கைலாயக்கோயில், முருகன்கோயில், வச்சிரக்கோயில், மாசாத்தான் கோயில், அருகர்கோயில், சந்திரன்கோயில் ஆகிய கோயில்களெல்லாம் சென்று "தெய்வங்காள், என் துயர் தீர்மின்" என்று அழுதாள் மாலதி. ஒரு தெய்வமும் அவளுக்கு இரங்கவில்லை.

நள்ளிரவு; சுடுகாட்டுக் கருகேயுள்ள சாத்தன் கோயிலில், பிள்ளைப் பிணத்தை ஏந்திக்கொண்டு அவள் வரங்கிடந்தாள். அப்போது இளம்பெண்ணொருக்

கொண்டு ஓர் இடாகினிப்பேய் வந்தது. மாலதியிடம் இரக்கங் காட்டுவதுபோல் நடித்து, "மாசிலாய்! செய் தவம் இல்லார்க்குத் தேவர் வரங்கொடார். இது பொய்யுரை யன்று; பொருளுரையேயாம். ஆதலால் உன் கையிலுள்ள பிணத்தைத் தா" என்று பறித்துத் தின்று சென்றது. இடியுண்ட மயில்போல் ஏங்கி யழுது, சாத்தனுக்கு முறையிட்டாள் மாலதி. சாத் தன் மனமிரங்கினன்; "அன்னாய், ஏங்கி அழாதே; செல்; முன்னே உயிர்க்குழந்தை காண்பாய்" என்ற ருளி, குயில்கள் உறையும் ஒரு சோலையில், தானே குழந்தையாகக் கிடந்தான். அதை மகிழ்வுடன் எடுத் தணைத்துத் தாயிடம் கொடுத்தாள் மாலதி. அந்தண னுக்குக் குழந்தையான சாத்தன், பிரமசாரியாய், உயர்ந்த பொருள்கொண்ட கல்வி கேள்விகளிற் புலவ னானன். பெற்றோர்கள் இறந்தனர். அவன் அவர்க ளுக்கு நீர்க் கடன்களை முறையுறச் செய்தான். பிறகு தேவந்தி என்ற பெண்ணை மணந்தான். மக்கள் கண் ணுக்குத் தேவசரீரம் புலப்படாது. எனினும் "இவள் கண்ணுக்குப் புலப்படட்டும் "நரவுடல்கொண்ட பூவிழி யான தேவந்தி, தேவவுடல் கொண்ட என் சேர்க் கையைப் பொறுக்கும் திறனெய்துக" என்று சாத் தன் கூறி, அவளைக் கூடிச் சில காலம் இன்புற்று வாழ்ந்தான். பிறகு ஒரு நாள் சாத்தன் மூப்பற்ற தனது நித்திய இளநலத்தை (தேவ சரீரத்தை) விளக்கி, "என் கோயிலுக்கு நீவா" என்று அவட்குச் சொல்லி, மற்றவர்க்கு "நான் தீர்த்தங்களாடச் செல் கிறேன்" என்றோதி மறைந்தான். "எனது கணவனை

மீண்டும் தருக" என்ற வேண்டுகோளைக் காரண மாகக்கொண்டு தேவந்தி, சாத்தன் கோயிலில் வழிபட் டிருந்தாள்.

கண்ணகியும் கணவனைப் பிரிந்து வருந்துகிறாள் அல்லவா? அதை அறிந்தாள் தேவந்தி. தான் வணங்கும் சாத்தனுக்கு, அறுகு, சிறுபூளை, நெல் இவற்றைத் தூவி வழிபட்டுப் "பத்தினியும் தன் கணவனைப் பெறுக" என்று வேண்டிக் கொண்டு உடனே சென்று, "நீ கணவனை விரைவில் அடை வாய்" என்று கண்ணகியை வாழ்த்தினாள். கண் ணகி, தேவந்தியை வணங்கி "அம்மையே! உன் வாய்ச் சொல் பலிக்கும். ஆனால் நான் நேற்றிரவு கண்ட கன விளுல் என் நெஞ்சம் ஐயுறுகின்றது. கணவன் வந் தான்; என் கையைப் பிடித்தான். இருவரும் இவ்வூரை நீத்து ஒரு பெரும்பதியைச் சேர்ந்தோம். அப்பதியினர் பொய்த்தேளிடுவதுபோல, என்மேல் ஒரு பழி சுமத் தினர்; கோவலருக்கு அதனால் பெருந்தீங்குற்றது. நான் அவ்வூர் அரசன் முன் உண்மைசொல்லி முறை யிட்டேன். உடனே அந்த அரசனுக்கும், ஊருக்கும் ஒரு பெருந்தீங்குற்றது. இவ்வாறு துன்புற்ற யான் பிறகு கணவனுடன்பெற்ற நலங்களைக்கேட்டால் நீ நகு வாய்...." என்றுரைத்தாள் கண்ணகி. இத் தீக்கனவால் வருந்திய கண்ணகியைத் தேவந்தி மனமாற்றி, "பொற் றொடி, கணவன் உன்னை வெறுக்கவில்லை. முன்னே ஒரு பதிநோன்பு செய்யத் தவறினை. அதனாலேதான் உனக் குத் தீங்கு நேர்ந்தது. பழம் பிறப்பிற் செய்த இப் பிழையை இப்போது மாற்றலாம். மாற்றும் வகைகேள்:

காவிரி கடலுடன் சேரும் புகார் முகத்தில், அழகிய நெய்தற் கானலில், விசாலமான சோமகுண்டம், சூரிய குண்டம் என்னும் இரண்டு புண்ணியத் துறைகள் உள்ளன. அவற்றில் நீராடி, காமவேள் கோயில் புக்கு வணங்கிய தையலார், தமது கணவருடன் இவ்வுலகில் இன்புற்று, போகபூமியிற் சென்று பிறப்பர். நாம் ஒரு நாள் அப்பொய்கையாடப் போவோம்" என்றாள். "இது என் குலத்திற்குப் பெருமையாகாது" என்று மறுத்தாள் கண்ணகி.



## உஉ. கோவலன் வரவு

இச்சமயம் வேலைக்காரி உள்ளே ஓடிவந்து, "அம்மா, காவலன்போலும் நமது கோவலர் இதோ கடைவாயலில் வருகிறார்" என்ற நற் செய்தி சொன்னாள். கோவலன் வந்தான்; பள்ளியறையிற் புகுந்தான்; கண்ணகியின் வாடிய மேனியும், வருந்திய உள்ளமும் கண்டான். "கண்ணே, பொய்க் கோலம் புணர்ந்து வஞ்சிக்கும் வேசையுடன் கூடிக் களியாட்டயர்ந்து, ஏராளமான குலப் பொருட் குன்றெல்லாந் தொலைத்தேன்; வறுமையுற்று நாணுகிறேன்; வறியனானேன். என் தீச்செயல், என்னையே தலை குனிந்து நாணச் செய்கிறது" என்று வருந்தினான்.

பத்தினி என்ன செய்தாள்? 'ஏன் இப்படிப் போனது உமது புத்தி' என்று இடித்தாளா? இல்லை. 'வறுமையினால் தளர்ந்து, தான் விரும்பும் மாதவிக்குக் கொடுக்கக் கைப்பொருள் இல்லாமல் இவ்வாறு வருந்துகிறார் கணவர்' என்றெண்ணினாள். உடனே மங்கலப் புன்னகை முகங்காட்டி "இதோ எனது சிலம்புள்ளது; அதைக்கொண்டு செல்லுங்கள்" என்றாள். பத்தினியின் அன்புப் பெருமையை அறிந்த கோவலன் "சேயிழையே! இச்சிலம்பை முதலாகக் கொண்டு தொழில் செய்து, நான் இழந்த நகைகளையும், பொருட் குவையையும் மீண்டும் ஈட்ட முனைந்துள்ளேன். அதற்காக நான் திருவிளங்கும் மாடமதுரை நகர் செல்ல விரும்புகிறேன். நீயும் என்னோடு வா, எழுந்திரு; சுடர்

எழுமுன் இருட்டிலேயே புறப்படலாம்" என்றான். நீடித்த முன்வினைப்பயனால் அவனுக்கு இவ்வாறு செல்லத் தோன்றியது:—

" காவலன் போலும், கடைத்தலையான் வந்து, நம்,
கோவலன் " என்றாள் ஓர் குற்றிளையாள்; கோவலனும்,
பாடமை சேக்கையுட் புக்குத்தன் பைந்தொடி,
வாடிய மேனி வருத்தங் கண்டு, யாவும்
சலம்புணர் கொள்கைச் சலதியோ டாடிக்,
குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைந்த;
இலம்பாடு நாணுத்தரும் எனக் " கென்ன,
நலங்கேழ் முறுவல் நகைமுகங் காட்டிச்,
" சிலம்புள கொண்"மெனச் " சேயிழை கேள், இச்
சிலம்பு முதலாகச் சென்ற கலனோடு,
உலந்த பொருளீட்டுதே லுற்றேன் மலர்ந்தசீர்,
மாடமதுரை யகத்துச் சென் றென்னோடிங்கு,
ஏடலர் கோதாய் எழுக........ "

கண்ணகி பதில் சொல்லாமல் கணவனைப் பின் பற்றினாள்.



# உ௬. கவுந்தி யடிகள்

மீனெளிர் வானில் வெண்மதி நீங்கியது. காரிருள்; வானம் இன்னும் கண்விழிக்கவில்லை. தாம் அன்புடன் வளர்த்த ஆடும், மானும், அன்னமும் சேர்ந்துலாவும் வாயில் தாழ்ப்பாழ் திறக்கிறது. ஊழ்வினை உள்ளத்தை உந்த, வீட்டைத் துறந்து, கோவலனும் கண்ணகியும் மதுரைக்குப் பயணமாகின்றனர். வீட்டைத் தாண்டியுள்ள பன்மதக் கோயில்களையும் அவர்கள் வணங்குகின்றனர் : (1) அணிகிளர் அரவில் அறிதுயில் கொள்ளும் மணிவண்ணனை வலஞ்செய்கின்றனர். (2) பிறகு புத்தவிகாரங்கள் வருகின்றன. புத்தர் ஐங்கிளை ஓங்கிய அரசடி வீற்றிருந்தவர். அவருக்கு இவ்வூரில் இந்திரனால் ஏழுகோயில்கள் அமைக்கப்பெற்றுள்ளன. அக்கோயில்களில் அந்தரசாரிகள், (ஆகாயத்தில் உலாவும் தருமசித்தர்) புத்த தருமத்தை விளக்குவர். அத்தகைய ஏழு புத்த விகாரங்களையும் கண்ணகி - கோவலர் வணங்கினர். (3) அதன் பிறகு ஜைன மந்திரங்கள் வருகின்றன. ஜைனத் துறவிகள் அஹிம்ஸா தருமத்தைக் கடைப்பிடித்து ஊன்மறுப்பர் ; பொய்யா விரதம் பூணுவர் ; காமம் வெகுளி மயக்கம் ஆகிய குற்றங் கடிவர் ; அவர்கள் கேவல ஞானத்தால் விளங்கும் உண்மைப் பொருளறிந்து, உள்ளத்தடங்கி, நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம் ஆகிய தத்துவ மூணர்ந்தவர்கள். அத்தகைய விழுமியர் வானளாவிய பஞ்சபரமேஷ்டி மந்திரத்தில் வந்து கூடுவர். அருகர், சித்தர்,

ஆசிரியர், உபாத்தியாயர், சாதுக்கள் இவர்கள் பஞ்ச பரமேஷ்டிகள் ஆவர். இவர்களில் ஒவ்வொருவருக்கும் சமணர் வணக்கஞ் செலுத்துவர். அவ்வணக்கத்திற்குப் பஞ்ச நமஸ்காரம் என்று பெயர். அதுவே ஜைனர் காயத்திரி போலும். பஞ்ச பரமேஷ்டிகள் பெயரின் முதல் எழுத்துக்களில் உள்ள உயிரொலிகள் (அ + ஸி + ஆ + உ + ஸா) சேர்ந்தே ஓங்காரம் ஆயிற்றென்பது ஜைனர் கொள்கையாம். பஞ்ச பரமேட்டிகள் நிலை பெற்ற ஐந்து சந்தியுங்கூடிக் கலக்கும் பெரிய மன்றம் உண்டு. அதில் பொன்மலர் மலிந்த மங்கலமான அசோகமரம் ஓங்கும். அதன் கொழு நிழலில் ஒரு சிலாதலம் விளங்கும். தேர் அபிஷேகம் திருவிழா முதலிய விசேஷ நாட்களில், அந்த அசோகின் குளிர் நிழலில் சாரணர் வருவர். அவருக்காக அமைத்திருந்த சிலாதலத்தைக் கோவலனும் கண்ணகியும் வலம் வந்து வணங்கினர். இல்லற வொழுக்கம் பூண்ட சிராவகர் ஊர்க்கோடித்தெரு ஆறு போன்றது. அவ்வாறு உண்டாகும் மலைபோன்றது ஊர்க்கோபுரம். கண்ணகி - கோவலர் ஊர்வாசலைத் தாண்டினர்; அங்கே வசந்தச்சோலை விளங்கியது. இதனின்றே தென்றலையும், இளவேனிலையும், மன்மதன் இவ்வூர் அரசனுக்குத் திறையாகத் தருகிறானோ என்னும்படி, வனப்புடன் மலர்மலிந்து விளங்கும் அச்சோலையின் மதிற்புறத்தை அவர் கடந்து சென்றனர். காவிரியின் திருமுகத்துறைக்குச் செல்லும் தெரு, இருபுறமும் கனிச்சுமையால் தாழ்ந்த சோலை யணிந்தது. அதன் வழியே சென்று, திருமுகத்துறை வாயிலையும் கடந்

தனர். கொழும்புனற் காவிரி வடகரையில் அடர்ந்த சோலையில் நுழைந்து சென்றனர். இப்போது, இருவரும், காதவழி நடந்து, ஓர் இளமரச் சோலையைச் சேர்ந்தனர். இதற்குள், ஐவகைக் கூந்தலழகியான கண்ணகி, கொடியிடையும் பூவடியும் வருந்தக் குறுக வுயிர்த்தாள். முட்போன்ற பற்கள் விளங்க, இனிய மழலை மொழியால், "மதுரை மூதூர் யாது"? என்று வினவினாள். "நமது நாட்டினின்றும் இன்னும் ஆறைந்து காதம் உள்ளது; கிட்டத்தான்" என்று கோவலன் அன்ப நகை புரிந்தான்.

அச்சோலையில் ஸ்ரீ கோயில் ஒன்றிருந்தது. அதன் ஒரு பக்கத்தில் பள்ளியமைத்துக் கொண்டு, கவுந்தியடிகள் என்னும் தூய சமணத் துறவினி வசித்தாள். கண்ணகி - கோவலர் கவுந்தியடிகளைக் கண்டு வணங்கினர்.

கவுந்தி யடிகள் :—நல்ல வடிவழகு, உயர் குலம், சீரிய வொழுக்கம், அருகன் திருமொழி வழுவாத சிராவக விரதம் இவற்றையுடைய நீவிர், தீவினையாளர் போல வீடுவாசலைத் துறந்து இப்படி வந்ததேனோ?

கோவலன் :—தவமிகுந்த அடிகாள், வேறொன்றுமில்லை; நான் மதுரை மூதூர் சென்று, பொருள் தேடும் வேட்கை யுடையேன்.

கவுந்தி யடிகள் :—அது காடிடையிட்ட நாடாயிற்றே. இவளது மெல்லிய பாடகச் சீறடிகளைப் பருக்கைக் கற்கள் உறுத்துமே? இவள் அவ்வழி நடத்தல் அரிதல்லவா? ஆனால் இவள் விதிப்பயன் எப்படியோ, யார் அறிவார்? செல்லத் தகாதென்றால் நீங்கள் நிற்க

மாட்டார். மதுரை தென்தமிழ் நன்னாட்டின் புண்ணிய நகரம். அங்கே பாபம் என்னும் பேச்சில்லாது நீத்து, மாசற்ற கல்வி கேள்விகளிற் சிறந்த பெரியார் இருக்கின்றனர். அவர்செய்யும் தருமோபதேசத்தைக்கேட்டு, கேவல ஞானியான அருகனைப் போற்றி வணங்க வேண்டி, யானும் அம் மதுரைக்குச் செல்ல விரும்புகிறேன். வாருங்கள் செல்வோம்.

கோவலன் :—வணக்கம் ; அடிகாள், நீரே அப்படி யருளினால், இவ் வளையணிந்த தோளினள் கவலையை இப்போதே தீர்த்தவனாவேன்.

கவுந்தி :—பாராய் ! நாம் கொண்ட இவ்வழியில் உள்ள இடர்கள் பலவாம். சொல்லுகிறேன் கேள் :— வெய்யிலின் நிறத்தைக் காணவும் தாங்காத இம் மெல்லியலைக் கொண்டு, நாம் பூஞ்சோலைகளூடு செல்வோம். அங்கு வள்ளிக் கிழங்கு தோண்டிய குழிகளில் வாடிய சண்பகமலர்த்தாது நிரம்பியிருக்கும். கவனமாகச் செல்லாவிட்டால் அப்பொய்க்குழிகளில் வீழ்ந்து துன்புறுவோம். அக்குழிகளை ஒதுங்கிச் சென்றோமானால், தாழ்ந்த கிளைகளிற் கனிந்து தேனொழுகும் பலாப்பழங்கள் பகைவர்போலே நம்மை ஒருகால் முட்டும். அவற்றையும் விலகிப்போனால், பாத்திகளில் மஞ்சள் முதலியவற்றின் முளை எழுந்து சருகில் மறைந்து கிடக்கும் ; அவற்றுடன் செய்ய சுளையுடைய பலாவின் (தோலும்) கொட்டையும் சிதறியிருக்கும். இவை காலையுறுத்தும். நெடிய கயல்விழியாளின் காதற் கணவ ! நாம் வயல்வழி செல்வோம் என்றால், பூமணக்கும் குளங்களில், நீர் நாய் கௌவிய வாளைமீன் துள்ளிப் பொரு

தும். கயல்கள் ஓடிப்பாயும். மலங்குகள் (eels) மிளிரும். அவற்றைப் பார்த்து இக்காரிகை கலங்குவாள். கரும்புத் தோட்டங்களில் வைத்த பெரிய தேன்கூடுகள் உடைந்து பொய்கையிலுள்ள தூய நீருடன் தேன் கலந்துபோகும். அடங்காத் தாகத்தால் மதிமயங்கி, அத்தேன் கலந்த நீரைக் குடங்கையால் இவள் மொண்டு குடிக்கவும் நேரிடும். தேன் ஊன் இரண்டும் உண்ணுதல் பாபம் அல்லவா? உழவோர் வயல் வரப்புக்களில் அள்ளியிட்ட குவளை மலர்களில் தேனுண்ண வண்டுகள் மொய்த்திருக்கும். அவற்றின் மேல் நாம் அடிவைத்தால் வண்டுகள் இறந்துபோம். நமக்கு உயிர்க்கொலைப்பழி நேரிடும். நாம் வாய்க்கால் கரைவழியாகப் போவோமென்றால், அங்கே பார்த்து நடவாமல், நண்டு நத்தைகளை மிதித்துவிட்டால், அவை நமது காலால் நசுங்கித் துன்புறும். அதனுல் நமக்கு வரும் பாபம் தாங்க முடியாததாம். வயலும் சோலையுமே மதுரைக்கு வழியாதலால், நான் சொன்ன குறிப்பறிந்து, உயிர்களுக்குத் துன்பம் நேரிடாமல், நீ உன் மனைவியுடன் பார்த்து வழி நடக்க வேண்டும்.



## உச. வழிக் காட்சிகள்



இவ்வாறு சொல்லிப் பிக்ஷாபாத்திரமும், தோளி லிடும் உறியும், மயிற்பீலியும் எடுத்துக் கொண்டு, 'பஞ்ச நமஸ்கார மந்திரமே நமக்கு வழித் துணையாகுக' என்று, கண்ணகி-கோவலருடன், பழிப் பில்லாமல், சாதுவாக வழிநடந்தாள் கவுந்தி.

வழிக்காட்சிகளை இனிக் காண்பாம்: சனிக்கிரகம் மாறுபட்டாலும், தூமகேது தோன்றினாலும், விரிகதிர் சுக்கிரன் தென்புறம் படர்ந்தாலும், குடகு மலையுச்சியில் கடுமையான இடிமுழக்கம் செய்து கார்முகில் மழை வளஞ் சுரத்தலாலே காவிரி வெள்ளம் பெருகும். அது குடகுமலையிலுள்ள சந்தனம் அகில் முதலிய பொருட் களை அடித்துக்கொண்டு, மதகைத் தாவி ஓவென்று பேர்முழக்கம் செய்து, புகார் வாய்ப்புகும். கடல்வளம் அதை எதிரேற்கும். அந்த ஒலியின்முன் நீர் ஏற்ற ஓசையும் இறைகூடை ஓசையும் செல்லாவாம். அத்த கைய காவிரி வெள்ள வோசை கேட்டது ஒருபுறம்; நஞ்சை வயல்களில் செந்நெலும் கரும்பும் செழித் தோங்கியிருந்தன. அவை சூழ்ந்த மருதப் பொய்கை களில் தாமரை மலர்ந்திருந்தது. அத் தாமரைக் கூட் டத்தில் சம்பங்கோழி, கனைகுரல் நாரை, செங்கால் அன்னம், பைங்கால் கொக்கு, கானங்கோழி, நீர்க் காக்கை, உள்ளான், குளுவை, கணந்துள், பெருநாரை முதலிய புட்கள் வெற்றிவேந்தரின் போர்முனைபோலத் தத்தமக்குரிய பலவேறு குரல்களைக் கூடி யெழுப்பு

வதால் பேரொலி பரந்தது. சேறுதோய்ந்த மயிர் மூடிய உடலும், சிவந்த கண்ணும் உடைய எருமைகள் புரிக் கூட்டின்மீது தினவெடுத்த முதுகை உராய்த லால் முறுக்குவிட்டு நெல் முதலிய பலவகை வுணவுப் பொருட்கள் சிந்தின. அதைக்கண்டு பள்ள ரும் களமரும், சேர்ந்து எருதுகளை அதட்டும் ஒலி கேட்டது. செங்கயற் கண்ணும், இழிமொழிகளும் உடைய கடைச்சியர், வயல்களில் களையென முளைத்த மலர்களைக் களைந்து, நாற்று முடிகளை நடுகின்றனர். அவர், வளைப்புயமும், மேனியும் தோய்ந்த சேற்றுக் கோலத்துடன், கள்ளுண்டு கண்டபடி பாடுகின்றனர். நெற்கதிருடன் அறுகம்புல்லும் குவளையும் சேர்த்துத் தொடுத்த மாலையைக் கலப்பையிற் சூட்டி, கடவுளைக் கைதொழுது, உலகம் இரண்டாகப் பிளக்கும்படி உரக்க ஏர் மங்கலப்பாட்டுப் பாடுகின்றனர் உழவர். கதிர்க் குவியல்களில் மாடுகளைவிட்டுச் சூடடித்து நெல்லை அளப் பவர் *முகவைப்பாட்டுப் பாடுகின்றனர்.கிணைப்பொருநர் (வேளாளரைப் போற்றிப் பாடுவோர்) "மாடும்,பயிரும் வேளார் மாண்பும் வாழ்க!" என்று முழவதிர இனி மையாகவும் கம்பீரமாகவும் பாடுகின்றனர். ஆற்றங் கரையில் இத்தகைய ஓசைகளைக் கேட்டு மகிழ்ந்து, மூவரும் வருத்தமில்லாமல் வழிநடந்தனர். அப்பால், மங்கலமானஅந்தணர் இருக்கையைக் காண்கின்றனர். அந்தணர் ஓமஞ் செய்கின்றனர். ஓமாகுதிப் புகை சூழ்ந்த அவர் மாளிகைகள் மேகஞ் சூழ்ந்த மலைபோல மாண்புறத் தோன்றுகின்றன. அவ்வந்தணர் வேள்வி

* களத்திற் சூடடிக்கும்போது பாடும் பொலிப்பாட்டு.

அவியே மழைக்குக் கருபோல் மேலேறுகிறது. அதுவே புலிக்கொடி யுயர்த்த கரிகாலனுக்கு வெற்றி தருவதாம். வேளாளர் காவிரிப் புதல்வர்; இரப்பவர் சுற்றத்தையும், நாட்டைப் புரப்பவர் கொற்றத்தையும் தங்கள் உழவுத்தொழிலால் காப்பவர் ஆவர். தூற்றுமல் குவித்திருக்கின்ற நெற் பொதியின் மீது ஆலையில் பாகு காய்கின்ற புகை படிகிறது. அது முகில் தவழும் மலை போன்று மாண்புறத் தோன்றும். இவ்விதமான நெற் குவியல்களுடன் வேளாளர் பழம்பதிகள் காண்கின்றன. மூவரும் இவ்வாறு நாளொன்றுக்குக் காதவழிக்கு மேற்படாமல் நடந்து, ஊருக்கு ஊர் தங்கித் தங்கிச் சென்ற நாட்களில், ஒரு நாள், ஆறு சூழ்ந்த ஸ்ரீரங்கத்திற்கு வந்தனர்.



## உரு. சாரணர் உபதேசம்



அரங்கத்தின் பக்கம், ஒரு மரமடர் சோலையில், இரண்டு சாரணர் வந்து தோன்றினர். அவர்தாம் பட்டினப்பாக்கத்திலுள்ள அருகக் கோயில் சிலாதலத்திலிருந்து, சிராவகர்க்குச் சத்திய தருமோபதேசம் செய்பவர்.

"தொல்வினை யொழிக!" என்று கவுந்தி, கோவலன் - கண்ணகியுடன் சாரணரைப் பணிந்தாள். அவருள் மூத்தவன் இவர் வந்த காரணத்தை அவதிஞானத்தால் (முக்காலமும் அறியும் அறிவு) தெரிந்துகொண்டான். எனினும், விருப்பு வெறுப்பற்ற வீரனாதலின், அவருக்கு வரும் துன்பத்தை மனதிற் கொள்ளாமல், சமசித்தத்துடன் கவுந்தி யடிகளைப் பார்த்து, "ஊழ்வினை வந்தேதீருமென்றும், கடுங்காற்று வெளியில் விளக்குப்போன்று உடல் நில்லா தழியுமென்றும், அருகத் பரமேட்டியான இறைவன் அருளிய அறிவொளியே பிறவியிருளைப்போக்கும் வழியென்றும் உபதேசித்தான்.

"ஒழிகென ஒழியாது, ஊட்டும் வல்வினை.
இட்ட *வித்தின் எதிர்வந் தெய்தி
ஒட்டுங் காலை ஒழிக்கவும் ஒண்ணு.
கடுங்கால், நெடுவெளி இடும் †சுடர் என்ன,
ஒருங்குடன் நில்லா வுடம்பிடை உயிர்கள்.
அறிவன், அறவோன், அறிவுவரம் பிகந்தோன்,
‡ செறிவன், சினேந்திரன், சித்தன், பகவன்,

* விதைபோல. † விளக்கு. ‡ சலியாதவன்.

தரும முதல்வன், தலைவன், தருமன்,
* பொருளன், புனிதன், புராணன், புலவன்,
சினவரன், தேவன், †சிவகதி நாயகன்,
பரமன் ‡குணவதன், பரத்தில் ஒளியோன்,
தத்துவன், சாதுவன், ||சாரணன், காரணன்,
சித்தன், பெரியவன், செம்மல், திகழொளி,
இறைவன், குரவன், இயல்குணன், எங்கோன்,
குறைவில் புகழோன், குணப்பெருங் கோமான்,
சங்கரன், ஈசன், சயம்பு, சதுமுகன்,
§ அங்கம் பயந்தோன், அருகன், அருள்முனி,
பண்ணவன், எண்குணன், ¶ பாத்தில் பழம்பொருள்,
விண்ணவன், வேத முதல்வன், விளங்கொளி
ஓதிய வேதத் தொளியுறி னல்லது,
⁘ போதார் பிறவிப் பொதி யறையோர்..."

'இவ்வளவு பெருமைவாய்ந்த அருகத் பரமேட்டியின் வேதவொளியினாலேதான் பிறவிச்சிறை தப்பமுடியும்' என்றுபதேசித்த சாரணர் வாய்மையுரையைக் கேட்டுத் தலைமேற் கைகுவித்து, கவுந்தியடிகள் இவ்வாறு இறைவனைபோற்றி இறைஞ்சினார் :

$ " ஒருமூன் றவித்தோன், ஓதிய ஞானத்
திருமொழிக் கல்லதென் செவியகந் திறவா.
காமனை வென்றோன் ஆயிரத் தெட்டு

---

* மெய்ப்பொருளானவன்.
† மோட்சத்திற்கிறைவன். ‡ குணவிரதன்.
|| ஆகாசவாசி. § அங்க ஆகமத்தைத் தந்தோன்.
¶ பகுப்பில்லாத.
⁘ பிறவிச் சிறையினின்றுந் தப்பிப் போகமாட்டார்.
$ காமம் வெகுளி மயக்கம்.

நாமம் அல்லது நவிலா தென்னு.
ஐவரை வென்றேன் அடியிணை யல்லது,
* கைவரைக் காணினும் காணு என்கண்.
அருளறம் பூண்டோன் திருமெய்க் கல்லது
பொருளில் யாக்கை பூமியிற் பொருந்தா(து).
அருகர் அறவன் அறிவோற் கல்லதென்
இருகையுங் கூடி ஒருவழி குவியா.
மலர்மிசை நடந்தோன் மலரடி யல்லதென்
தலைமிசை யுச்சி தானணிப் பொறுஅது.
இறுதியில் இன்பத் திறைமொழிக் கல்லது
† மறுதர ஓதியென் மனம்‡புடை பெயராது!

*இப் புகழ்மாலையைக் கேட்டு மகிழ்ந்த சாரணர் தரையினின்றும் ஒருமுழம் மேலேழுந்து, "கவுந்திக்குப் பவபாசம் ஒழிக!" என்று வாழ்த்தி, அந்தர வழியே சென்றனர். "பந்தம் அறுக" என்று அவர்களைத் தொழுதுநின்று, பள்ளியோடத்தில் ஏறி மூவரும் காரிவித் தென்கரை சேர்ந்து, ஒரு பூம்பொழிலில் இருந்தனர்.*



* *கையிடம்.* † *மீண்டும்.*

‡ *புடைபெயர்தல்=எழுச்சிபெறல்.*

## உ௯. கவுந்தி சாபம்



அங்கே ஒரு வம்புக்காரப் பரத்தையும், வீண்பேச் சாளனும் வந்தனர். அவர்கள் கோவலனையும் கண்ணகியையும் கூர்ந்து நோக்கினர். 'காமனும் இரதியும் போன்ற இவர் யார்' என்று அறிய விரும்பிக் கவுந்தியடிகளிடம், "நோற்று உண்ணும் யாக்கை கொண்ட அருந்தவத்திர், உம்முடன் வந்த இவர் யாவர்" என்று வினவினர். "இவர் என் மக்கள்; மானிட யாக்கையர்; காமனும் இரதியும் அல்லர். வழி நடந்து வருந்தியிருக்கிறார்கள். அவர் பக்கம் செல்லாது நீங்குமின்" என்றனள் கவுந்தி. "ஒரு வயிற்றிற் பிறந்தவர், கணவனும் மனைவியுமாகக் கூடி வாழ்வதுண்டோ? நீர் கற்றறிந்த நூல் அப்படிச் சொல்லுகிறதோ!" என்று சூதாகப் பேசினர் அவ் வம்பர். இப் பொல்லாங்கைக் கேட்ட கண்ணகி, காதைப் புதைத்து, காதலன் முன் நடுங்கினாள். "எனது பூங்கோதையை இவர் இகழ்வதா; இவர் முள்ளுடைக் காட்டில் முது நரி யாகுக!" என்று மனத்திற் சபித்தாள் கவுந்தி. தவத்தினள் சாபம் பலித்தது. வம்பர் குள்ளநரிகளாகி ஊளையிட்டனர். அதைக் கேட்ட கண்ணகியும் கோவலனும் நடுங்கி, கவுந்தி சாபத்தாலேதான் இவர்கள் இப் படியானார்கள் என்று ஊகித்து,

> "......................அடிகாள்,
> நெறியி னீங்கியோர் நீரல கூறினும்
> அறியா மையென் றறிதல் வேண்டும்

செய்தவத்தீர், நுந் திருமுன் *பிழைத்தோர்க்கு
உய்திக் காலம் உரையீ ரோ............?'!

என்று வேண்டினர். "அறியாமையாலே அழிபிறப்புற்ற இவர், உறையூர் மதிற்புறம், பன்னிரண்டு மாதங்கள் இவ்வாறு திரிந்து, துயருற்ற பிறகு, முன்னை மானிட வுருவம் பெறுக!" என்று சாபவிடை செய்தாள் கவுந்தி. பிறகு மூவரும் பயணப்பட்டுக் கோழி யானையை வென்ற தலமாகிய உறையூரைச் சென்றடைந்தனர்.

புகார்க் காண்டம் முற்றிற்று.



* குற்றம் செய்தவர்க்கு.

## II. மதுரைக் காண்டம்

### உ௭. அந்தணன் சொன்ன வழி

உறையூர் ஸ்ரீ கோயிலில், பூங்கோதையால் தாழ்ந்து, நிழல் செழித்த ஓர் அசோக மரம் உண்டு. அதன் அடியில் திங்களை அடுக்கியது போன்று (சந்திர காந்தம், நித்திய விநோதம், சகல பாஜனம் ஆகிய) முக்குடையின்கீழ், செஞ்சுடர் ஞாயிறுபோல, ஆதியந்தமற்ற அறிவனை அருஹத் பரமேஷ்டி வீற்றிருக்கிறான். மூவரும் அந்த அனந்த ஞானியை வணங்கினர். ஸ்ரீ நிக்கந்தன் பள்ளியில் உள்ள முனிவர்க்கெல்லாம், ஸ்ரீரங்கத்தில் சாரணர் செய்த மேன்மையான உபதேச மொழிகளை, மாதவக் கவுந்தி மாண்புறச் சொன்னாள். மூவரும் சிராவகர் இல்லத்தில் இராப் பொழுதைக் கழித்தனர். தெற்கு நோக்கி மீண்டும் அதிகாலையில் உறையூரை நீத்துப் பிரயாணம் செய்து, மூவரும், சூரியோதயத்தில் வளநீர்ப் பண்ணையும் வாவியும் பொலியும் ஓர் இளமரச் சோலை சேர்ந்திருந்தனர். அங்கே தென்னன் புகழை இவ்வாறு வாழ்த்திக் கொண்டு, ஓர் அந்தணன் தோன்றினான் :—“ மன்னர் பெருந்தகையாகிய எமது கோமான் நீடூழி உலகங் காத்து வாழ்க! இந்திரன் பொறாமை கொண்டு மது

ரையை அழிக்கக் கடலை ஏவினான். (உக்கிர)பாண்டியன் வேலெறிந்து கடலைக் கால்மட்டத்திற்கு வற்ற வைத்து அடக்கினான். அந்தப் பழம் பகையைப் பொறாமல் கடல் குமறி, பஃறுளியாறு, பன்மலைகளையுடைய குமரிக்கரை இரண்டையும் உண்டு தீர்த்தது.* அதனால் வடதிசையிலுள்ள கங்கை யாற்றினையும், இமயமலையினையும் கொண்ட தென்னவன் வாழ்க! இந்திரன் சூட்டிய மாலையை மார்பிலேந்திய பாண்டியன் வாழ்க! தனது கைவளையை வீசி இந்திரன் மகுடத்தை வீழ்த்தி, மேகத்தைச் சிறைப்படுத்திய வழுதி வாழ்க! தீது தீர்த்து நாடாளும் தென்னவர்கோன் நீடூழி வாழ்க !"

இவ்வாறு பாண்டியனை வாழ்த்தும் அந்தணனை நோக்கிக் கோவலன், "உம்மூர் யாது? இங்கே வந்ததேன்?" என வினவினான்.

அந்தணன் இவ்வாறு தான்வந்த காரணத்தை உரைத்தான் :—"நான் குடகுமலைக் கருகே யுள்ள மாங்காடு என்னும் ஊரான். காவிரிக் கரையில், திருவரங்கத்தில், தேவர் பலர் தொழுதேத்த நெடிய பொற்குன்றத்தில் நீலமேகம் படர்ந்தது போல, ஆயிரந் தலைவிரித்த ஆதிசேஷன் மேல், திருவளர் மார்பனான அரங்கநாதன் பள்ளிகொண்டிருக்கிறான். அருவி பொங்கிப்பாயும் வேங்கட மலையுச்சியில், இருமருங்கும் ஞாயிறும் திங்களும் ஓங்கி விளங்க, அவற்றினிடையே, மின்னலான கோடியுடுத்து, வில்லைப் பூண்ட நல்ல கார் மேகம் போலே, பகைவரை யொறுக்கும் சக்கரமும்,

---

*இவ்வாறு கடல் உண்ட நிலமே குமரிக்கண்டம் அல்லது லெமூரியா என்பர்.

பால் வெண் சங்கும் திருமலர்க்கையில் ஏந்தி, மார்பில் நலந்தரும் அழகிய மாலை யணிந்து, பொன்மலர் ஆடை பொலிய, செங்கண் நெடியோன் வேங்கடேசப் பெருமான் நிற்கிறான். 'விஷ்ணுவின் இந்தப் பள்ளிகொண்ட கோலமும், நின்ற கோலமும் காட்டு' என்று, என் கண் மனத்தைத் தூண்டியதால், யாத்திரையாக இங்கே வந்தேன். வழியில் பாண்டியன் நாட்டின் சிறப்பும், அறச் செய்கையும் கண் குளிரக் கண்டேன். ஆதலால் பாண்டியனை வாழ்த்தி இங்கே வந்திருக்கிறேன்.

அனலோம்பும் அந்தணன் இவ்வாறு சொல்லக் கேட்ட கோவலன், "மாமறை முதல்வ, அவ்வாறாயின் மதுரைக்குப்போகும் நல்ல வழியை எங்களுக்கு விளக்கியருளுக" என்று வேண்டினான்.

அந்தணன் சொல்லலுற்றான் :—வெங்கதிர் வேந்தனை சூரியன் வெய்யில் கொளுத்துகிறான். அமைச்சரும் அரசனும் முறை திறம்பி, மன்னறம் இழந்து பாழான நிலம்போல சூரிய வெப்பத்தால், முல்லை நிலமும், குறிஞ்சி நிலமும் தமக்குரிய வளமை யிழந்து பாலைபோலக் காண்கின்றன. இந்த வெய்யிற் காலத்தில் இக் காரிகையுடன் இப்படி வந்தீரே ! கற்பாறையும், குன்றும், கண்ணை மயக்கும் காடு முரடான குறுகிய வழிகளும், பேய்த்தேருமாய்க் கிடக்கும் இந்த வெய்ய பாலையைத் தாண்டிச் சென்றால், கொடும்பாளூர், நெடுங்குளம் என்னும் இரண்டு ஊர்களுக்கும் நடுவே ஓர் ஏரி தோன்றும். அந்த ஏரிக் கரையைக் கடந்து சென்றால், பிறைசூடிய பரமன் ஏந்திய திரிசூலம்போல முப்பிரிவான வழி துலங்கும்.

அதன் வலப்புறம் செல்லத் துணிந்தால், அங்கே, தலைவிரிந்த வெண்கடம்பும், உலர்ந்த ஓமையும், தாள் பொரிந்த வாகையும், தண்டுலர்ந்த மூங்கிலும், நீர்வற்றிக் கரிந்துகிடக்கும் மரலும் காணும்; குடிநீர் காணாது, மான்கள் வேட்கையால் வருந்தும் காடுகள் காணும்; மறவர் ஊர்கள் காணும்; அது கடத்தற்கரிய காடு; அதைத் தாண்டிச் சென்றால், மலைநெல்லும், முதிர்கரும்பும், கொய் பூந் தினையும், செழித்த வரகும், உள்ளியும், மஞ்சளும், அழகிய கவலைக் கொடியும், வாழையும், கமுகும், குலைதாழ்ந்த தெங்கும், மாவும், பலாவும், சூழ்ந்தோங்கும்; தென்னவன் சிறுமலை திகழ்ந்து தோன்றும். அம்மலையை வலங்கொண்டு சென்றால் நீங்கள் மதுரையை அடையலாம்.

இனி முன்சொன்ன சூலப்பாதையின் இடது புறம் சென்றால், வண்டிசைக்கும் வாவிகளைச் சூழ்ந்த வயல்களும், தண்பூஞ் சோலைகளும் இடையே பல அருஞ் சுரங்கள் மேவிய காடுகளும் காணும்; அவற்றைத் தாண்டினால், அழகர் மலையை அடையலாம். அங்கே மயக்கங் கெடுக்கும் ஒரு பிலம் தோன்றும். அதில் மூன்று பொய்கைகள் உண்டு:—அவை யாவன: (1) புண்ணிய சரவணம்: இது விண்ணோர் ஏத்தும் பெருமை சான்றது; இதில் மூழ்கினால் ஐந்திர வியாகரணஞான முண்டாகும். (2) பவகாரணி: இதில் மூழ்கினால், இப்பிறப்பிற்குக் காரணமாகிய முற்பவ வுணர்ச்சியுண்டாகும். (3) இட்ட சித்தி: இதில் நீராடினால் நினைத்த வெல்லாம் பெறலாம்.

இப்பிலத்திற் புகுந்து செல்ல வேண்டினால், மலைமீது எழுந்தருளிய அழகரைத் தொழுது, அவன்

சேவடியைச் சிந்தையில் வைத்து, மலையை மூன்று தடவை வலஞ்செய்தால், நிலம் பிளக்க வீழும் சிலம் பாற்றின் கரையில், மணமலர் பூத்து விளங்கும் ஒரு கோங்கு மரத்தடியில், ஒரு தேவதை தோன்றுவாள். அவள் பெயர் வரோத்தமை; அவள் பொற்கொடி போன்ற வனப்பும், மின்னலைப் போன்ற பொலிவும், மேகத்தைப் போன்ற ஐங்கூந்தலும், வளைத்தோளும் உடையாள். அவள், “நான் இம்மலையடி வாழ்பவள். *இம்மைக்கின்பம், மறுமைக்கின்பம், இரண்டுமின்றி எக்காலத்தும் ஒரே தன்மையாய் அழிவற நிற்கும் இன்பம் இவை யாவை? சொல்லுங்கள். சரியான விடை கூறினவருக்கு எத்தொழிலும் புரிவேன். நீங்கள் அதைச் சொன்னால் இப்போதே இப் பிலக்கதவைத் திறந்து வழி விடுவேன்” என்பாள். நீங்கள் சரியான விடை கூறினால், கதவைத் திறந்து அவள் நல்வழி காட்டுவாள். அவ்வழியிலுள்ள பல இடைகழி வாயில்களைத் தாண்டினால், இரட்டைக் கதவுள்ள வாயில் ஒன்றுண்டு. அங்கே சித்திரத்தில் எழுதிய பூங்கொடி போன்ற ஓர் அழகி தோன்றி, “முடிவில்லாத இன்பம் எது?” என்று வினவுவாள். சரியான விடை கூறாதவர்களை வருத்த மாட்டாள்; அவர்கள் செல்ல வேண்டிய நெடுவழியே செல்ல விடுப்பாள். சரியான விடை கூறினால் (ஈறில்லா இன்பம் வீடுபேறே), முன் சொன்ன மூன்று பொய்கைக் கரைகளில் அவர்களைச் சேர்த்து, அவற்றின் விவரமும் சொல்லித் திரும்புவாள். பஞ்சாக்ஷரமும்

*இம்மைக் கின்பம் புகழ்; மறுமைக் கின்பம் புண்ணியம்; இரண்டிற்கும் இன்பம் மோக்ஷம், ஜீவன்முத்தியாம்.

(நம: சிவாய), அஷ்டாக்ஷரமும் (ஓம் நமோ நாராய ணாய) ஒருமுறையாக உள்ளத்திற் கொண்டு ஓதி, அம் மூன்று பொய்கைகளில் விரும்பிய ஒன்றில் நீராடினால், அருந்தவத்தினருக்கும் அரிதான பயனைக் காணலாம்.

இப் பயனையும் கருதாமல், மலைமிசை நிற்கும் பெருமாளின் பொன்மலரடி நினைமின். நினைத்தால், அவனது கருடக்கொடி ஊன்றி நிற்கும் இடத்தைக் காண்பீர். கண்டால் எம்பெருமான் இணைமலர்த் தாள் உங்களை ஏற்றுத் துன்பந் துடைத்துப் பேரின்பம் அருளும். அந்த இன்பவுறுதிகொண்டு மாண்புற்ற தென்னன் மரபினர் வாழும் மதுரை சேர்வீர். அவ்வாறின்றி, மேற்சொன்ன முக்கிளைப் பாதையில் நடுப்பாதை சென்றால், அது செந்நெறியாகும்; அவ் வழியே இனிய சோலை யணிந்த ஊர்களும், இடை யிடையே காடுகளும் உள்ளன. அவற்றைத் தாண்டிச் சென்றால், ஒரு தெய்வம் குறுக்கிடும்; அது அச்சமற்ற நயங்காட்டி, இடுக்கண் செய்யாது,செல்வாரைத் தடை செய்யும்; அதைத் தப்பினால் எளிதில் மதுரை சேரலாம். இம்மூன்று வழிகளில் விருப்பமானதைப் பற்றிச் செல் லுங்கள். நான் நிலங் கடந்த நெடுமுடி யண்ணலான அரங்கநாதன் அடிமலர் வணங்கச் செல்வேன்."

அது கேட்ட கவுந்தி இவ்வாறு கட்டுரைத் தாள் :—" நலமே புரியும் கொள்கையுடைய வேதியரே, நீர் சொன்ன பிலம் புகுந்து மூன்று பொய்கைகளில் நீராடி வரம்பெற வேண்டும் அவசியம் எங்கட்கில்லை. ஏனெனில், கற்ப காலம் வாழும் இந்திரன் காட்டிய 'ஐந்திரம்' என்னும் இலக்கணம் எமது அருகன் அரு

ளிய பரமாகமங்களில் விளங்கக் காண்பாய். ஆதலால் புண்ணிய சரவணத்தில் நீராடத் தேவையில்லை. முற் பிறப்பிற் செய்த வினைப்பயனை இப்பிறப்பிற் காணவில் லையா? அதற்காகப் பவகாரணியில் மூழ்குவதேன்?' வாய்மை தவறாமல், மன்னுயிர்களைத் தம்முயிர்போல மதித்து அஹிம்ஸா விரதம் கைக்கொண்டவருக்கு எய் தாத அரிய பொருளுண்டோ? ஆதலின், இட்டசித்தி யில் நீராடத் தேவையில்லை. உமது இஷ்ட தெய்வத்தை வழிபடச் செல்வீராக! எங்களுக் கிசைந்த வழியே செல்கிறோம்." இவ்வாறு கவுந்தி, வேதியனுக்கு இசைந்த மொழி கூறியனுப்பி, கொண்ட கொள்கை யைக் குறைவறச் செய்யும் கோவலுடன் அன்று ஒரு நல்ல ஊரில் தங்கினாள்.



## உஅ. மயக்குந் தெய்வம்

மறுநாள் மூவரும் முன்சொன்ன முக்கிளைப் பாதையில், நடு வழி பற்றிச் சென்றனர். வழி நடந்த களைப்பால் கவுந்தியும் கருந்தடங் கண்ணியான கண்ணகியும் பாதையில் ஒருபக்கம் தங்கினர். அப்போது கோவலன் நீர் வேட்கையால் ஒரு பொய்கையை நாடி அதன் கரையில் நின்றான். அங்கே முன்பு வேதியன் சொன்ன வனதேவதை கோவலன்மீது காதலுற்று, 'மாதவியை நயந்த இவன் நமக்கும் இன்ப மளிப்பான்' என்றெண்ணி வசந்தமாலை வடிவுகொண்டு முன்னே தோன்றி, கொடுங்காற்றால் நடுக்குற்ற கொடிபோல முதலில் அவனடி வீழ்ந்து, பொய்க் கண்ணீருகுத்து முறையிட்டது :—

"மணமாலையில் நான் எழுதியவை மாசற்ற மெய்ம் மொழிகளேயாம்; நீ ஏதேனும் தவறுதலாய்ச் சொல்லி யிருப்பாய்; அதனாலேதான் கோவலன் எனக்குப் பிரி வென்னும் கொடுமை செய்தான்" என்று என் முன் மாதவி மயங்கிப் பெருந்துயருற்றாள்;

> "மேலோ ராயினும், நூலோ ராயினும்,
> பால்வகை தெரிந்த பகுதியோ ராயினும்,
> பிணியெனக் கொண்டு பிறக்கிட் டொழியும்
> கணிகையர் வாழ்க்கை கடையே போன்ம்"

அருந்தவ முனிவரும், கற்றோரும் மதிநுட்பத்தால் நலந்தீ தறிந்தோரும், இது நம்மை வருத்தும் நோய் எனக் கருதி முகம்பாராது நீங்கும் வேசையர் வாழ்வு

இழிவாழ்வேயாம்' என்று செவ்வரி படர்ந்த செழுமை யான மழைக் கடைக் கண்ணால், வெண்முத்துப்போன்ற நீருகுத்தாள்; மார்பில் வெண்ணிலாபோலத் திகழும் முத்துமாலையைத் தன் கையாற் பறித்துச் சிந்தினாள். என்னைக்கூடத் துறந்தாள். எதிரில் வந்தவர் நீங்கள் மதுரைமா நகருக்குச் செல்வதாகச் சொன்னார்கள். வாணிகக் கூட்டத்துடன் உன்னைத் தேடிவந்தேன்; தனித்துயருற்றேன்; பகுத்தலரிய பண்பனே! உனது பணிமொழி யாது? என்னை அன்புகூறி ஆதரிக்க வேண்டும்".

'வன்காட்டில், மயக்குத் தெய்வம் உண்டென்று வியக்கத்தக்க வேதியன் சொன்னானல்லவா? இதுவே அது" என்று அதன் வஞ்சத்தை நீக்கும் அந்தரி மந்திரத்தைச் செபித்தான் கோவலன். தேவதை அஞ்சியது; "நான் வனசாரிணி; நின்னை விரும்பியே மயக்கஞ் செய்தேன்; மயிலைப்போன்ற சாயலுடைய உனது கற்பரசிக்கும், புண்ணிய முதல்வியான கவுந்திக்கும் நான் செய்த இக் குற்றத்தைச் சொல்லற்க. (சொன்னாற் சபிப்பர்)" என்று வேண்டித் தேவதை மறைந்தது.

* * *

கோவலன் தாமரையிலையில் பொய்கை நீர் கொணர்ந்து, கண்ணகி தாகத்தைத் தீர்த்தான். தாங்க முடியாத வெய்யில் கொளுத்தியது. கண்ணகி மெய் சோர்ந்து அடி கொப்புளிக்கத் துன்புற்றாள். இனி இக் கானிற் செல்லமுடியாது. அப்பொழுது, மயக்கஞ்செய்யும் அப் பாலைவனத்தில், ஒரு பூம்பொழில் தென்பட்டது; அதில் குரவம், கடம்பு, கோங்கு, வேங்கை

ஆகிய மரங்கள் அடர்ந்து மணம் வீசின. அச்சோலையில் ஒரு காளிகோயில் இருந்தது.

காளி மறவர் தெய்வம். மறவர் வில் வீரர்; அவர் மருத நிலமக்கள் போலே மாரிவளம்பெற வேண்டார்; தனி வழிச்செல்வார் பொருளையே விரும்புவர். தமது வீரச் செயலால் வருவதை யுண்பர். அவர் வலிய வில்லேந்திப் பகைவரைப் போரில் எதிர்ப்பர். போர் முனையில் அவர்களுக்கு வெற்றியளித்து, அவர்கள் இடும் ஆண்மையுள்ள பலியை எதிர்பார்த்திருப்பாள் காளி, நெற்றிக்கண் குமரி, விண்ணோர் வணங்கும் சக்தி, மாசறச் சிறந்த வானநா டுடையாள்.

கோவலன், விளைந்த மகரக்குழை பூண்ட கண்ணகி, மாதவக் கவுந்தி - ஆகிய மூவரும் இந்தக் காளி கோயிலில் வெய்யிலுக்குத் தங்கியிருந்தனர்.



# உக. கொற்றவை வழிபாடு



கவுந்தி, கண்ணகி, கோவலன் இம் மூவரும் காளி கோயிற் புறத்திற் காலாறி யிருந்த பொழுது, மறவர் மகளாகிய சாலினி (தேவராட்டி) தடங்கை வில்லுடன், நடுவூர் மன்றத்தில் தோன்றினாள். அவள் மறக்குடியில் நேர்த்திக்கடன் வாங்கும் உரிமை கொண்டவள். மறவர் பழைய கடமையை இன்னும் செலுத்தவில்லை. ஆதலால் தெய்வமுற்ற சாலினி, மயிர் சிலிர்க்க, கானவர் வியக்கக் கையெடுத் தோச்சி, பாட்டிற் கேற்றபடி அடியெடுத்து வைத்து, ஆவேசம் நடித்து வாய் முழக்கஞ் செய்தாள் :

"மறக்குடி மக்காள், நீங்கள் நேர்த்திக்கடன் கொடுக்கவில்லை. வலிய வில்லுடைய எயினர் பசுத் தொழுக்கள் பாழ்பட்டன. பகைவர் ஊரில் பசுவளம் பெருகியது. மறக்குடி மக்கள் ஆறெறி, சூறை, ஆகோள் ஆகியவவற்றால் வளம்பெறுவர். அந்த வழிப்பறி வளம் சுரக்கவில்லை. தமது மறத்தொழில் செல்லாமல், எயி னரும், அறக்குடிகள் போலே, வலியொடுங்கி, அடங் கிப்போயினர். கலைமான் ஏறிவரும் துர்க்கைக்கு நேர்த்திக்கடன் செய்யாவிட்டால், உங்கள் வில்லிற்கு அவள் வெற்றி தரமாட்டாள். களவால் உண்ணும் வாழ்க்கை வேண்டுமானால், நமது கொற்றவைக்கு உடனே நேர்த்திக்கடனைத் தாருங்கள். எயினர் காள்....!"

எயினர் வீர மரபினர்; பகைவரை வாள்விருந்திட்டுத் தலை யெண்ணுவோர். நோயால் இறந்து சுடப்பட்டுத் தலைபோகாத போர்வீரர்; ராஜபுத்திரர் போலவே தமிழ் மறவரும் வீரராகப் போரில், அல்லது மறவினையில் இறக்க ஆர்வங்கொண்டவர். ராஜபுத்திரர் பவானியைத் தொழுவர்; வீரமறவரும் கொற்றவையைத் தொழுவர். பவானி காளி, கொற்றவை எல்லாம் ஒரே தேவதையின் பெயரேயாம். தொல்குடி மறவர், இன்று சாலினி சொல்லைக் கேட்டுக் கொற்றவைக்குப் பலி கொடுக்க முன்வந்தனர்.

தமது மரபின் குமரியைக் கொற்றவை போல அலங்கரித்தனர்: அப்பெண்ணின் நெருங்கிய கூந்தலை நெடுமுடியாகக் கட்டி, அதில் பாம்புக் குட்டிபோலாக்கிய பொன்னூணைச் சுற்றினர். காவல் சூழ்ந்த தோட்டப்பயிரை அழித்த பன்றியின் வளைந்த வெண் கொம்பை ஒடித்து, இளம்பிறை போலச் சூட்டினர். வலிய, கொடிய புலிவாயைப் பிளந்து பெற்ற பல்வரிசைகளைத் தாலியாகப் பூட்டினர். வரியும் புள்ளியும் உடைய புலித்தோலை மேகலையாக உடுத்தி, பரிவுடன் கருவில்லை (வயிரவில்லை) வளைத்துக் கையில் கொடுத்து, முறுக்குக் கொம்புடைய ஆண்மான் மேல் குமரியை ஏற்றினர். பாவையும், கிளியும், மென்மயிர் படர்ந்த அழகிய சிறகையுடைய கானக் கோழியையும், நீல மயிலையும், பந்தையும், கழற்சிக் காய்களையும் தந்து சேவித்தனர்; துதித்தனர். வர்ணம், சுண்ணம், குளிர்ந்த வாசனைச் சந்தனம், அவரை துவரை முதலிய புழுக்கல், எள்ளுருண்டை, நிணச்சோறு, பூ, அகிற்புகை முதலிய வாச

னைகள் இவற்றை ஏவல்புரியும் எயினியர் ஏந்திப் பின் வந்தனர். வழிப்பறியின்போது அடிக்கும் பறை, சூறை யிடும்போது ஊதும் சின்னம், கொம்பு, குழல், எறி மணி இவை அந்த அணங்கின் முன்னே நின்று கணங் கொண்டு ஒலித்தன. வீரருக்கு வெற்றிகொடுத்து, அவர் தரும் பலியுண்ணும் கொற்றவைக்குச் சாலினி சிறப் புச் செய்து கைதொழு தேத்தினள். அவள்மேல் காளி வந்தாள். கணவனுடன் அங்கிருந்த மணம் நிறைந்த கூந்தலுடைய கண்ணகியைச் சாலினி நோக்கி, ஆவேசமாக,

> " இவளோ
> கொங்கச் செல்வி குடமலை யாட்டி
> தென்றமிழ்ப் பாவை செய்த தவக்கொழுந்து
> ஒருமா மணியாய் உலகிற் கோங்கிய
> திருமாமணி........."

என்று தெய்வம் வந்து சொன்னள். பிற்காலம் கண் ணகி கொங்கநாட்டுத் தெய்வமாக விளங்கப் போவதை யும், தமிழ்த்தாயின் தவப்புதல்வி யென்று அவளை உலகம் தொழுதேத்தப் போவதையும் சாலினி முன்பே சொன்னாள். கண்ணகி தனது வருங்காலப் பெருமையை அறியாள் ; 'மூதறிவாட்டியான சாலினி தெய்வ மயக் கத்தால் இப்படிக் கூறினள்' என்று நாணமுற்று, தனது அரிய கணவனது பெரிய முதுகுப் புறம் ஒடுங்கி, புதிய புன்னகை அரும்பி நின்றாள். குமரிக்குக் கொற்றவை கோலம் பொருந்தியது; காளி, தமக்கு அருள் புரிந்தாள் என மறவர் களித்தனர்.

" வெண்மதி சூடிய சென்னி, நெற்றி நடுவேயுள்ள இமையா நாட்டம், பவளவாய், வெண்ணகை, நஞ்சுண்டு

கறுத்த கண்டம், மேருவை வில்லாக வளைக்கக்கொண்ட வெஞ்சினப் பாம்பு நாண், நஞ்சொழுகும் துளைப்பல்லுள்ள பாம்புக் கச்சுடைய முலை, சூலமேந்திய வளைக் கரம், யானைத் தோலான உத்தரியம், சிங்கத் தோலாகிய மேகலை, சிலம்பும் வீரக்கழலும் புலம்பும் சீறடி இவற்றுடன் வலிய வெற்றிவாள் வாய்ந்த கொற்றவை, திரண்ட தோளுடைய மகிஷாசுரனைக்கொன்று அவன் தலைமேல் நின்ற தையல் பல வீரபக்தர் தொழும், அமரி, குமரி, கவுரி, சமரி, சூலி, நீலி, விஷ்ணுவின் தங்கை, ஐயை, ஐயமகள், திருமகள், அழகிய வளையல்கள் அணிந்த பாவை, போரில் பாயும் வீரக்கலை யறிந்த பாவை, புலவர் ஆராயும் அறிவுக்கலைகளையுடைய பாவை, அருங்கலங்கள் சூடிய பாவை, தமது அன்பர் தொழவந்த குமரி மாதேவி நமக்கு அருளினுள்" என்று வேடர் காளியைப் போற்றிப் பாடிக் கூத்தாடினுர்கள். இவ்வாறு வேடுவர் கொற்றவை புகழைப் பாடுவதற்கு வேட்டுவவரி யென்று பெயர். இனி அப்பாட்டின் கருத்தைச் சொல்லலாம்.

## காளிகோயில் முன்றிற் சிறப்பு

கண்ணுதலாகிய சிவபிரான் இடப்பாகத்தைப் பெற்ற காளி பலியுண்ணும் முன்றிலில், சுரபுன்னை, நாரத்தை, ஆச்சா, சந்தனம், அழிஞ்சில், மா முதலிய மரங்கள் செறிந்தோங்கின. பிறை யொளிர் சடையாளான காளியின் திரு முன்றிலில், வேங்கை மரங்கள் செம்பொன் மலர்கள் சொரிந்தன. செழித்த இலவங்க மரங்கள் செவ்விதழ் மலர்களைக் குவித்தன. காட்டுப்

புன்கு வெண்பொரி போன்ற மலர்களைச் சிந்தியது. திருமாலுக்கு இளையாளான காளியின் முன்றிலில் மணங்கமழும் கடம்பு, பாதிரி, புன்னை, குரா, கோங்கு முதலிய பூக்கள் மலர்ந்தன. அப் பூங் கொம்புகளில், வண்டினங்கள் யாழொலி செய்தன.

## வள்ளிக் கூத்து

கொற்றவை கொண்ட அணிகொண்டு நின்ற, இப்
பொற்றொடி மாதர் தவமென்னை கொல்லோ!
பொற்றொடி மாதர் பிறந்த குடிப்பிறந்த,
விற்றொழில் வேடர் குலனே, குலனும்!

ஐயையின் அழகிய அணி புனைந்து நின்ற இக் குமரி என்ன தவம் செய்தாளோ! அவள் குலத்திற் பிறந்த மறத்தொழிலாளரான, விற்பிடித்த எயினர் குலம் எவ்வளவு சிறந்த வீரக்குலம்!

## முன்னிலைப் பரவல்

வானோர் வணங்க, வேதங் கடந்த சக்திப் பொருளாய், ஞானக் கொழுந்தாய், என்றும் சலிப்பின்றி நிற்கும் நீ, யானைத்தோல் போர்த்து, புலித்தோல் அணிந்து, காட்டெருமையின் கருந் தலைமேல் நின்றதென்ன மாயமோ! அரன், அரி, அயன் இவர்களின் நெஞ்ச மலரில் வீற்றிருந்து, விரி கதிர் வீசும் அருட் சோதி விளக்காய் நிற்கும் நீ, வரிவளைக்கையில் வாளேந்தி, மகிஷாசுரனைக் கொன்று, கரிய, திரிந்த கொம்புடைய கலைமீது நின்றதென்ன மாயமோ?

சங்கமும், சக்கரமும், தாமரைக் கையேந்திச்
செங்கண் அரிமான் சினவிடைமேல் நின்றயால்,

கங்கை முடிக்கணிந்த கண்ணுதலோன் பாகத்து,
மங்கை யுருவாய் மறையேத்தவே நிற்பாய் !

## வென்றிக் கூத்து

*கொன்றையும் துளவமும் சேர்த்துத் தொடுத்த மலர்செறிந்த மாலையைத் தோள்மேல் இட்டு, அசுரர் நலிய, அமரர் பொலிய குமரிக்கோலங்கொண்டு ஆடினாள் காளி.*

## கூத்துள் படுதல்

*அசுரர் தமது மாயத்தால் பாம்புந் தேளும் கொண்டு துன்புறுத்தினர். காளி மரக்கால் பூண்டாள்; பொன்னரிச் சிலம்பும், சூடகமும், மேகலையும், 'ஜல் ஜல்' என்று ஆர்க்க, ஆர்க்க, மாயம் புரியும் அவுணர் வீழ, மரக்கால் மேல் நின்று வாளை எடுத்தாடினாள். அவளது காயாம்பூ மேனியைப் போற்றி அமரர் கைகளால் மலர்மாரி சொரிந்தனர்.*

## கொற்றவை நிலை

*பகைவர் அஞ்சும் ஒரு சிற்றூரில் ஒரு வீரன் ஆனிரை கொள்ள வருகிறான். அவனுக்குப் போர்ப் பூவான வெட்சி சூட்ட, வெள்ளிய வாளேந்திய கொற்றவையும் துணையாய் வருகிறாள். எனில், கருங்குருவி கடிய குரலிசைத்து, 'இந்த வீரனை எதிர்த்தால் கெட்டீர்' என்று கூவாதோ? இவ்வாறு செல்லும் வீரன், பழைய கடன் கொடாததால், கள் விலைச்சி கள்ளூற்ற மறுக்கிறாள். பட்சி நல்ல நிமித்தம் கூறுகிறது. 'கள்ளில்லாவிட்டால் பரவாயில்லை'*

யென்று அங்கிலேயிலேயே கையில் ஏந்தி, காலதாமதம் பொறுக்காமல், மறவன் பகைவர் மாடுகளைக் கவரச் செல்லுகிறான். அவ்வளவு துணிவும் உறுதியும் உள்ள வீரனைப் போற்றி, ஆளிக்கொடி யேந்தி, அவன் வில்லுக்கு முன்னே செல்லுகிறாள் காளி.

## கண்டார் கூற்று

பகைவர் ஆனிரையை வீரன் கவர்ந்து வந்து முன்றிலிற் கட்டியிருக்கிறான். அவற்றைக் கண்டவன் இவ்வாறு சொல்லுகிறான் :—இளம் பாக்கியமுடைய எயினப் பெண்ணே ! முருந்தேர் இளநகை நங்காய் ! கண்டார் கருத்தை யுண்ணும் மாமலர்க் கண்ணியே, பகையூரார் அலறும்படி நினது ஐயர் முன்னே கொணர்ந்த ஆனிரைகள் இவை காணாய். போர்க்கருவிகளைச் செய்யும் கொல்லன், துடிகொட்டுவோன், பாடும் பாணர், கள்விலையாட்டி, ஒற்றன், பட்சி சகுனம் சொல்வோன் முதலியோர், நரைத்து முதிர்ந்த எயினர் எயிற்றியர் - இவர்களுடைய முன்றிலில் நிறைந்து நிற்கின்றன. காணாய்.*

## அவிப்பலி

இனி, காளிக்கு எயினர் குருதிப்பலி கொடுத்துப் பாடுகின்றனர்.

ஞானச் சுடருடன் திரியும் முனிவரும், அமரரும் இடர்கெட அருளும் நினது திருவடி தொழுதோம். கொல்லுந் திறமை மிக்க எயினர், நினது அடிதொட்டுப்

---

*அதாவது வீரர் தாம் கவர்ந்த ஆனிரையைத் தமக்குதவிய பேர்களுக்கும் பங்குவைத்துக் கொடுத்திருக்கின்றனர்.

போர்புரிந்து வெற்றி பெறுவர். அதன்பின் அவர்தரும் கழுத்தினின்றும் சுரக்கும் இரத்தப்பலியைக் கொள்வா யாக. கொற்றவையே அணிமுடி யுடைய இந்திராதி தேவர் பணியும் நீலமணி யுருவினளே, நினது மலரடி தொழுதோம். ஆனிரை கவரும் திறனுடைய எயினர், நின்துணையால் பகைவரைப் பொருது வென்றதற்குக் காணிக்கையாக, ஊனின் றொழுகும் இந்த இரத்தப் பலியைக் கொள்வாயாக.

> துடியொடு, சிறுபறை, வயிரொடு துவைசெய,
> வெடிபட வருபவர், எயினர்கள் அரையிருள்,
> அடுபுலி யனையவர், குமரிநின் அடிதொடு,
> படுகடன் இதுவுது பலிமுக மடையே.

உடுக்கு, சிறுபறை, கொம்பு முதலானவைகள் முழங்க, அண்டம் வெடிபட வீரவேகத்துடன் நள்ளிர வில் வரும் எயினர்கள், கொல்லும் புலிபோன்ற போர் வல்லவர், நினது அடிதொட்டு வெற்றிபெறுபவர். அவர் உனக்குப்பட்ட கடன் இது; கொற்றவையே எங்கள் அவிப்பலியை ஏற்பாயாக.

## பலிக் கோடை

சங்கரி, அந்தரி, நீலி, சடாமகுடத்தில் பாம்பும் பிறையும் அணிந்தவளே, வழிப்போக்கர் பெருகி, வழிப் பறி பெருகுவதாக! அதற்கு விலையாக அம்பு பூட்டிய வலிய வில்லுடைய எயினர் தரும் இப்பலியை ஏற்றுக் கொள். அமுதுண்டும் தேவர் ஒருகாலம் சாவர். எவரும் உண்ணாத நஞ்சுண்டும், நீ அழிவில்லாமல் என்றும் இருக்கிறாய். பகைவர் ஊர் உறங்கும்போது, துண்

ணென்று துடிகொட்டி அவரைப் பொருது வீழ்த்தும் இரக்கமற்ற எயினர் இடும் நேர்த்திக்கடனை யுண்ணுவாயாக. முன்னே கண்ணன் மருதிடை நடந்தான். வஞ்ச அரக்கன் சகடையை யுதைத்தான். அவையெல்லாம் இயன்றது, அவனுட் புக்க நின் சக்தியாலேயாம். நீயே அவ்வாறு அருளினாய். வழிப் போக்கர் பொருள் கொண்டு அவருக்குப் புண் செய்வதல்லது, அருளில்லாத, இரக்கமில்லாத, வன்னெஞ்சரான எயினர் இடும் பலிக்கடனை உண்ணுவாய்.

## கூத்தாற் பெற்ற பயன்

வேதாவின் பின்னே தோன்றிய அகத்தியன் உறையும் மரச்சுமை மிக்க பொதிகையை ஆளும் பாண்டியன், பகைவர் நடுங்கும் வெய்ய திறலோன். அவன், பிறநாட்டார் போர்முனையும், கரந்தையும் (நிரைமீட் போர் அணியும் மாலை) பாழ்படப் போர்த் தொடக்கத்தை அறிவிக்கும் வெட்சிமாலை சூடுக. அவன் வெந்திறல் வீரன்.



# ௧௦. நிலாப் பயணம்

தேவராட்டியின் கோலமும் கூத்தும் முடிந்ததும், கோவலன் புண்ணியக் கவுந்தியை அடி தொழுது இவ்வாறு வேண்டினான் :— " அடிகாள், இக் காரிகை கடுங்கதிர் வேனிலைப் பொறுக்க மாட்டாள். பருக்கைக் கற்கள் நிறைந்த இவ் வெய்ய பாலையில் இவளது சீறடி படியாது. ஆதலால் பகலொளியில் நடப்பதைவிட, பல்லுயிர்க்கும் தனது தண்மையால் நன்மைசெய்து காக்கும் மதிநிலாவில் நடப்பது நல மாகும். இரவில் நடப்பதிற் குற்றமில்லை. காட்டில் விலங்குகள் உண்டு ; எனினும் அச்சமில்லை. கண்ட வரைப் பற்றிக்கொள்ளும் குறிஞ்சி நிலத்துள்ள கரடி யும் பாம்புப் புற்றைத் தோண்டாது. பாலைநிலத்தி லுள்ள வரிவொளிர் வேங்கையும் மானினத்தைப் பகைப்பதில்லை. மருத நிலத்தில் கார்மேகத்தை ஊடுருவி உருமும் இடியும் நம்மை வருத்தாது. இரைதேடும் நெய்தல் நில முதலையும், தீங்கு செய்யாது. கொடிய தேவதையும் பாம்பும், சார்ந்தவருக்கு உறுகண் செய்யா. முல்லைக் காட்டில் அச்சமில்லை. ஏனெனில் இந்த ஐந்து நிலங்களும் செங்கோற் பாண்டியன் காக் கும் நாடென்று எங்கும் பெரும்புகழ் பெற்றன. இங்கே வெயிற் கொடுமைதான் உண்டு ; விலங்குக் கொடுமை யில்லை."

கவுந்தியடிகள், " அவ்வாறே நிலவில் பயணம் வைத்துக் கொள்வோம் " என்று சம்மதித்தாள்.

## கான் வழி நடத்தல்

(கண்ணகி, கோவலன், கவுந்தியடிகள்)



புலவர் நாவிற் பொருந்திய தென்றலொடு
பானிலா வெண்கதிர் பாவைமேற் சொரிய,
. . . தொடிவளைச் செங்கை தோளிற் காட்டி
மறவுரை நீத்த மாசறு கேள்வி . . . .
அறவுரை கேட்டாங் காரிடை கழிந்து,
காதலி தன்னொடு கானகம் போந்தான். . . .

கொடுங்கோல் வேந்தனால் வருந்தும் குடிகள் 'இந்தக் கொடியன் எப்போது ஒழிவான்; அன்பும், தண்மையும் உள்ள வேந்தன் எப்போது வருவான்' என்று எதிர்பார்த் திருப்பார்கள். அவர்போல, வெங்கதிரோன் எப் போது படுவான்; தண்கதிர்த் திங்கள் எப்போது வரும் என்று மூவரும் சமயம் பார்த்திருந்தனர். எண்ணற்ற நட்சத்திரத் தானையுடன், பால்வெண் கதிர் பரப்பி, தென்னவர் குலத்தின் மூலபுருஷனான திங்கட்செல் வன் தோன்றினான்.

"கொடுங்கோல் வேந்தன் குடிகள் போலப்
படுங்கதிர் அமயம் பார்த்திருப் போர்க்குத்
தென்னவன் குலமுதற் செல்வன் தோன்றி..."

மலயத்தில் ஓங்கி, மதுரையில் வளர்ந்து, புலவர் நாவிலே பொருந்தி யெழுந்த இனியதென்றல் வீசுகிறது. வெண் கதிர்த் திங்கள், பாவைமேல் பால் நிலா பொழி கிறது. கண்ணகியின் பரிதாப நிலை கண்டு, பூமா தேவியே, "கண்ணகி, முன்னே கணவன் மாதவி மோகத்தில் இருந்தான் என்று உடல் வெறுப்புக் கொண்டிருந்தாய். வயதிற்குரிய அணி யழகு சுகம் அனைத்தையும் துறந்தாய். உன் சிறிய வனமுலையிற் சந்தனக் குழம்பு பூசுவதில்லை ; பூங்குழலில் தாதுகும் தண்ணிய கழுநீர் மாலை முடிப்பதில்லை ; முல்லையும் முடிப்பதில்லை. பசிய சந்தனத் தளிரும், பல பூவிதழ் களும் உனது செந்தளிர் மேனியிற் சேருவதில்லை ; அவ்வாறு பிரிவுத் துயரால் நீ வருந்தினை. இப்போதோ, காதலன் அருகிலிருக்கிறான். வேனில் திங்களை இப்

போது நீ வேண்டுவாயே. அந்தோ, இப்போது ஓயாத பிரயாணத்தாலும், கவுந்தியடிகள் உடனிருப்பதாலும், நீ இளமைக்குரிய இன்பத்தை அனுபவியாதவளாகிருய். என்ன பரிதாபம்!" என்று நெட்டுயிர்த்து, ஓசையடங்கி அமைதியானுள். உடனே மூவரும் புறப்பட்டனர். "கண்ணே! கடுவழிகளில் இடர்ப்பட்டாய். இவ்வழியில் புலி திரியும்; கோட்டான் கூவும்; கரடி இருக்கும்; இவற்றிற்கு அஞ்சாமல் வருவாயாக" என்று மனைவிக்குத் தைரியஞ்சொல்லி, வளையலணிந்த அவள் செங்கையைத் தனது தோளிற் சேர்த்தி மறவுரை நீத்த, தூய கவுந்தியின் அறவுரைகளைக் கேட்டுக் கொண்டே வேனிலால் வெந்து கரிந்த மூங்கிற்காட்டிலே வழிநடந்தான் கோவலன்.

'காலை புலர்ந்தது; கதிர் வருகிறது' என்று காட்டுக் கோழிகள் கூவி யறிவித்தன. மூவரும் ஒரு பார்ப்பனச் சேரியை அடைந்தனர். அங்கேயுள்ள பார்ப்பனர், வேதமோதாமல் வரிப்பாட்டுப் பாடினர். அவரை விட்டு விலகி, மூவரும் ஒரு கோயிற் புறத்தைச் சேர்ந்திருந்தனர். கோவலன் கவுந்தியையும், காதலியையும் சேமமுள்ள அடக்கமான வேலி சூழ்ந்த இடத்தில் அமர்த்தினுன். பிறகு, முள்வேலியை நீங்கி, காலைக் கடன் கழிக்க நெடுவழி நடந்து, ஒரு நீர்த்தடத்தை அடைந்தான்.



## ௬௧. மாதவி செய்தி

அங்கே கௌசிகன் என்ற ஓர் அந்தணன் கோவலனைத்தேடி, மாதவி செய்திகொண்டு வந்தான். தனது காதலியுடன் கானகம் நடந்ததை எண்ணி, கொல்லன் உலையில் ஊதும் துருத்திபோல நெட்டுயிர்த்து, மனங் கலங்கி, நிறம் மாறித் தனித்து நின்ற கோவலனை, அந்தணனுக்கு, கண்மயக்கத்தால் அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை. இருந்தாலும், சந்தேகந் தீர அவன் ஒரு சூழ்ச்சி செய்தான். ஒரு மாதவி (குருக்கத்தி) படர்ந்த நிழலில் நின்றான்.

> "கோவலன் பிரியக் கொடுந்துயர் எய்திய,
> மாமலர் நெடுங்கண் மாதவி போன்று, இவ்
> அருந்திறல் வேனிற்கு அலர்களைந் துடனே,
> வருந்தினை போலு நீ மாதவி"

என்று அக் குருக்கத்தியை நோக்கிச் சொன்னான். 'மாதவி' யென்றதைக் கேட்டதும் கோவலன் "ஐய, தாங்கள் கூறியதென்ன? அதன்பொருளென்ன?" என்று வினவவே "இவனே கோவலன், கண்டுபிடித்தேன்" எனத் தெளிந்து, அருகே சென்று, பிரமசாரியான கோசிகன் கொள்கைப்படி சொல்லலுற்றான்: "ஐய, இருநிதிக் கிழவனான உனது தந்தை மாசாத்துவானும், பெருமைபெற்ற உனதுவீட்டுமுதல்வியான தாயும், மணியிழந்த நாகம் போன்று ஒளியிழந்து வருந்துகின்றனர். உயிரிழந்த உடல்போன்று, உனது உறவினர் (மாமனார் முதலியோர்) செயலற்றுத் துயர்க்கடலில் வீழ்ந்தனர்.

தந்தை உன்னைத் தேடிக் கொண்டுவர எங்கும் ஏவலாளரை அனுப்பினான். அவர்கள் உன்னைத் தேடித் திரிகிறார்கள். தந்தை தசரதன் சொல்லைக் காக்க வெய்ய காட்டிற்குச் சென்ற இராமனைப் பிரிந்த அயோத்தி போன்று, புகார் நகரம் உன் பிரிவாற் பெருந்துய ருற்றது. திருமுகத்தை நீ மறுத்ததாக வசந்தமாலை சொன்னதும், மாதவி, மேனி பசந்து, நெடுநிலை மாடத்தின் இடைநிலத்தில் உள்ள ஒரு படுக்கையில், நின்னை நினைந்து வருந்தி வீழ்ந்தாள். அவளது விரக வேதனையைக் கேட்டு, ஆழ்ந்த துயரெய்தி, அங்கே சென்றேன். பெருந்துயருற்ற மாதவி 'அந்தணா உனது இரண்டு அடிகளையும் தொழுதேன். எனக்குற்ற துயரத்தைத் தீர்ப்பாயாக' என்று தனது மலர்க்கையால் இந்த ஓலையெழுதி 'என் கண்மணியனைய கோவலருக்கு இதைக் காட்டுக,' என்று தந்தாள். இந்த ஓலைகொண்டு உன்னைக் காணாமல் பல தேசங்கள் சென்றலைந்தேன்" என்று சொல்லி, பிரிவுத்துயரால் உள்ளமழிந்து வருந்தும் போதார் கூந்தல் பூங்கொடி மாதவியின் ஓலையைக் கோவலன் மலர்க்கையில் நீட்டினான் அந்தணன்.

ஓலை மடிப்புறத்து, மாதவி கூந்தலால் இட்ட இலாஞ்சனை நெய்மணம் அடித்தது. அது கோவலன் முன்பு நுகர்ந்த மணமேயாம். அது பழைய நினைப்பை யுணர்த்தியது. அதைக் கை விடாமல் பிடித்திருந்து, பிறகு அவன் ஓலையைப் பிரித்துப் படித்தான் :—

"அடிகள் முன்னர் யான்அடி வீழ்ந்தேன் ;
வடியாக் கிளவி மனங்கொளல் வேண்டும் ;
குரவர் பணி யன்றியும் குலப்பிறப் பாட்டியோடு

இரவிடை கழிதற்கு என்பிழைப் பறியாது,
கையறு நெஞ்சம் கடியல் வேண்டும்.
பொய்தீர் காட்சிப் புரையோய் போற்றி !"

" தேவரீர் திருவடிகளுக்குத் திக்கு நோக்கி விழுந்து வணங்கினேன். பொய்ம்மை நீங்கிய மெய்க்காட்சியுடைய பெரியோய்! திருத்தமற்ற சொல்லாயினும், இப் பேதை யுரைப்பதை மனத்திற் கொள்ளவேண்டும். தங்கள்பெற்றோர் மூப்பெய்தினர். அவர்களுக்கு உடனிருந்து பணிவிடை செய்வது நன்மகனாகிய தங்கள் கடமை. அப்படிச்செய்யாமல், உயர்குலக் கற்பரசியான மனைவியுடன், இருட்டோடு ஊர்விட்டுச் சென்றதேன் ஐய ? அப்படி ஊரைவிட்டுச் செல்லும்படி என்ன குற்றம் நேர்ந்தது ? நான் செய்த பிழை யாது ? அதை அறியாமல் எனது மனம் வருந்துகிறது. என் துயரைத் தீர்க்கவேண்டும்."

மாதவி எழுதிய மொழிகளை உணர்ந்து 'இது அவள் குற்றமன்று, என் குற்றமே' என்று மனங் குழைந்து, நடந்ததை யறிந்தான் கோவலன்; தளர்வு நீங்கினான். " அந்தணாளா இந்த ஓலையின் பொருள் எனது பெற்றோருக்கும் பொருந்தி யிருக்கிறது. 'அடிகாள், உமது திக்கு நோக்கி விழுந்து வணங்கினேன். எனது வார்த்தையை மனங்கொள்ளல் வேண்டும். நான் இரண்டு குற்றம் செய்தேன். (1) வயதுகாலத்தில் தங்கள்பணி செய்யாதது (2) மனைவியுடன் இரவில் ஊர்விட் டகன்றது. என் பிழைப்பிற்காகவே, அதாவது வாணிப நோக்கத்துடனேயே

இவ்வாறு புகாரைவிட்டு மதுரையை நோக்கினேன். எனது பிழையை அறியாமல் வருந்தும் உங்கள் நெஞ்சத்தை ஆற்றிக்கொள்ள வேண்டும். பொய்யற்ற உண்மையறிந்த பெரியோயான தந்தையே வணக்கம்' எல்லாம் ஒத்திருப்பதால் அவர்களுக்கும் இந்த ஓலையே காட்டுக. அவர் மலரடி தொழுதேன். எனது வணக்கத்தை அவர்களுக்குச் சொல்லுக. உனது நடுக்கத்தை விட்டு, எனது பெற்றோரின் நல்ல மனத்திற் பொருந்திய துன்பத்தைக் களைய விரைந்து செல்வாயாக...." என்று வேதியனைச் செல்லவிடுத்து, தனது மாசற்ற கற்பரசியும், மாசற்ற அறவியான கவுந்தியும் இருந்த இடத்திற்குப் போனான் கோவலன்.



## ௩௨. அம்பணவர்

அங்கே வந்த அம்பணவர் (Lute players) அரக்கருடன் பொருது வென்ற காளியின் போர்க் கோலத்தைப் பாடினர். அவர்களுடன் பாங்குறச்சேர்ந்து செங்கோட்டியாழ் வாங்கி, கோவலன் மீட்டினான். செங்கோட்டியாழ் ஆறு உறுப்புக்களைக் கொண்டதாம். அவையாவன:—கோடு, திவவு, ஒற்று, தந்திரி, கரம், நரம்பு. உறுப்புக்களை உறுதியாகக் கட்டி, முதன்மையாகத் தந்திரி, கரம், ஒற்று ஆகிய உறுப்புக்களை நெறிபடச் சேர்த்து, மத்திம காந்தார சுரங்களை முதல் இறுதியாகக்கொண்ட அரும்பாலைப் பண்ணை மீட்டினான் கோவலன். பண்ணும் திறமும் சதிபாய்ந்து, ஆடும் பாவையின் பாட்டிற்கு ஒத்திருந்தன. அப்போது கோவலன் பாணருடன் அளவளாவி, "இங்கிருந்து மதுரை இன்னும் எத்தனை காதமிருக்கும்?" என்று வினவினான்.

"அத்திருவார் மூதூர் அதிக தூரமில்லை. இதோ மதுரைத் தென்றல் வந்தது; அது பொதியைத் தென்றல் போலல்ல; அந்த மதுரைத் தென்றலின் சிறப்பைக் கேளுங்கள்: அது ஏராளமான அகில், மணமிக்க குங்குமப்பூ, புழுகுக் குழம்பு, சந்தனக் குழம்பு, கஸ்தூரிச் சாந்தம் ஆகிய இத்திவ்விய வாசனைச் சேற்றில் குளித்தது; தேனளாவிய செங்குவளை, சண்பக மாலை, குருக்கத்தி, மல்லிகை, மலைகளில் வளரும் முல்லை முதலிய பூக்கள் விரிந்து அமைந்த பூவணைகளிற் பொருந்தியது; சமயலறைகளில் உணவு தயாரிக்கும்

போது எழும்பு கை, அகன்ற அங்காடிகளில் குறைவில் லாமல் அப்ப வாணிகர் மோதகஞ் சுடும் புகை, ஆடவ ரும் பெண்டிரும் மாடத்தில், தமது தலை மயிருக்கும் ஆடைக்கும் காட்டும் அகிற்புகை, அந்தணர் ஓமம் புரி யும் ஆகுதிப்புகை ஆகிய பலவகைப் புகைகளையும் அணைந்தது; இந்திரன் சூட்டிய மாலை மார்பனை பாண்டியன் கோயிலில், உணர்வால் அளப்பரியாப் பரிமளங்கள் நிறைந்திருக்கும். அவை முகர்ந்தவரின் உடலை மட்டுமன்று, மனத்தையும் ஆருயிரையும் பிணித்து மணமேற்றும். அத்தகைய கோயிற் பரிமளத் தைத் தன்னிடம் காட்டிப் புலவர் செந்நாவிற் பொருந் திய பெருமையுடன் அந்த மதுரைத் தென்றல் வரு கிறது. நீங்கள் தனியே சென்றாலும் உம்மை 'நில்' என்று தடைசெய்வோர் இல்லை. தாராளமாக மதுரை நகர் செல்லுங்கள்" என்றார் பாணர்.



## ௨௨. மதுரை சேர்தல்

கண்ணகி கோவலர், நிலவில் கவுந்தியடிகளுடன் மதுரைக்குப் புறப்பட்டனர். மதுரை வந்து விட்டது. சம்ஹார கர்த்தாவான சிவன் கோயிலிலும், பெரும் புகழ் பெற்ற மன்னன் அரண்மனையிலும், பகுதி பகுதியாகப் பலவாத்தியங்களுடன் காலைமுரசம் ஒலிக்கிறது. நான்மறை அந்தணர் வேதகானம் செய்கின்றனர். மாதவர் மந்திர ஜபம் செய்கின்றனர். அரசவாழ்த்துப் பாடி, வாள்வீரர் தினந்தோறும் ஆர்க்கும் முழவொலிக்கிறது. அம்முழவு வீரருக்கு அரசன் கொடுத்ததாம். களத்தில் பகைவரிடமிருந்து கொண்ட போர்யானைகள் பிளிறுகின்றன. காட்டிற் பிடித்து வந்த வலிய யானைகள் முழங்குகின்றன. பந்திபந்தியாக நிற்கும் போர்க்குதிரைகள் ஆலிக்கின்றன. மள்ளர் காலையில் மருதப்பறை கொட்டுகின்றனர். கூத்தர் காலையில் பாடிப் பறை கொட்டி ஆடுகின்றனர். இவ்வாறு பல வொலிகள் சேர்ந்து, கார்க்கடல் ஒலிபோலெழுந்து வரவேற்றதால், நடந்த இளைப்பு நீங்கி மூவரும் வையையாற்றை யடைந்தனர்.

...............வையைப் பேண்,
“ குரவமும் வகுளமும், கோங்கும், வேங்கையும்,
மரவமும், நாகமும், திலகமும், மருதமும்,
சேடலும், செருந்தியும், செண்பக ஓங்கலும்,
பாடலந் தன்னொடு பன்மலர் விரிந்து,
குருகுந் தளவமும், கொழுங்கொடி முசுண்டையும்,
விரிமலர் அதிரலும், வெண்கூ தாளமும்,

குடசமும், வெதிரமும், கொழுங்கொடிப் பகன்றையும்
பிடவமும், மயிலையும், பிணங்கரின் மணந்த,
கொடுங்கரை மேகலைக் கோவை யாங்கணும்,
மிடைந்துசூழ் போகிய அகன்றேந் தல்குல்
வாலுகங் குவைஇய மலர்ப்பூந் துருத்திப்
பால்புடைக் கொண்டு பன்மல ரோங்கி,
எதிரெதிர் விளங்கிய கதிரிள வனமுலை
கரைநின் றுதிர்த்த கவிரிதழ்ச் செவ்வாய்
அருவி முல்லை அணிநகை யாட்டி,
விலங்குநிமிர்ந் தொழுகிய கருங்கயல் நெடுங்கண்
விரைமலர் நீங்கா அவிர்அறற் கூந்தல்
உலகுபுரந் தூட்டும் உயர்பேர் ஒழுக்கத்துப்
புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி
வையை யென்ற பொய்யாக் குலக்கொடி
தையற் குறுவது தானறிந் தனள்போல்
புண்ணிய நறுமலர் ஆடை போர்த்துக்
கண்ணிறை நெடுநீர் கரந்தனள் அடக்கிப்
புனல்யா றன்றிது, பூம்புனல் யாறென
அனநடை மாதரும் ஐயனுந் தொழுது......''

*நிலமென்னும் மாதை வளர்க்கும் வளம் வற்றாக் குலக்கொடிபோலத் தோன்றினாள் வைகைத்தேவி. கரை மேல் குரவம், வகுளம், கோங்கு, வேங்கை, வெண் கடம்பு, சுரபுன்னை, மஞ்சாடி, மருதம், பவள மல்லிகை உச்சிச் செலுந்தில், செருந்தி, சண்பகம், பாடலம் ஆகிய மரங்கள் பலவகை மலர் விரிந்து, வைகைத்தேவி யின் பூந்துகில் போன்றன. குருக்கத்தி, செம்முல்லை, முசுட்டை, காட்டுமல்லிகை, வெண் கூதாளி, வெட் பாலை, மூங்கில், சிந்தில், பிடா, கொடிமல்லிகை, இரு*

வாட்சி ஆகிய மலர்கள் மிடைந்து, சூழ்ந்து, படர்ந்து ஆற்றின் அகன்ற கொடுங்கரையாகிய அல்குலை மேகலை போலக் கவர்ந்து கொண்டுள்ளன. பக்கம் புடைத்துப் பன்மலர் ஓங்கி, ஆற்றிடைக்குறையில், எதிரெதிர் குவிந்து நிவந்த மணற் குன்றுகள் வைகையின் கதிரிள வனமுலை போன்றன. கரையினின்று முருக்கிதழ் உதிர்கிறது. அது வைகையின் செவ்வாய் போன்றது. அருவியுடன் செல்லும் முல்லை வைகை மாதின் அணி முறுவலானது. குறுக்கும் நெடுக்கும் ஓடித்திரியும் கருங் கயல்கள் நெடிய கண்கள் போன்றன. அறல் (நீர்த்திரை அல்லது கருமணல்) கூந்தல் போன்றது. இந்த வைகை தென் பாண்டிநாட்டுக் குலக்கொடி ; புலவர் நாவாரப் புகழப் பெற்றவள். உலகை செழிப்பித்துக் காத்து, தனது வளமையால் ஊட்டுகின்றாள் ; பருவந் தவறாமல் நீர்வளம் அளிக்கிறாள். இனிக் கண்ணகிக்குச் சம்பவிக் கப்போவதை அறிந்தும், அதை வெளிக்குக் காட்டாமல், நெடுங்கண்ணீரைப் புண்ணிய மண மலர்ப்போர்வையில் மறைத்தவள்போல விளங்கினாள் வைகைத் தேவி. ‘ இது புனல் ஆறல்ல, பூவாறு ’ என்று அன்னநடைக் கண் ணகியும், கோவலனும் வைகையை வியந்து வணங் கினர். ஆற்றில் குதிரைமுகமும், சிங்கமுகமும், யானை முகமும் வைத்த ஓடங்கள் அக்கரைக்கும் இக்கரைக் கும் ஜனங்களை ஏற்றி இறக்கி நடக்கின்றன. அவற்றில் ஏறாமல், பலர் கூடி யேறும் பெரிய துறையை விட்டு, அதற்கு அடுத்தாற் போலுள்ள துறையில், தனியே ஒரு மரப்புணையில் ஏறி,தேன்மலர் மணக்கும் சோலைகள் நிறைந்த தென்கரையைச் சேர்ந்தனர் மூவரும்.‘மதுரை,

தேவர் உறையும் நகரம். அதை வலம் வந்தால் புண்ணியம் உண்டு' என்றெண்ணி, காவற் காடு சூழ்ந்த அகழியைச் சுற்றிச் சென்றனர். தடாகங்களில், நீண்ட கருங்குவளைகளும், ஆம்பலும், தாமரைகளும் செறிந்திருந்தன; அவை காற்றால் ஆடின. அக்காட்சி கண்ணகிக்கும் கோவலனுக்கும் வரும் துயரை முன்பே ஐயமின்றி அறிந்து, அஞ்சி நடுங்குவது போலிருந்தது. அப்பூக்களில் கள்ளுண்டு, வண்டுகள் பண் பாடின. அது, காதலர்க்குறும் துன்பத்தை எண்ணிப் பரிந்தழுவதே போலிருந்தது. புறமதிலில், பகைவரை ஒறுத்த போர்களில் எடுத்த நெடிய ஐயக்கொடிகள் காற்றில் ஆடின. அவை 'ஏ கோவல!ஏ கண்ணகி! நீங்கள் இங்கே வராதீர்கள். உங்களுக்கு ஆபத்து வருகிறது' என்று எச்சரிக்கை செய்து கையால் தடுத்துக் காட்டுவது போலத் தோன்றின. மூவரும் நகருக்குப் புறம்பே, ஓர் இடத்தைச் சேர்ந்தனர். அது இயற்கை யழகு நிரம்பிய இடம்.அங்கே பலவகைப் பக்ஷிகள் நிரம்பிய வயல்களும், சோலைகளும் நீர்வளமுள்ள பண்ணைகளும், நீர் விரிந்த ஏரியும், குலை குலையாகக் காய் குலுங்கும் தென்னந் தோப்புகளும், வாழைக்கொல்லைகளும்,கமுகமரங்களும், நெருக்கமாக மூங்கிலால் அமைந்த தண்ணீர்ப் பந்தல்களும் விளங்கின. அங்கே ஆத்ம தருமமும், ஆருயிர் அறமும் காக்கும் தபோதனரைத் தவிர, மற்றவர் அடைந்து வசிப்பதில்லை. அத்தகைய புறஞ்சேரியில் (Suburb) மூவரும் புகுந்து இருந்தனர்.



## ௧௪. கவுந்தி சொல்



பொழுது புலர்ந்தது. புறஞ்சேரிப் பொழில்களிலும், மருதநிலத்திலும் முற்றிய கதிர்ச்சுமையால் வளைந்த பயிர் நிறைந்த கழனிகளில் புட்கள் எழுந்து பாடுகின்றன. பொய்கைத்தாமரை முகையவிழ்ந்தது. அதை மலர்த்திய சூரியமண்டலத்தை உலகம் வணங்கு கிறது. பகைவர் தலைநடுங்க வாளேந்திய பாண்டியன் தலைநகரான மாடமாளிகைகள் ஓங்கிப் புகழுயர்ந்த மதுரையைச் சூரியன் துயிலெழுப்புகிறான். காமனை யெரித்த நெற்றிக் கண்ணனான சிவபிரான் கோயில், கருடக்கொடியுயர்த்த விஷ்ணுகோயில், கலப்பையை ஆயுதமாய்க் கொண்ட பலதேவர் கோயில், சேவற் கொடிதாங்கிய முருகன் கோயில், இல்லறம் துறவறம் ஆகிய அறத்துறைகளை விளங்கச் செய்யும் அறவோர் பள்ளி, வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை ஆகிய மறத்துறைகளை விளங்கச் செய்யும் மன்னவன் கோயில் இவற்றில் தூய வெண்சங்குடன், வகைவகையான காலை முரசு கள் முழங்கின.

கொள்கைப்படி, கவுந்தியடிகள் தியானத்திலிருந் தார். அப்போது கோவலன், காலைக்கடன்களை முடித்துச் சென்று அடிகளை வணங்கி இவ்வாறு சொன்னான்: “நீண்டகாலம் இயற்றித் தவப்பெருமை யுடைய அடிகாள், நான், வேசை முயக்கால் இல்லறந் தவறினேன். ‘நற்குடிப் பிறந்தோர், நாணுடை மகளி

ரோடு நீள்நெறிச் செல்லார்' என்னும் நியாயத்தை யும் துறந்தேன். நறுமலர் மேனியளான இம்மெல்லிய ளுடன் உடல் நடுங்கித் துன்புறும்படி, முன்பின் அறி யாத பிரதேசத்தில், காட்டுவழியில் உழன்று திரிந்து சிறுமை யுற்றேன். இனி நான் இப்பழம் பதிக்குட் சென்று மன்னர் பின்னவரான வணிகருக்கு எனது நிலையை உணர்த்தி வருவேன். அதுகாறும், தமது திருவடிகளையே துணையாகக் கொண்டவளாதலால், இவளுக்கு எக்கேடும் இல்லை" என்றான்.

அதற்குக் கவுந்தியடிகள் இவ்வாறு கூறினார் :— முற்பவத்தில் நீ புண்ணியஞ் செய்தாய். அதனால், அறிவும் செல்வமும் படைத்தாய். ஆனால் நீ தீவினையும் செய்தாய். அதன்பயனாகவே இப்படி உற்றார் பெற்றாரை விடுத்து, காதலியுடன் காட்டில் நடந்து தனித்துயர் வருந்தினை.

'மறத்துறை நீங்குமின் வல்வினை ஊட்டுமென்(று)'
அறத்துறை மாக்கள் திறத்திற் சாற்றி
நாக்கடிப் பாக, வாய்ப்பறை யறையினும்,
யாப்பறை மாக்கள் இயல்பிற் கொள்ளார்.
தீதுடை வெவ்வினை யுருத்த காலைப்
பேதைமை கந்தாப் பெரும்பே துறுவர்.
ஒய்யா வினைப்பயன் உண்ணுங் காலைக்
கையாறு கொள்ளார் கற்றறி மாக்கள்.
பிரிதற் றுன்பமும், புணர்தற் றுன்பமும்,
உருவி லாளன் ஒறுக்குந் துன்பமும்
புரிகுழன் மாதர்ப் புணர்ந்தோர்க் கல்லது
ஒருதனி வாழ்க்கை உரவோர்க் கில்லை.
பெண்டிரும், உண்டியும், இன்பமென் றுலகிற்

கொண்டோர் உறூஉங் கொள்ளாத் துன்பம்
கண்டன ராகிக் கடவுளர் வரைந்த
காமஞ் சார்பாக் காதலின் உழந்தாங்கு
ஏமஞ் சாரா இடும்பை எய்தினர்
இன்றே அல்லால் இறந்தோர் பலரால்...

'பாபவழியினின்றும் விலகுங்கள். அவ்வழி தீவினைப் பயன்களைத் தரும்' என்று அறவழி நிற்கும் பெரியார் நாக்கைக் கோலாகவும், வாயைப் பறையாகவுங் கொண்டு, திறம்படச் சாற்றி அறமுழக்கம் செய்கிறார்கள். எனினும், புண்ணிய வுறுதியற்ற மாக்கள், அம்மேலோர் சொல்லும் உண்மையை உள்ளபடி ஏற்றுக்கொள்ளார். அவர் மடமையே அவர்களுக்குப் பந்தமாகி அவர் தீமையால் விளைந்த கொடிய வினைகள் முளைக்கும்போது, பெருந் துயருற்று 'யாது செய்வோம்' என்று மயங்குவர். ஆனால், யாதானும் விலக்க முடியாத முன் வினைப்பயனை அனுபவிக்கும்போது, கற்றறிந்த ஞானிகள் வருத்தப்பட மாட்டார்கள். 'பிராரத்த கருமம் அனுபவித்து ஒழியட்டும்' என்று பொறுமையா யிருப்பர். சுருட் கூந்தலையுடைய மாதரைப் புணர்ந்தோர்க்கே, புணரும் முயற்சியால் வரும் துன்பம், பிரிவினால் வருந் துன்பம், இரண்டு வழியிலும் அனங்கன் கணையால் வருத்தும் துன்பம் ஆகிய துன்பங்கள் உண்டாகும். பந்தந்தொலைந்த மற்றுந் தாமே தாமான தனிவாழ்க்கை எய்திய முனிவருக்கு, ஆத்ம ஞானிகளுக்கு, இத்துன்பங்க ளெல்லாம் இல்லையாம். உண்டியும், பெண்டிருமே இன்பம் என்று, அவற்றிற் சிக்கிக்கொண்டோர் படும் துன்பம் எல்லை யற்றது.

அதைக் கண்டே, தெய்வப் பெரியோர் பெண் பொன் ஆசையை அடக்கி யாண்டனர். அத்தகைய அடக்க மில்லாமல், அந்த ஆசை பற்றிஞேர் பல துன்பங்களை அனுபவித்தனர். அவர்களை இன்பம் சார்வதில்லை. காமஞ் சார்ந்தார், ஏமஞ் சாரார். அவ்வாறே நீ இன்று துன்புற்றனை. உன்னைப் போலே, துன்புற்ற தேவரும் மாந்தரும் முற்காலத்திலும் இருந்தனர். தந்தை ஏவ, மனைவியுடன் காட்டிற்குச் சென்ருன் இராமன். சீதையை இராவணன் தூக்கிச் சென்ருன். அதனுல் இராமன், பெருந்துயருற்று, வானரப்படை திரட்டி, இலங்கைப்போர் நடத்திஞன். இப்படிப் பெண்ணுல் துன்புற்ற இராமன் "வேதாவை யீன்றவன் என்பதை நீ அறிவாயல்லவா? அது புராணக் கதை. இனியொரு மனிதன் உதாரணத்தைச் சொல்லுகிறேன். நளன் புட்கரனுடன் சூதாடி மண்ணரசையிழந்து,மெல்லியளா ளாகிய தமயந்தியுடன் வெய்ய காட்டை யடைந்தான். அவன் தமயந்தியின் பிரியாக் காதலன். அவளும் பிரி யாக் காதலி; கணவனைத் தவிர வேறு நினையாள்; தீதிலாள்; சிறுமையில்லாள்; எனினும், அத்தகைய உத்தமியையும் இருண்ட மலைக்காட்டில் நள்ளிரவில் விட்டு நீங்கிஞன் நளன். அது தமயந்தியின் குற்றமா? இல்லை. தீவினைப் பயனே அப்படிக் காதலரைப் பிரித் தது. இராமன் நளன் இவர்போன்று நீயும் துன்புற் ருய். எனினும், அவர்களைப் போன்று மனைவியை நீங் காமல், இன்பத்திலும் துன்பத்திலும் அவளுடன் பிரியாதிருக்கும் வாழ்வைப் பெற்ருய். அந்தமட்டில் நீ பாக்கியம் செய்தவனுவாய். இனி வருந்தாதே. நீ பாண்

டியன் மதுரைக்குச் செல். ஊரைச் சுற்றிப்பார். நீ இவளுடன் இல்லறமும், உனக்குரிய தொழிலறமும் நடத்துவதற்குப் பொருந்திய இடத்தை அறிந்து திரும்பிவா.”

* * *

கவுந்தியின் ஆசிபெற்றுக் கோவலன் மதுரைக்குட் சென்றான்.



# ௬௫. மதுரைக் காட்சி

“ஆயிரங் கண்ணோன் அருங்கலச் செப்பு
வாய்திறந் தன்ன மதிலக வரைப்பில்...”

காவற்காடு சூழ்ந்த நீர் அகழி; யானைக் கூட்டம் மறைந்து செல்லும் உள்வீதி; அதைத் தாண்டியுள்ள கோட்டையில் பல இயந்திரப் போர்க் கருவிகளும், அவற்றைச் செய்யும் சாதனங்களும் இருந்தன. அவையாவன: தானே வளைந்து பகைவரை எய்யும் விற்பொறி, சுடுகற்களைப் பகைவர் மேல் எறியும் கவண், கருங்குரங்கு போன்றதாய்ச் சேர்ந்தாரைக் கடிக்கும் ஊகம், பகைவரைக் காயும் கொதிநெய், செம்பை உருக்கும் மிடா, இருப்பு வட்டுகள் காயும் உலைகள், முற்றுகையிடவரும் பகைவரை நோக்கி யெறியும் கற்களிட்ட கூடைகள், அவரைக் கோத்திழுக்கும் தூண்டில், அவர் கழுத்திற் பூட்டி முறுக்கும் சங்கிலி (கயிறு), ‘ஆண்டலை’ என்ற பட்சி வடிவாகச் செய்து, அம்பெறிந்து பகைவர் மூளையைக் கொத்தி யெறியும் பொறிகள், கிடங்கில் ஏறிய பகைவரைத் தள்ளி யொறுக்கும் இருபிளவான இரும்பாயுதம் (கவை), கழுக்கோல், அம்புக்கட்டு, தலைகளை வைத்துத் திருகும் யந்திரம், மதிலைப்பற்றுவார் கைகளைப் பொதிர்க்கும் ஊசி யந்திரம், விர்ரென்று சென்று மாற்றார் விழியைப் பெயர்க்கும் சிச்சிலிப்பொறி, மதிலேறினார் உடலைக் கிழித்தெறியும் பன்றிப் பொறி, பகை

வரை அடிக்க மூங்கிலாற் செய்த பொறிகள், கோட்டைக்கதவுடன் பொருந்திய விசைகள், வளைதடி, தண்டாயுதம், கோல், குந்தம், வேல், ஈட்டி, நூறு பேரைக் கொல்லும் சதக்கினி, தள்ளிவெட்டி, களிற்றுப் பொறி, விழுங்கும் பாம்பு, கழுகுப்பொறி, புலிப்பொறி, சகடப் பொறி, தகர்ப்பொறி, அரிநூற்பொறி முதலிய பல படைக்கலங்களும், அவற்றை வீரர் மறைந்திருந்து பிரயோகிக்கும் ஏவறைகளும் மிகுந்தது மதுரைக் கோட்டை. அதன் வாயலில் வெற்றிக்கொடி யாடியது. அங்கே கொல்வாள் பிடித்த யவனர் காவல் காத்தனர். அவர் ஐயுறுமல் நகருட் சென்றுன் கோவலன். கோட்டைக்குள் இருக்கும் மதுரை, இந்திரன் அணிகலப் பெட்டியைத் திறந்ததுபோலே சொக்கழகாகப் பொலிகிறது.

இனி அந்தந்தப் பருவ காலங்களில் மதுரையர் வாழ்க்கையின் பண்பை யறிவாம். மேல் காற்றில் மாடக்கொடிகள் ஆடுகின்றன. காலை வைகைக் கரையில் உள்ள உய்யானத்தில், காதற் செல்வருடன், பொது மகளிர் நாவாயிற் செல்லுகின்றனர். தெப்பக் கட்டையைத் தழுவிப் புனல் விளையாடுகின்றனர். குளிர்ந்த மணமுல்லை, கண்போன்ற நெய்தல், நீர்க் குவளை இவற்றைக் கொண்டை நிரம்பச் செருகி, மல்லிகையும் செங்கழுநீர் இதழ்களும் நெருங்கத் தொடுத்த மாலையுடன், தொண்டித் துறையினின்றெடுத்த ஆணி முத்தாரமும் அணிந்து, சந்தனம் செழியப் பூசி,மகளிர், நண்பகல், மதுரைக்கடுத்த பொற்கொடி படர்ந்த பொழில்களில் விளையாடுகின்றனர். இவ்வாறு புனலி

லும் பொழிலிலும் விளையாடி, பிற்பகலில் மாதர் வீட்டிற்குச் செல்லுகின்றனர். அவர் ஆடியிளைத்த கோலத்தைக் காதலர் மெச்சுகின்றனர். பிறகு பெண்டிர் தம்மை அலங்கரித்துக்கொள்ளுகின்றனர். பூஞ்சேக்கை மேல் இருந்து, இரத்தப் பூம்பட் டுடுத்தி, குழலில் வெட்பாலைப் பூ முடித்து, சிறுமலையிற் பூத்த செங்கூதாளமும் மணமிக்க குறிஞ்சி நாண்மலரும் சூடி, குங்கும வருணச் சந்தனத்தால் மார்பில் தொய்யில் எழுதி, மேனியில் செய்ய வாசனைப் பொடி யப்பி, அழகிய பவளமாலையும், செங்கொடிவேலிப் பூமாலையும் புனைகின்றனர். இது மதுரை மகளிர் கார்காலக் கோலமாம். இந்தச் செவ்வணிக் கோலத்தைத் தனது அரசனாகிய மலைச் சிறகரிந்த இந்திரனுக்குக் காட்டுவதுபோல, கார் காலம் வாடையுடன் வரும். மதுரை மாடங்கள் சிற்பநூற் புலவரால் சிறப்பாக அமைக்கப் பெற்றன. மேகமண்டலத்தை அளாவி உயர்ந்தன. குளிர்காலத்தில், அதன் சாளரங்களை அடைத்து, அகில்விற கெரித்து, சந்தனமார்புடன் விளங்கும் நம்பியருடன் நங்கையர் கணப்புக் காய்வர். சூரியன் மிதுன வீதியில் இயங்கும் முன்பனிக்காலத்தில் (மார்கழி, தை), வீட்டு முற்றத்தில் மைந்தரும் மகளிரும் இளவெயில் காய்வர். தொண்டித் துறைமுக வணிகர் கப்பல்களில் அகில், ஆடைகள், பட்டு, சந்தனம், கற்பூரம், வாசனைச்சரக்குகள் இவற்றை ஏற்றுமதி செய்வர். அவற்றின் வாசத்தைச் சுமக்கும் கொண்டலுடன் வந்து, மதுரையில் பங்குனி மாதம் காமனுக்கு நடக்கும் வில்விழாக்காணும் பின் பனிக்காலம். இளவேனிலென்னும் அரசன், மாலை

போன்ற குருக்கத்தி கொடியெடுக்க, காடும் சோலை யும் மணமலர் வந்த, பொதிகைத் தென்றலுடன் போந்து, பாண்டியன் மதுரையிலுள்ள காதலரைக் கூடித் தழுவச் செய்வான். பூவணையில் கொழுநருடன் இருக்கும் பூங்கொடிமாதர், மேற்சொன்ன ஐந்து பருவகாலங்களையும் நினைப்பர். அவ்வக் காலங்களில் தாம் அநுபவித்த சுகங்களை எண்ணி, "அக்கால மெல்லாம் எங்கே எப்படியோ ஓடிப்போயினவே" என் றெண்ணுவர்.

இப்போது கோடையிறுதிநாள். மலைக் காடுகளில் வெயில் தீப்பொரிகிறது. குட்டிகளுடன் கூடிய பிடி களைக் காக்கும் களிறுகள் வெக்கைத் தாங்காது தவிக் கின்றன. அத்தகைய வெங்காற்றுடன் வேனிலான் மதுரையிற் புகுந்து இருந்து, இப்போது வேறிடம் தேடுகிறான். பெண்டிர் உய்யானத்தில் மன்னனுடன் கூடி விளையாடுகின்றனர். அவர்களுக்கு மன்னன், கூடார வண்டி, சிவிகை முதலியவற்றி லேறும் வரிசைகளையும், கவரி அடைப்பம் உடைவாள் இவற்றை எடுக்கும் வரிசைகளையும் அளிக்கிறான். ஆடலின் இளைப்புத் தீர்ந்து, மீண்டும் வீறுபெறப் பொன் வட்டிலில் தோழியர் தரும் தேறலை நங்கையர் அருந்துகின்றனர். அதனால் அவர் கரு விழிகள் இமையுள் மயங்குகின்றன. இமையை மலர்க ளென்றும், கருவிழியைத் தமது இனமென்றும் எண்ணி வண்டுகள் மொய்க்கின்றன. அந்த வண்டு களைப் பெண்டிர் நறுமண மாலையால் ஓச்சுகின்றனர். அது வண்டு மொய்க்காத வெற்றிடத்தில் விழுகிறது.

அவர் இலவிதழ்ச் செவ்வாயில் இளம் மூரல் அரும்புகிறது. அவர் காதலரைத் தழுவிக்கொண்டு, தமது புலவிக் குறையைக் குழறுகின்றனர். தலை, மிடறு, நெஞ்சு, பல், இதழ், நாக்கு, மூக்கு, அண்ணம் ஆகிய ஓசை பிறக்கும் எட்டுத் தானத்தையும் பயன்படுத்தி அவர் நாவால் அழுத்தமாகப் பேசவில்லை. அவர் கிளவி நகை விளைவிக்கிறது. அழகிய செங்குவளை அரும்பவிழ்ந்தது போன்றன அவர் நீள் விழிகள். அவை செங்கயலைப் போலப் புரள்கின்றன. அவற்றின் செழிய ஓரப் பார்வை, கண்டார் மனத்திற் பூசல் விளைக்கிறது. அவர் புருவம் கொலை விற்போன்றது. உள்வளையத் திலகமிட்ட அழகிய நெற்றி வியர்க்கிறது. இந்த ஊடல் தீரும் சமயம் பார்த்திருக்கின்றனர் காதலர். அவர் செழுங்குடிச் செல்வரும் மன்னரும் ஆவர். இத்தகைய சுகபோகிகள் வசிப்பது அவ்வூர் ராஜவீதியாம். அதில் உறையும் அரசர் தமது பிறப்பொழுக்கங் குன்றாதவ ராவர். அக்காலம் குடிக்குற்றம் செய்தாரை, தலையில் ஏழு சுட்ட செங்கல் ஏற்றி, ஊரைச் சுற்றி ஓட்டுவது வழக்கம். அப்படிப்பட்ட தண்டனை பெறாமல், அரச வீதியிலுள்ள மங்கல மனையினர் மாசற்ற வாழ்க்கை வாழுகின்றனர். அவர் மனைகள் சுட்ட மண்ணாலன்றி, சலவைக் கற்களால் சிற்ப சாத்திரப்படியே குற்றமற்ற சிறப்புடன் அமைந்து, எழில்பெற்று விளங்குகின்றன.

இரண்டு பெரிய வீதிகளில், அறுபத்து நான்கு கலைகளும் அறிந்த உருத்திர கணிகையர் வசிக்கின்ற னர். அவர் தாக்கணங்கனையார்; பண்ணையும் திறனை யும் மிஞ்சிய இன் சொல்லார். அவர் கண் வலைப்

பட்டார் அறிவிழப்பர். தவசிகளாயினும் சரி, மலரில் தேனுண்ணும் வண்டுபோலே இன்பனுகர்ந்து நுகர்ந்து செல்லும் இளைஞராயினுஞ்சரி, காமவிருந்திற்கே புதிய பேதையராயினுஞ்சரி அவர் வசப்படுவர்; அவர்களுடன் களித்திருந்து இனிய துயில் கொள்வர். தலைக்கோல் மடந்தையர், வேந்தருக்கு ஆடல், பொதுஜனங்களுக்கு ஆடல் இவற்றின் அளவறிந்து, சுத்தமாக நடனமாடுவர். அவர், கண்கூடுவரி, காண்வரி, உள்வரி, புறவரி, கிளர்வரி, தேர்ச்சிவரி, காட்சிவரி, எடுத்துக்கோள்வரி ஆகிய எண்வகை வரிகள், தாளங்கள், மதலை, துணிபு, கோயில், நிவப்பு, கழால் தூக்கு, செந்தூக்கு, நெடுந்தூக்கு ஆகிய ஏழு வகைத் தாளவிச்சுகள், இடக்கை, சல்லிகை, மத்தளம், தண்ணுமை ஆகிய நான்கு குயிலுவக்கருவி இவற்றை நன்குணர்வர். அவர் ச, ரி, க, ம, ப, த, நி என்னும் ஏழு சுரங்களின் விரிவாகிய இசைநுணுக்கங்களிற் சிறந்தவர். அவர் ஆடும்போது தோரியமடந்தை வாரம்பாடுவாள். கூட்டமாக நடிக்கும்போது, ஒருத்தி (உகம்) தலைப்பாட்டுப் பாடுவாள். அதை வாங்கி மற்றொருவள் (ஔகம்) பின்பாட்டுப் பாடுவாள். இவ்வாறு கணிகையர் ஆடிப் பாடித் தினமும் கலைவளர்ப்பர்; மாந்தரை மகிழ்விப்பர். முறையாக, ஒன்றுமுதல் ஆயிரத்தெட்டுக் கழஞ்சுப் பொன்பெறுவர் (கழஞ்சு = 6 oz.)*

---

* சும்மா ஆடல் பாடல், அழகு செய்தல், ஊடல், கூடல் இவற்றையே வர்ணிக்கிறாரே கவி. மதுரை நகரத்தாருக்கு இவைதாமா தொழில் என்று நினைக்கவேண்டா. அக்காலம் நுண்கலை வளர்ச்சி எவ்வளவு பரந்து விரிந்திருந்தது,

அரச போகத்தில் வாழும் செல்வர் தெருவையும் கலைவளர் தெருவையும் கண்டோம். இதோ கடைத்தெரு வருகிறது; அதைக்காண்போம். சிவிகை,கூடாரவண்டி, தேர்வட்டை, மணித்தேர்க் கொடிஞ்சி, உடலுக்குக் கவசம், யானைவீரர் விரும்பும் அங்குசம், தோற்கவசம், அரைப்பட்டிகை, மருந்து வகைகள், வளைந்த தடிகள், வாசனை யுருண்டைகள், வெண்சாமரங்கள், பன்றி முகக் கேடயம், தோற்கேடயம், வனக்காட்சியும் விலங்குருவும் எழுதிய கேடயம், குத்துக்கோல், கூடாரம், செம்புச் சாமான்கள், வெண்கலச் சாமான்கள், கயிறுகள், மாலைகள், இரம்பம் முதலான கருவிகள், அகில் முதலான புகைக்குரிய பண்டங்கள், சாந்துகள், பூவேலைகள், இன்னும் இன்ன வகை யென்று தெரியாமல் பார்ப்போர் மனம் மயங்கும்படி, அரசரும் விரும்பும் வளம் பெற்று விளங்குகிறது பெரிய கடைவீதி.

இனி, பொன் இரத்தினம் இவை விற்கும் கடைகளைக் காண்போம். வைரத்தைக் குற்றமில்லாமற் பார்த்து நலம்போற்றி வாங்கவேண்டும். சரை, மலம்,

---

அதைச் செல்வர் எவ்வாறு ஆதரித்தனர் என்பதையே இங்குக் குறிக்கவேண்டும். மேலும் நமது நாடு தியாகபூமி, யோகபூமி, போகபூமி. நமது முன்னோர்கள் வீரதீரர்; அவர் நாட்டைக் காக்கவும், பகைவரை ஒடுக்கி அமைதி பரப்பவும், பொதுநலம் புரியவும் அரிய தியாகம் செய்தனர்; தெய்வத் திருவருளைப் பெறும் யோகம் செய்தனர். பொருளை வளர்க்கும் தொழில்களைச் செய்தனர். அருள், பொருள், வீரம், அறம், அன்பு, இவையனைத்தையும் கொண்டு, நிறைமுறையான இன்பந் துய்த்தனர் நமது முன்னோர்கள். அந்த இன்ப வாழ்வையே இங்கே கவி சித்திரிக்கிறார் என்க.

கீற்று, சப்படி, பிளத்தல், துளை, கரி, விந்து, காக பாதம், இருத்து, கோடியில்லன, கோடி முரிந்தன, தாரை மழுங்கல் என்று குற்றம் பன்னிரண்டுண்டு. காகபாதம் பாம்பச்சம், விந்து மனத்துயர், கீற்றுசாவு, மலம் உறவினர் கேடு இவற்றைத்தரும். இக்குற்றங்கள் இல்லாமல், வைரங்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அவை எட்டுப்பலகை, ஆறுகோடி, தாரை, சுத்தி, தரா சம் ஆகிய ஐந்து குணங்கள் வாய்ந்திருக்கவேண்டும். வெள்ளை அந்தண்மையளிக்கும், சிவப்பு ஆட்சி தரும், பச்சை செல்வமளிக்கும், கருமை தானியமளிக்கும் ; இவ்வாறு மணியின் நிறத்திற்கும் பலனுண்டு. மதுரை இரத்தினக்கடைகளில், குற்றம் நீங்கி வானவிற்போலே ஒளிரும் நால் நிற வைரங்களும், கீற்று தார் கருகல் ஆகிய குற்றங்களின்றி, கிளி, மயிற்கழுத்து, பசும்பயிர், பொன்வண்டின் வயிறு போன்று தெளிவான ஒள்ளிய பசுங்கதிர் வீசும் மாசற்ற மரகதங்கள், நல்ல இலக்ஷணமுள்ள பதுமராகம், நீலம், குருவிந்தம், படிதம் ஆகிய சாதிமாணிக்கங்கள், பூனைக்கண் நிறத்திற் பொன் தேய்த்தது போன்றொளிரும் புருட ராகங்கள், மாசற்ற கதிருடன் தேன் துளிபோன்ற வயிடூரியங்கள், இருளைத் தெளியவைத்தாற் போன்ற நீல மணிகள், மஞ்சள் சிவப்பு ஆகிய இருநிறங் கலந்த கோமேதகங்கள், பளிங்கில் தோன்றி, ஐந்து வனப்பில் ஒளிரும் (மாணிக்கம், புருஷராகம், நீலம், கோமேதகம், வைடூரியம்) மணிகள் பெருந்திரளாகக் குவிந்து கிடக்கின்றன. பிறகு காற்று, மண், கல், நீர் இவற்றில் உண்டாகும் குற்றம் சிறிது மற்ற வெண்முத்து, செந்நீர்முத்து, கருப்பத்தி

லேயே துளையுண்டு, வளைவு திருகல் அற்ற கொடிப் பவளங்கள் இவை குவிந்த கடைகள் காண்கின்றன. மேற்சொன்ன நவமணிகளின் வகைதெரிந்த இரத்தின வணிகர் அங்கே கூடி வசிக்கின்றனர். பகைவர் தம்மை வருத்தி யறியாது, அச்சமின்றி நகரின் செல்வச் செழிப் பிற்குக் காரணமாக இவ்வணிகர் வாழுகின்றனர். இவர்கள் ஏராளமான முத்து மணிகளைக் கப்பலில் பிறநாடுகளுக்கு அனுப்பி நாட்டின் செல்வத்தைப் பெருக்குகின்றனர். அதனாலேதான் இவர் தெருவைப் 'பயன் கெழு வீதி' என்பர்.

இதன் பிறகு பொன்வணிகர் காண்கின்றனர். சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம் என்னும் நால்வகைப் பொன்னும் விளம்பரக் கொடியுடன் அவர் கடைகளிற் பொலிகின்றன. பிறகு, ஜவுளிக்கடைகள் வருகின்றன. பருத்தி, கம்பளி, பட்டு இம்மூன்றிலும் நெய்த பலவகை ஆடைகள் நூற்றுக்கணக்காக அங்கே மடித்து அடுக்கப் பெற்றுள்ளன.

பிறகு கூலத்தெருக்கள் வருகின்றன. அங்கே, நெல், வரகு, பயறு, அவரை, துவரை, மொச்சை, கடலை முதலியன குவிந்து கிடக்கின்றன. மிளகுப் பொதி களும் பாக்குப் பொதிகளும் அடுக்கப் பெற்றுள்ளன. துலாக்கோலும், பறையும், மரக்காலுங் கொண்டு தரகர் விலைபேசிச் சாமான் அளந்து இங்குமங்கும் திரிகின் றனர். மொத்த வியாபாரிகளும், அந்நியநாட்டுத் தரக ரும் இச்சாமான்களை வாங்கிச் செல்லுகின்றனர்.

இவ்வாறு போகச்செல்வமும், தொழிற்செல்வ மும், வாணிபச் செல்வமும், அழகும், அணியும், பொன்

னும், மணியும் குலுங்கும் மதுரைநகரைக் கோவலன் சுற்றிப் பார்த்தான். நான்கு வருணத்தாருக்கும் உரிய தெருக்கள், மூச்சந்தி, சதுக்கம், கோயில், கடைத்தெரு, கலைமன்றங்கள், ஆடல் - பாடல் அரங்கங்கள், சந்து, சிறுதெருக்கள் எல்லாம் திரிந்து சுற்றினான். சூரியன் இப்பருவத்தில் நடுக்கோட்டில் நின்று காய்ந்தான். நகரின் கொடிகள் பந்தல்போல நிழல்செய்தன. வெயிற் கொடுமையின்றி, பாண்டிய நகரைக்கண்டு மகிழ்ந்தான் கோவலன். உலகையீன்ற திருவாகிய பரமேசுவரியின் அருள் நிழலிலிருந்து, பாண்டியர் ஆஞ்ஞா சக்கரத்தை நடத்துகின்றனர். நிலம் ஏராளமான வளம் பொழிகிறது. அத் திருவளத்தின் கீழிருந்து அவர் செங்கோ லோச்சுகின்றனர். அவர் செங்கோலின் செம்மை, பூச்சக்கிரக் குடையின் தண்மை, வீரப் பாண்டியர் வேலின் கொற்றம் இவையெல்லாம் உலகப்புகழ் பெற்றன. மன்னன் மன்னுயிரைத் தன்னுயிர்போலப் போற்றினான். குடிகளுக்கு எவ்வகைத் துயரும் இல்லை. கொடுங்கோன்மைக் கஞ்சி யாரும் குறைகூறி மதுரையை நீத்துச் சென்றதில்லை. இத்தகைய மாண்புடைய மதுரை மூதூரைப் பார்த்துக் கோட்டையைத்தாண்டி, மீண்டும் தருமசிந்தனையுள்ள அறவோர் வாழும் புறஞ்சேரிச் சோலை புகுந்து, மாதவக் கவுந்திக்கு மாசற்ற மதுரையின் மாண்பையும் புகழையும் பற்றிக் கோவலன் சொன்னான்.



## ௩௪. மாடலன்



ஆங்கே ஒரு வேதியன் வந்தான். அவன் கோவலன் நண்பன், மாடலன், ஊர் புகாருக்குத் தென்மேற்கே நான்கு நாழி வழியுள்ள தலைச்செங்காடு. மாடலன் நான்கு வேதங்களையும் கற்றவன்; கற்றவழி நிற்பவன்; அதன் பயனாக அனைத்திற்கும் நலமே நாடுவோன். அவன் அகத்தியர் பொதிய மலையை வலம் வந்து, குமரிக்கடலில் மூழ்கி, யாத்திரா மார்க்கத்தில் இந்தப் புறஞ்சேரிச் சோலையில் இளைப்பாறக் கவுந்தியிருந்த இடத்திற்கு வந்தான். கோவலன் அவனைச் சென்று வணங்கி வரவேற்றான். கோவலன் நிலைமைக்கிரங்கி,மாடலன் இவ்வாறு கூறினான்:—"கோவல, நீ இப்பிறப்பிற் பல புண்ணியங்களையே செய்தனை. நீ செய்த நல்வினைகளை யானறிந்தமட்டும் சொல்லுகிறேன்:

(1) கரிகால் வளவனிடம் பெற்ற சீரும் சிறப்பும் மாதவிக்குச் செழிப்பித்தன. மாந்தளிர் மேனியளான அவள் உன்னுடன் கூடிப் பெண்மகவீன்றாள். புருடு (பிரசவத்தீட்டு) நீங்கியபின், சித்திராபதி முதலிய முதிய கணிகையர், மாதவி மகளுக்கு என்ன பெயர் வைப்பது என்று சிந்தித்தனர். "ஒருகால் எமது மூதாதையர் ஒருவர், கப்பல் வாணிபம்செய்து வருநாளில், நள்ளிரவில் கலம் உடைந்தது. துன்புற்றுக் கடலில் நீந்திச் சோர்ந்து அவர் கரைகாணாது தத்தளித்தார். அவர் முற்பிறப்பில் பல புண்ணிய தானங்கள் புரிந்தவர். ஆதலால், அவருக்கிரங்கி ஒரு தெய்வம் தோன்றியது. 'நான் இந்திரன் கட்டளையால் இந்தத் தீவில் வாழ்கின்றேன்;

அஞ்சாதே; உனது புண்ணியப்பயன் நீங்காது, உன்னைக் காக்கிறேன்; என் பெயர் மணிமேகலை' என்று அத் தெய்வம் தனது மந்திரவித்தையால் அவரை ஒரு திடரிற் சேர்த்துத் துன்பந் துடைத்தது. ஆதலால், 'எமது குலதெய்வமான மணிமேகலையின் பெயரையே குழந்தைக்கு இடுக' என்று நீ சொன்னாய். மேகலை யணிந்த கணிகையர் அவ்வாறே பெயரிட்டு 'மணிமேகலை வாழ்க' என்று குழந்தையை வாழ்த்திச் செம்பொன் மாரிபெய்து, தானதருமங்களைச் செய்தனர். அப்போது, தானம் வாங்க, ஞானமார்க்கத்தின் எல்லைகண்ட, கூனிக்குறுகிய ஒரு முதிய அந்தணன் கம்பூன்றி நடை தள்ளாடி வந்து கொண்டிருந்தான். பாகனுக்கு வசப் படாமல், ஒரு மதயானையும் கட்டுமீறி அங்கே விரைந்து அந்த அந்தணனைக் கைக்கொண்டது. நீ ஓடிச்சென்று அந்தணனை விடுவித்தாய். யானை கையால் உன்னை வளைத்தது. அதன் கொம்பைப் பிடித்து மேலேறி முதுகில் அமர்ந்து, அதன் மதத்தை அடக்கிய கருணை மறவன் அல்லவா நீ!

(2) ஒரு மறையோனும் அவன் பத்தினியும் இல்லறம் நடத்தினர்; பிள்ளைப்பேறில்லாமல், ஒரு கீரிப் பிள்ளையை மகவென வளர்த்தனர். நெடுங்காலஞ் சென்று அவர்களுக்கு ஒரு பிள்ளை பிறந்தது. ஒரு நாள், கணவனைப் பிள்ளைக்குக் காவலாக வைத்து, மனைவி நீர்மொள்ளச் சென்றாள். குழந்தை தொட்டிலில் உறங்கியது. கணவன் அவசர நிமித்தம் வெளியே சென்றான். கீரிப்பிள்ளை குழந்தையைக் காத்திருந்தது. அச்சமயம், குழந்தை யருகே ஒரு பாம்பு வந்தது.

அதைக் கீரி கொன்று இரத்தந் தோய்ந்த மேனியுடன், தண்ணீர் சுமந்துவந்த பார்ப்பனியெதிரே வந்தது. "ஐயோ, இது பிள்ளையைக் கொன்றுவிட்டதே" என்று நீர்க்குடத்தை அதன்மேற் போட்டு அதை அவள் நசுக்கிக் கொன்றாள். பார்ப்பனி வீட்டிற்கு வந்து பார்த்ததும், உண்மையறிந்தாள்; "ஐயோ பாம்பு வாயினின்று என் மகவைக் காத்த பிராணியையோ பாவி கொன்றேன்" என்று இரங்கினாள். இக்கொலைப் பாவத்தைப் பொறாமல் கணவன் காசியாத்திரை புறப்பட்டான்; மனைவியும் பின் தொடர்ந்தாள். "நில்; கொலைப்பழி சுமந்த உன்கையால் உண்ணேன். இந்தா இந்தச் சுலோகம் எழுதிய சீட்டு; இதை அறிவாளிகளிடம் கொடு" என்று சொல்லிப் பெயர்ந்தான் அந்தணன். அச்சீட்டில்,

அபரீக்ஷ்ய நகர்த்தவ்யம்; கர்த்தவ்யம் ஸுபரீக்ஷிதம்;!
பஸ்சாத் பவதி ஸந்தாபம் ப்ராஹ்மணீ நகுலம் யதா!!

"எதையும் ஆராய்ச்சியின்றிச் செய்யற்க. நன்றாக ஆராய்ந்து செயவன செய்க. இன்றேல், உதவிசெய்த கீரியைக் கொன்ற பார்ப்பனி போல வருந்த நேரிடும்" என்பது அதன் பொருள். இந்த ஏட்டை, அவள் பீடிகைத் தெருவிலுள்ள பெரிய வீட்டுச் செட்டிமாரிடம் காட்டி, தன் கருமங்கழியத் தருமஞ்செய்யப் பொருளுதவி கேட்டுத் திரிந்தாள். அப்போது, நீ அம்மாதைக் கூவி, அவள் குற்றத்தைக் கேட்டறிந்து, "அஞ்சாதே, உனது துயரை யான் களைவேன்" என்று, அவர் செய்த பாபந்தீரும் தானதருமங்களை

முறைப்படி செய்வித்தாய். அவள் கணவனை அழைத்து வந்து, இருவருக்கும் வேண்டிய பொருளும் செல்வமும் தந்து மீண்டும் இல்லறம் நடத்தச் செய்தாய். நீயன்றோ செல்வன் ; தருமவான்!

(3) ஒரு பத்தினிமேல் ஒரு அறிவிலி, அவள் கணவன் ஐயுறும் பொய்ப்பழி சுமத்தினான். அந்தப் பொய்யன், உடனே பூதச் சதுக்கத்திலுள்ள பூதத்தின் பாசத்திற் பட்டான். பொய்சொல்பவரை அப்பூதம் புடைத்துண்ணும். பாசத்தில் அகப்பட்ட அப்பொய்யன் அன்னைபடும் துயரைத் தாங்காமல், நீ அப்பாசத்துட் புகுந்து அவனை விடுவித்து, உன்னை யுண்ணும்படி பூதத்தை வேண்டினை.

'நரகன் உயிர்க்கு நல் உயிர் கொண்டு,
பரகதி யிழக்கும் பண்பீங் கில்லை...

உன் கருத்தொழிக' என்று அவ்விடத்திலேயே அப்பூதம், குற்றவாளியை உண்டு தீர்த்தது. அப்பொய்யன் குடும்பத்திற்கு நீ இரங்கினை. அவனது தாயார் உறவினரை நீ பசிப்பிணி யறுத்துப் பல்லாண்டுகள் தாங்கினை. ஏழைகளின் செல்வமே, நீ இவ்வாறு பல நல்வினைகளைச் செய்ததை யானறிவேன். ஞான விருத்தனை கோபாலா, திருத்தகு மாமணிக் கொழுந்தனைய பத்தினியுடன் நீ இப்படி வந்தது முன்வினைப் பயனே போலும்!"

இவ்வாறு வருந்திய மாடலனைப் பார்த்துக் கோவலன், தான் அதிகாலையிற் கண்ட கனவைப்பற்றிச் சொன்னான் :— " அறக்காவலனாகிய பாண்டியன் புரக்

கும் இம்மதுரையில், ஒரு புல்லனால் மணமுள்ள கூந்தலி யான கண்ணகி, கண்டார் உள்ளம் நடுங்கும்படியான துன்பமெய்தினாள். நான் உடுத்த ஆடையைப் பிறர் பறித்தனர். நான் எருமைக்கடா மீதேறி, இந்த ஆயிழை யுடன், பந்தம் விட்ட துறவிகள் அடையும் மோட் சத்தைப் பெற்றேன். மன்மதன் கணை செல்லாது ஏங்க, மாதவி, தன்மகள் மணிமேகலையைப் போதி அற வோன்முன் அளித்தாள். இக்கனவால் விரைவில் தீங்கு நேரிடும்".

கவுந்தியும் மாடலனும், "இப்புறஞ்சேரி, அறவோர் இருப்பிடம்; இல்லறத்தார் இருப்பிடமல்ல. 'மாசாத்து வான் மகன்' என்று கேட்டதுமே, மதுரை வணிகர் உன்னை ஏற்றுக்கொள்வர். ஆதலால் சூரியாஸ்தமானத் திற்குள், மனைவியுடன் புறப்பட்டு, நகரில் ஓர் இடம் பார்த்துக்கொண்டிரு" என்று சொன்னார்கள். "தக்க இடம்பார்த்து வருமட்டும் கண்ணகியை எங்கே இருக் கச் செய்வது ?" என்று கோவலன் தயங்கினான். அப் போது அங்கே முதியாளான மாதரி ஆய்ச்சி வந் தாள்.



## ௯௭. மாதரி பணிவு

மாதரி அன்பும், பண்பும் மிக்கவள். அவள் மலர் விழியாளான ஓர் ஆரியாங்கனைக்கு (சமணத் துறவினி), வழக்கப்படி பாற்சோறு படைத்து வரும் போது, கவுந்தியடிகளைக்கண்டு வணங்கினாள். 'பசுவைக் காத்துப் பால் அளிக்கும் இடையர் குற்றமற்ற வாழ்வுடையார்.

ஆ காத் தோம்பி, ஆப்பயன் அளிக்கும்
கோவலர் வாழ்க்கையோர் கொடும்பா டில்லை.

இம்முதுமகள் மாசற்றவள், தீதிலள்; செவ்வியள்; ஈகைமிக்கவள், இவளிடம் கண்ணகியை இருத்தலாம்' என்றெண்ணிக் கவுந்தியடிகள் சொல்லலுற்றார் :—

" மாதரி, இவர் உத்தமர், உயர்குடிப் பிறந்தார், பெருஞ் செல்வர். இம்மடைந்தையின் மாமனார் பெயரைக் கேட்டாற் போதும்; இவ்வூரிலுள்ள தன வணிகர் அரும்பொருள் பெற்றதுபோல மகிழ்ந்து, இந்த விருந்தினரை இக்கருந்தடங் கண்ணியுடன் எதிர் கொண்டு,தமது வீட்டிற்கு அழைத்துச்சென்று உபசரிப்பர். அவ்வாறு மனைப்புகு மட்டும், இம்மங்கையைத் தக்கவர் காப்பில் வைக்கவேண்டும். ஆதலால் இவளை உனக்கு அடைக்கலமாகத் தந்தேன், ஏற்றுக்கொள்.என்னொடு போந்த இந்த இளங்கொடி நங்கை வீட்டைவிட்டு வெளியே நடந்தறியாள். இவள் தூய பத்தினி; கணவனைப் பிரியாதவள். அவனே தெய்வமெனப் பணிபவள். அதனால் அவனுடன் எல்லா இடர்களையும்

பொறுத்துக் கடுங்கதிர் வெம்மையில் காட்டில் நடந் தாள். அதைக்கண்ட கணவனும் நடுங்கித் துயர் எய் தினன். தான் நாப்புலர, தாகந்தவிக்க வாடினாலும் தனது துயரைப் பாராட்டாமல் கற்புக் கடமையைச் செய்த பத்தினித் தெய்வம் இவள். கற்புள்ள நங்கை கண்கண்ட தெய்வமாவள். பத்தினிப் பெண்டிர் இருக் கும் நாட்டில், வானம் பொய்க்காது, வளமை வற்றாது, வேந்தறம் சிதையாது, அரசன்புகழ் பெருகும், என் னும் நல்லுரையை நீ அறிவாய். தவத்தினர் அடைக்கல மாகத் தந்த பொருள் சிறிதாயினும், பேரின்ப மளிக்க வல்லது.

> என்னொடு போந்த இளங்கொடி நங்கை தன்
> வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலள்,
> கடுங்கதிர் வெம்மையிற் காதலன் றனக்கு
> நடுங்குதுயர் எய்தி, நாப்புலர வாடித்
> தன்றுயர் காணாத் தகைசால் பூங்கொடி,
> இன்றுணை மகளிர்க் கின்றி யமையாக்
> கற்புக் கடம் பூண்ட இத்தெய்வம் அல்லது,
> பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால் ;
> வானம் பொய்யாது, வளம்பிழைப் பறியாது,
> நீணில வேந்தர் கொற்றஞ் சிதையாது,
> பத்தினிப் பெண்டிர் இருந்தநா டென்னும்
> அத்தகு நல்லுரை அறியா யோநீ ?
> தவத்தோர் அடைக்கலம் தான்சிறி தாயினும்,
> மிகப்பே ரின்பந் தருமது கேளாய் !

காவிரிப்பூம்பட்டினத்தில், சிராவகர் அசோக மரத்தின்கீழ் அமைத்த சிலாதலத்தில், இரண்டு சார

ணர் தருமோபதேசம் செய்தருளினர். அச்சமயம், ஒரு தேவன் அங்கே தோன்றினன். பூமாலையும், மணிமாலையும் பொன்னணிகளும் பூண்ட அவன் மேனி, வானவில்லைப்போல் ஒளிர்ந்தது. தேவர் பலரும் வணங்கும் திறலுடைய அத்தேவனுக்கு ஒரு பாகத்துக் கை கருங்குரங்கின் கைபோல் இருந்தது. 'இவன் யார்? குரங்கின் கையுடன் இப்படி வந்ததேன்?' என்று சிராவகர் சாரணரை வேண்டினர். சாரணர் அவன் வரலாற்றைச் சொன்னார்கள் :—எட்டி, என்ற பட்டம் பெற்ற சாயலன் என்னும் தனவணிகன், பட்டினியிருந்து அருந்தவம் புரியும் அந்தண முனிவருக்கு வேண்டிய உபசாரங்கள் செய்து வந்தான். ஒரு மாதவ முதல்வன் அவன் வீட்டிற்கு வந்தான். சாயலன் இல்லாள் அவனை உபசரித்தாள். அச்சமயம் பசியால் வாடிய ஒரு கருங்குரங்கு, ஒதுங்கி ஒதுங்கி உள்ளே புகுந்து, மாதவன் காலில் விழுந்தது. அவன் உண்ட எச்சிலையும், கைகழுவிய நீரையும் உண்டு, 'என்பசி தீர்ந்தது ; நீ நீடூழி வாழ்க' என்பதற்கு அறிகுறியாக மாதவன் முகத்தைப் பார்த்தது அக்குரங்கு. குரங்கின் இன்பச் செவ்வியை, கலங்கா உளத்தனாகிய அறிஞன் பார்த்தான். 'இக்குரங்கை உன் மக்களுக்குச் சமானமாகக் கருதிப் பேணுக' என்று சாயலன் மனைவியிடம் கூறிப்போந்தான். அவள் அவ்வாறே செய்தாள். குரங்கு நீண்டநாள் அவளிடம் அருமையாக வளர்ந்து இறந்தது. சாயலன் மனைவி 'அக்குரங்கின் தீவினை நீங்குக' என்றெண்ணித் தனது தானத்தில், தனது மக்களுக்கு ஒரு பங்கும் அதற்கு ஒரு பங்கும் செய்தாள்.

அக்குரங்கு, விலங்குரு நீங்கி, வாரணாசியில், 'உத்தர கௌத்தன்' என்னும் அரசனுக்கு, உருவும், திருவும் உணர்வும் பெற்ற மகனாகத் தோன்றி, அரியபெரிய தானதருமங்களைச் செய்து 32-வது வயதில் இறந்து இத் தெய்வவடிவம் பெற்றது. சாயலன் மனைவி தனக்குச் செய்த தருமத்தாலல்லவா இவ்வாறு குரங்கு தேவ சரீரம்பெற்றது ; அந்த நன்றியை உலகிற்கு அறிவித்து, தானத்தின் பெருமையை விளக்கவே இத்தேவன் கருங்குரங்குக் கைகொண்டு விளங்குகிறான்.

சிராவகர், தானத்தின் பெருமையறிந்து புரிந்து, வீடுபே றெய்தினர். ஆதலால் மாதரி, என்னுரையைக் கேட்ட நீயும், இனி இப்பூவார் குழலியைக் கொண்டு சென்று உபசரிப்பாயாக :

மங்கல மடந்தையை நன்னீர் ஆட்டி,
செங்கயல் நெடுங்கண் அஞ்சனந் தீட்டி,
தேமென் கூந்தற் சின்மலர் பெய்து,
தூமடி யுடீஇத் தொல்லோர் சிறப்பின்
ஆயமும், காவலும் ஆயிழை தனக்குத்
தாயு நீயே யாகித் தாங்குக.

இவ்வாறு பெற்றதாய்போலே இப் பெண்மணியைப் பேணத் தாமதமில்லாமல் உடன்கொண்டு செல்!" என்று பணித்தாள் கவுந்தி. அடிகளைப்பணிந்து மாதரியும் அவ்வாறே செய்தாள்.

வளர் இள வனமுலை, நன்கமைந்து பெருத்த மூங்கிலைப் போன்ற தோள், முளை இள வெண்பல் ; முதிர்ந்த அறிவு இவை பொலியும் நங்கை கண்ணகி ; அவளுடன்

கதிர் சுருங்கிய மாலையில், மாதரி வழி நடந்தாள். மடி சுரக்கும் பசுக்கள், கன்றை நாடி 'ஹம்மா' என்று முழங்கி வந்தன. ஆட்டுக்குட்டியைத் தோளிற் சுமந்து கோடரியுடனும், உறிதொங்கும் காவடியுடனும், இடையர் வந்துகொண்டிருந்தனர். இடைச்சியர் பாற்குடம் சுமந்துவந்தனர். அவர்கள் கண்ணகி யழகை வியந்து, அவளைச்சூழ்ந்து வந்தனர். கோட்டை வாயிலைத் தாண்டி மாதரி தன் மனை புக்காள்.



## ௨அ. அன்புப் பணி

மாதரி மனைக்குப் பக்கத்தில் செம்மண் பூசிய சிறிய புது மனையிருந்தது; அது கட்டுவேலி சூழ்ந்தது; குளிர்ந்த காவணம் வேயப்பெற்றது. மோர் விற்றுப் பிழைக்கும் ஆய்ச்சியர் வீடுகளினின்றுந் தள்ளி யிருந்தது. அம்மனையைக் கண்ணகி-கோவலருக்கிந்து, பெருமகிழ்வுடன் பரிவுகூறி அவர்களை மாதரி உபசரித்தாள்; ஆய்ச்சியருடன் கூடி, நறுமலர்க் கோதையாகிய கண்ணகிக்குப் புதுப்புனலாட்டினாள். "இம்மதுரைப் பெண்கள் அணியும் பூண்களெல்லாம் உங்கள் அழகின் முன் காசுபெறா; அத்தகைய இயலழகுடன் தோன்றிய நல்லீர், இதோ என் மகள் ஐயை இருக்கிறாள். அவள் உங்களுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்வாள். உங்கள் அடித் தொண்டிற்காக அவள் இங்கே இருக்கட்டும். கடுமையான வழி நடந்தீர்கள்; கவுந்தியடிகள் வழித்துயரைப் போக்கி, ஏதமில்லா இடத்தில் உங்களைச் சேர்த்தாள். இனி உங் கணவருக்குக் கவலையில்லை" என்று பரிவு கூறினாள் மாதரி.

"இவர்கள் சிராவக நோன்பினர், இரவுண்ணார். உடனே சமையலுக்கு வேண்டிய சட்டிபானை சாமான்கள் கொண்டு வாருங்கள்" என்று அவள் ஆய்ச்சியரை ஏவினாள். அவர்கள் அவ்வாறே கொணர்ந்தனர். புதுப்பானைகள், பலாக்காய், கனியத்தக்க செழித்த காயினங்கள், வெள்ளறிக்காய், கொம்மட்டி மாதுளங்காய், மாங்கனி, வாழைத்தீங்கனி, செந்நெலரிசி, பால், நெய் முதலியவற்றைக் கண்ணகியிடம் கொடுத்தனர்.

மெல் விரல் நோவ, திருமுகம் வியர்க்க, மலர்க்கண் சிவக்க, பல்வகைப் பசுங்காய்கறிகளைத் திருத்திவைத்தாள் கண்ணகி. கரிந்த இடத்தையுடைய அட்டிலில், ஐயை, வைக்கோலால் அடுப்பு மூட்டினாள். அவளுடன், தனது கைத்திறனுக் கிசைந்தபடி, கண்ணகி சமைத்தாள். பிறகு, கணவனை உபசரித்தாள். கோவலன், தனது வைசிய தருமத்திற்குரிய அனுஷ்டானங்களை முடித்து வந்தான்; புதிய மண்கல நீரால், கண்ணகி அவன் அடிகழுவி, அந்நீரைத்தொழுது மாற்றினாள். ஆய்ச்சியர் அழகாக மிடைந்த ஓர் ஓலைத்தடுக்கில் கோவலன் அமர்ந்தான். இனித் தமக்குறுந் துயர் கண்டு, மாலுறும் மண்மகளின் மயக்கந் தீர்ப்பது போல், தரையில் தண்ணீர் தெளித்துத் தடவி, தலைவாழையிலை பரப்பி, பரிமாறி, "அடிகள், அமுதம் உண்டருளுக !" என்று கணவனைப் பத்தினி உபசரித்தாள். கோவலன் உணவு கொண்டான். அப்போது ஐயையும், மாதரியும், கண்ணகி - கோவலர் செவ்வியை இவ்வாறு புகழ்ந்து விம்மிதமெய்தினர் :

> ஆயர் பாடியின் அசோதைபெற் றெடுத்த,
> பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ !
> நல்லமு துண்ணு நம்பி யீங்குப்
> பல்வளைத் தோளியும் பண்டுநங் குலத்துத்
> தொழுனை யாற்றினுள் தூமணி வண்ணனை
> விழுமந் தீர்த்த விளக்கு கொல்லோ !

"தென்மதுரையில் நமது ஆயர்பாடியில் அமுதுண்ணும் இந்நம்பி, அன்று வடமதுரை ஆயர்பாடியில் அமுதுண்ட கண்ணனேயோ? இவனது துயர் தீர்த்த

இத்தொடிவளை நங்கை, காளிந்தி யாற்றில் கண்ணனைத் துயர்தீர்த்து மகிழ்வித்த இராதைதானோ? இவர் காட்சி நமக்குக் கண் கொளாக் காட்சி."

* * *

உண்டெழுந்து, கைகழுவி வாய்பூசி அமர்ந்த கோவலனுக்குக் கண்ணகி அழகிய மெல்லிய தாம்பூலமீந்தாள். ஆய்ச்சியர் குரவையாடச் சென்றனர்.

இருவரும் தனியே யிருந்தனர். "வா, என் கண்ணே" என்று தனது கற்பரசியை அருகே அணைத்து, கணவன் இவ்வாறு பரிந்துரைத்தான் :—
'கல்லும் கனலும் இடர்தரும் காட்டில், எயினர் சுரத்தில், இம் மடந்தையின் மெல்லடி எப்படி நடக்குமோ' என்றிரங்கி நமது பெற்றோர் என்ன துன்புற்றனரோ? ஆ, இது மாயமோ, முன் செய்த வல்வினையோ!

எம்முது குரவர் என்னுற் றனர்கொல்
மாயங் கொல்லோ! வல்வினை கொல்லோ!
யானுளங் கலங்கி யாவதும் அறியேன்!
* வறுமொழி யாளரொடு வம்பப் பரத்தரொடு,
† குறுமொழிக் கோட்டி, நெடுநகை புக்குப்
‡ பொச்சாப் புண்டு, §பொருளுரை யாளர்
நச்சுக்கொன் றேற்கு நன்னெறி யுண்டோ?
இருமுது குரவர் ஏவலும் பிழைத்தேன்
¶ சிறுமுதுக் குறைவிக்குச் சிறுமையுஞ் செய்தேன்
வழுவெனும் பாரேன் $மாநகர் மருங்கீண்டு
எழுகென எழுந்தாய், என் செய்தனை!

---

* வீண்சொல். † பிறரை இகழும் சிறுசொல்.
‡ மறதி. § அறிஞர்.
¶ சிறுவயதிலே பேரறிவுடைய் உனக்கு.
$ புகார் நகரினின்றும் இம்மதுரைக்கு.

## காதலர் பிரிவு



என்னொடு போந்திங் கென்றுயர் களைந்த
பொன்னே, கொடியே, புனைபூங் கோதாய்,
நாணின் பாவாய், நீணில விளக்கே,
கற்பின் கொழுந்தே, பொற்பின் செல்வி,
சிறடிச் சிலம்பின் ஒன்று கொண்டுபோய்
மாறி வருவன் மயங்கா தொழிகெனக்
கருங்கயல், நெடுங்கண் காதலி தன்னை,
ஒருங்துடன் தழீஇ, . . . .

"வம்பர், வீணர், மறதியுள்ளவர், வேசையுடன் கூடுவோர் இவருடன் கூடினேன்; அறிவாளர் விரும்பும் நல்லொழுக்கத்தைத் துறந்தேன். பெற்றோருக்குச் செய்யவேண்டிய பணிவிடையை விடுத்தேன்; அப் பெரியாருக்குப் பிழை செய்தேன். இளம் வயதிலேயே அறிவிற் சிறந்த உனக்கும் சிறுமை யிழைத்தேன். எனது தீய நடத்தை கொடிய பிழையென்றும் பாரேன். எனக்கு நற்கதியுண்டோ? புகாரினின்று மதுரைக்குப் புறப்படு என்றதும் ஆராயாமல் நீயும் உடனே எழுந்து என்னுடன் வந்தாயே! என்ன காரியஞ்செய்தாய்!"

இவ்வாறு பரிந்துருகும் கணவனைக்கண்டு, கண்ணகி யுரைப்பாள்: "இல்லறத்தாருக்குரிய கடமைகளைச் செய்யக் கொடுத்துவையாதவளானேன்.

அறவோர்க் களித்தலும், அந்தணர் ஓம்பலும்
துறவோர்க் கெதிர்தலும், தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும், இழந்த என்னை

பெருமகளான தமது தாயும், இருநிதிக் கிழவனான தாதையும் கண்டனர்; உள்ளன்பு சிறந்து, அருளுரை புரிந்து எனது பொறுமையைப் பாராட்டினர். நீர் என் முன், என்னுடன் இல்லாது பிரிந்தீர்; போற்றா வொழுக்கம் புரிந்தீர்; அதனால் என் மனத்தில் வெறுப்பும், துயரும், கவலையும் கொண்டேன்; இவற்றை மனத்தே மறைத்துப் பொய்ந்நகை புரிந்தேன்; அந் நகை எனது மனத்துயரை வெளிப்படையாகச் சொல்வது போன்றது; எனது நிலைகண்டு நம் பெற்றோர் வருந்தினர். ஆயினும், நாயகன் சொற்கடவா வாழ்க்கை

யேன் ஆதலால், பிழைகளைப் பாராட்டாமல், தங்களுடன் மதுரைக்குப் புறப்பட்டேன்" இம்மொழி கேட்ட கோவலன், கண்ணகி கற்பையும் அன்பையும் கண்டு இவ்வாறு மனங்குழைந் துரைத்தான் :—

குடிமுதற் சுற்றமும், குற்றிளை யோரும்,
அடியோர் பாங்கும், ஆயமும் நீங்கி,
நாணமும் மடனும் நல்லோர் ஏத்தும்
பேணிய கற்பும், பெருந்துணை யாக
என்னொடு போந்தீங் கென்றுயர் களைந்த
பொன்னே கொடியே, புனைபூங் கோதாய்,
நாணின் பாவாய், நீணில விளக்கே,
கற்பின் கொழுந்தே, பொற்பின் செல்வி,
சீறடிச் சிலம்பின் ஒன்றுகொண் டியான்போய்,
மாறி வருவன் மயங்கா தொழிக!

"பெற்றோர், சுற்றம், செவிலியர், பணியாளர், தோழிமார் அனைவரையும் விட்டு நாணம், மடம், கற்பு இவையே துணையாக என்னுடன் வருந்தி வந்து, என் துயர்தீர்த்த பொன்னே, கற்பின் கொழுந்தே, அழகுத் திருவே, உனது சிற்றடிச் சிலம்பில் ஒன்று கொண்டு சென்று விற்று வருகிறேன்........கலங்காதே." காதலன் காதலியை ஒருங்கே தழுவி, உள்ளம் வெதும்பி, ததும்பும் கண்ணீரை அடக்கிக்கொண்டு வருத்தத்துடன் விடை பெற்று, இல்லம் நீங்கி நடக்கமாட்டாமல் நடந்து சென்றான்.



## ௨௧. பொற்கொல்லன் வஞ்சம்



தெருவிற் செல்லும்போதே அபசகுனம், இமிலேறு பாய்ந்தெதிர்ந்தது! இடையர் கண்டால் துர்ச்சகுனம் என்று சொல்வர். கோவலன் அதை யறியான்! விதியும் முன்னே பிடித்துத் தள்ளியது! தாதெருமன்றம் (மாட்டெரு குவிந்த மரநிழல், இடையர் குரவையாடுமிடம்) மாதர் வீதி முதலியவற்றைத் தாண்டி நடந்து, கோவலன் கடைத்தெருவை அடைந்தான். அங்கே உருக்குத்தட்டாரும், கைதேர்ந்த சிற்பத்தொழில் வல்ல கம்மாளரும் ஆக நூறு பேர் வந்தனர். அவர்களில் ஒரு பொற்கொல்லன் சட்டை போட்டு, கைக்கோல் கொண்டு ஒதுங்கி நடந்து வந்தான்; இவன் பாண்டியனுக்கு அணிகள் செய்து சீரும் சிறப்பும் பெற்றவன். அவனிடம், "பாண்டிமாதேவி அணியத் தக்க ஒரு சிலம்புள்ளது; அதை நீ விலை மதித்துத் தரமுடியுமா?" என்று கோவலன் வினவினன். எமதூதன் போன்ற கொல்லன், 'மாதர் அடியிற் பூணும் கலன்களை விலைமதித்தறியேன்; ஆயினும் மன்னர் முடியிற் பூணும் கலன்களை நான் செய்வேன். சிலம்பைக் கொடும் பார்க்கலாம்' என்று, கைதொழு தேத்தினன். வஞ்சமறியாக் கோவலன் பொதிவா யவிழ்த்துப் போற்றரும் பொற்சிலம்பை அவன் கையில் ஈந்தான். எவ்வளவு அழகான சிலம்பு! உயர்ந்த வேலைப்பாடு! பசும்பொற் சிலம்பு! வயிரப் பத்தியுடையது; முகப்பில் விலையுயர்ந்த மணி பொலிவது! அதன் வேலைப்பாடெல்

லாம் பார்த்தான் பொய்த்தொழிற் கொல்லன்! உடனே அவன் ஒரு வஞ்சச் சூழ்ச்சியை மனத்துட் கொண்டான். "ஐய, இவ்வருமைச் சிலம்பு கோப்பெருந் தேவிக்கே தகும்; வேறெவரும் இதை யணியுந் தகுதியுடையவர் அல்லர். இதைக் குறித்து நான் அரசனுக்குத் தெரிவித்து வருவேன்; அதுகாறும் எனது சிறு குடிலுக்கு அருகே அந்த இடத்தில் இரும்" என்று அந்தத் திருட்டுத் தட்டான் விரைந்தான். கோவலன் அவ்வாறே ஒரு தேவகோட்டத்துட் புகுந்திருந்தான்.

பொற்கொல்லன், வஞ்சன், திருடன், இரக்கமில்லாப் பாவி! முன்பு அரசிக்குப் பொற்சிலம்பு செய்ய ஏற்றுக்கொண்டான்; செய்தான்; இரண்டு சிலம்பில் ஒன்றை வஞ்சமாகத் திருடிக்கொண்டான். தனது திருட்டுவெளிப்படுமோ என்று அவன்மனம் பதைத்துக் கொண்டிருந்தது. "நல்லவேளையாய் இந்த ஒன்றைச் சிலம்பு கிடைத்தது; 'களவுபோன சிலம்பு இதுவே; கள்ளன் இவனே' என்று இப்புதிய ஆள்மீது பழிசுமத்தி நாம் தப்பித்துக் கொள்வோம்" என்ற சூழ்ச்சியுடன் அரண்மனைக்குட் சென்றான் அக்கொல்லன்.

அப்போது, மன்னவையில் நாடக மகளிர் ஆடிப் பாடிப் பண் முழக்கினர்; அவை அரசனுள்ளத்தைக் கவர்ந்தன. "சரி இவர் மனம் இப்பெண்டிர் வசப்பட்டது என்று பாண்டிமாத் தேவி ஊடி, அந்தப்புரஞ் சென்றாள். அவள் ஊடலைத் தீர்க்கக் காம வயத்தனாய் மந்திரச் சுற்றம் நீங்கி, சேடிகளுடனே அந்தப் புரத்தைப் பார்க்க விரைந்தான் பாண்டியன். அதுதான் சமயமென்று அவ்வஞ்சக்கொல்லன், தாழ்ந்து பணிந்து

முகமன் பலகூறி, இவ்வாறு முறையிட்டான்: "அரசே சிக்கினான் கள்ளன்; கையுங் களவுமாய்ப் பிடித்தேன்.

கன்ன மின்றியும், கவைக்கோல் இன்றியும்,
துன்னிய மந்திரந் துணையெனக் கொண்டு,
வாயி லாளரை மயக்குதுயி லுறுத்துக்
கோயிற் சிலம்பு கொண்ட கள்வன்
* கல்லென் பேரூர்க் காவலர்க் கரந்தென்
† சில்லைச் சிறுகுடி லகத்திருந் தோனே.

அது முன்வினை விளையுங் காலம்; மனம் காமக்களவேறிய காலம். ஆதலின் வேப்ப மாலையணிந்த பாண்டியன் முன்பின் சிந்திக்கவில்லை; ஊர்காப்பாளரை உடனே கூவினான்.

"என், தாழ்பூங் கோதை தன்காற் சிலம்பு,
‡ கன்றிய கள்வன் கைய தாகிற்
கொன்றச் சிலம்பு கொணர்க ஈங்கு!"

என்று கட்டளையிட்டான். அச்சிலம்பைத் தந்து தனது தேவியின் ஊடலைத் தீர்க்கக் கருதினான் மன்னன். "கள்வனைக் கொல்லச் சிலம்புடன் கொண்டு வாருங்கள்" என்பதற்குப் பதிலாக, வாய்தவறி அவ்வாறு சொன்னான்! விதி, விதி! என்ன கொடுமை! "மகராசா சித்தம்போலே நடக்கிறேன்" என்று விரைந்தான் வஞ்சக் கொல்லன்!



* கல்லென்றொலிக்கும் மதுரையின். † தாழ்ந்த.
‡ தழும்பேறிய கள்வன்.

# ௪௦. கொலை! படுகொலை!



“நமது எண்ணம் நிறைவேறியது” என்று தட்டான் மகிழ்ந்தான்! என்ன செய்வது? கோவலனும் முதிர்ந்த தீவினை வலையிற்சிக்கியிருந்தான்! காவலரை அழைத்து வந்தான் திருட்டுத்தட்டான்; ஐயா “அரசனிடம் செய்தி சொன்னேன்; தங்கள் சிலம்பைக்காண இவர்கள், மன்னர் ஆணையால், வந்திருக்கிறார்கள்” என்று கோவலன் முன்னே தந்திரமாகப் பேசினான். பிறகு காவலரைத் தனியாக அழைத்துச் சென்று “களவுபோன அரசி - சிலம்பு இதுவே; அடையாளம் ஒத்திருக்கிறது; இக்கள்வனைக்கொல்ல உத்தரவாயிருக்கிறது; தீட்டுங்கள்!” என்று தூண்டினான். கோவலனைக் காவலர் பார்த்தனர்; “இவனிடம் சீரியர் இலக்கணம் காணப்படுகிறது; இவன் சாது, கள்வனல்லன்; இவனைக் கொல்லத்தகாது” என்று கூறினர். தட்டான் வஞ்சநகை புரிந்து, அவர்கள் மனத்தைக் கலைத்தான்: “நன்றாயிருக்கிறது; இவன் சாதுபோலக்காண்கிறான்—பக்காத்திருடன். இவன் மருந்திற் பட்டால் அரசன் உங்களை உடனே ஒறுப்பான். கள்வர் இலக்கணத்தை உரைப்பேன், கேளுங்கள் :—

மந்திரம், தெய்வம், மருந்தே, நிமித்தம்
தந்திரம், இடனே, காலம் கருவி என்று
எட்டுட னன்றே இழுக்குடை மரபிற்
* கட்டுண் மாக்கள் துணையெனத் திரிவது

---

* திருடியுண்போர்.

மந்திரம், தெய்வம், மருந்து, சகுனம், தந்திரம், இடம், காலம், கருவி இந்த எட்டும் திருடிப் பிழைப் போர் துணையாம். இவர் நாவினால் மந்திரம்போட்டால், தேவர்போல இக்கள்வரும் பிறர்கண்ணுக்குப் புலப் படார். தங்கள் உபாசனை தெய்வத்தை உள்ளத்தில் தெளிந்தால், திருடிய பொருளைக் கையில் வைத்து, நமக்குக் காட்டிக் கொண்டே அவர்கள் தப்புவார்கள் ; நாம் திகைத்து நிற்போம். இவர் மருந்தினால் நம்மை மயக்கினால், இருந்த இடம்விட்டு எங்கும் பெயரமுடியா திருப்போம். சரியான நிமித்தம் வாய்த்தாலல்லது இவர் அரும்பொருள் வலியவந்தாலும் விரும்பார். இவர் தந்திரகரணம் எண்ணினால், இந்திரன் மார்பிற் பூண்ட ஆரத்தையும் எய்துவர். 'இன்னபொருளைத் திருட இன்ன இடம் தக்கது' என்று இவர் துணிந்துசென்றால், அவரை யார் கண்டுபிடிக்க முடியும்? சரியான காலங் கருதி இவர் ஒரு பொருளைக் கைக் கொண்டால், எப்பெரியாரும் இவரை விலக்கமுடியாது. தக்க கருவிகளைக் கொண்டு இவர்கள் கைப்பற்றிய பொருளைக் கண்டறிய வல்லவர் யார்?

இரவே பகலே என்றிரண் டில்லை ;
கரவிடங் கேட்பினோர் புகலிட மில்லை.

கேளுங்கள் ஒரு சம்பவத்தை : முன்னொரு பக லில் ஒரு கள்வன் தூதர் கோலத்துடன் நமது அரண் மனை வாயிலில் இருந்து, இரவில் மாதர் கோலத்துடன், விளக்கு நிழலிலே மறைந்து மறைந்து இளவரசன் பள்ளியறைக்குச் சென்றான் ; அங்கே, அவன் அணிந்த

வயிரமணி மாலையை விரைவாகக் கழற்றினான். இளவரசன் சட்டென விழித்துக் கொண்டான்; மாலை திருடிய கள்ளனைக் கண்டான்; உடைவாளை உருவிக் குத்தினான்; கள்ளன் வாளுறையைப் பிடுங்கிக் கொண்டு, அதில் வாளின் குத்தைத் தாங்கினான். (அரசன் குத்தும்போது வாளிலே உறையை நுழைத்தான்.) பிறகு இளவரசன் கள்ளனுடன் மற்போர் புரியத் தொடை தட்டினான்; அங்கிருந்த மணித்தூணைத் தானாகக் காட்டிக் *களவு நூல் கற்ற கள்வன் மாயமாய் மறைந்தான். இந்த மாயாவிகள் திறமைக்கு உலகில் ஈடில்லை என்றான் பொற்கொல்லன்.

காவலருள் ஓர் இளைஞன் இவ்வஞ்சன் சொல்லை ஆமோதித்தான் :—“ ஆமாம்; நானும் கள்வர் மாயம் கண்ணாரக் கண்டறிவேன். ஒரு நீண்ட மாரிநாள்; இருட்டு ‘கும்’மென்று மயக்கியது; நள்ளிரவு; ஊர் உறங்கியது; நான் எனது காவலிடத்தில் இருந்தேன். ஒரு திருடன் வந்தான்; அவன் கன்னமிடும் கருவி வைத்திருந்தான்; நீலவேட்டி யணிந்திருந்தான்; பற்றிய ஊனை விடாத கடும்புலிபோலே, வேட்கையால் தான் திருடிய நகை நாணயங்களைப் பற்றிக்கொண்டு நின்றான். “ அவனைக் கொல்லக் கைவாள் உருவினேன்; என் வாளைப் பறித்துக்கொண்டான் அக்கள்வன். பிறகு வாளையும் காணேன்; அவனையும் காணேன். இக்கள்வர் செயலை யார் அறிவார்? இவனைச் சும்மா விட்டால் இறைவன் முனிவான். என்ன செய்யலாம்;

* களவுநூல், ஸ்தேயசாஸ்திரம், வடமொழியில் கர்ணீஸுதர் செய்தது.

சொல்லுங்கள் ” என்ருன் அந்தக் கடுமனக் காவலன்.
இவ்வளவிலே கல்லாக் களிமகன் ஒருவன் கிளம்பி
ஞன் ; சற்றும் சிந்தியாமல், வெள்வாளே ஒரே வீச்சில்
வீசிஞன் ! அந்தோ ! வாள் குறுக்கே பாய்ந்து தலே
வேறு உடல்வேருக்கியது! புண்ணினின்று குருதி
பொழிந்து நிலமிசை பரந்தது.

பாண்டியன் செங்கோல் கோடியது ! தரும
தேவதை அலறிஞள் ! சிலம்பு விற்கவந்த கோவலன்
இரண்டு துண்டாகிக் கீழே விழுந்தான், இறந்தான் !
ஊழ்வினேப் பயனென்னே ! அந்தோ !

நண்ணும் இருவினேயும் ; நண்ணுமின்கள் நல்லறமே :
கண்ணகிதன் கேள்வன் காரணத்தால்—மண்ணில்
வளேயாத செங்கோல் வளேந்ததே பண்டை
விளேவாகி வந்த வினே !



# ௪௧. தீக்குறி



இந்திரன் மாலையைப் பூண்டு, வெண்கொற்றக் குடை தாங்கிய பாண்டியன், இமய நெற்றியில், தனது மீனக்கொடியை எழுதினான்; வடக்கேயுள்ள புலிக்கொடிச் சோழன், மேற்கேயுள்ள விற்கொடிச் சேரன், இன்னும் நாவலந் தீவிலுள்ள மன்னர் அனைவரும் தனது ஏவல் கேட்பப் பாராண்டான். அவன் அரண்மனையில் காலை முரசம் முழங்கியது. அன்று மாதரி அரண்மனைக்கு நெய்யளக்கும் முறை. அதற்காக அவள் ஐயையை அழைத்து, கடைகயிறும் மத்தும்கொண்டு தயிர் கடையச் சென்றாள்: தாழியைத் திறந்து பார்த்தாள். பிரையிட்டபால் உறையவில்லை; பட்டியில் காளைகள் கண்ணீர் சொரிந்தன. நேற்றெடுத்த வெண்ணெயை உருக வைத்தாள்; அதுவும் உருகவில்லை; ஆட்டுக்குட்டிகள் துள்ளி விளையாடாமல் முடங்கிக் கிடந்தன; நான்கு முலைக்காம்புகளையுடைய பசுக்கள், உடல் நடுங்கி நின்று இரங்கின. பசுக்களின் கழுத்திற்கட்டிய பெரிய மணிகள் அறுந்து வீழ்ந்தன! 'என்னே தீக்குறிகள்! இன்றேதோ துன்பம் வரப்போகிறது, வந்துவிட்டது!' என்று மாதரி திகைத்தாள்; ஐயை அஞ்சினாள்.

'மகளே, அஞ்சாதே; கண்ணன் நம்மைக் காப்பான்; முன்னே ஆயர்பாடியில், கண்ணன் பலராமனுடன் ஆடிய பாலசரிதை நாடகங்கள் பலவாம்; அவற்றில் கண்ணன் பின்னைப் பிராட்டியுடன் ஆடிய

குரவையை இன்றாடுவோம். நமது கறவை கன்றுகள் துயர் நீங்குக !" என்றாள் மாதரி.

பின்னையின் தோழியர் எழுவர் ; எழுவகை ஏறுகளை வளர்த்தனர். அவையாவன :—(1) காரியெருது (2) நெற்றியிற்சிவந்த சுட்டிகட்டியது (3) வலிய மழவிடை (4) நுண்பொறி வெள்ளை (5) பொன்பொறி வெள்ளை (6) வெற்றி மழவிடை (7) தூநிறவெள்ளை. 'இந்த ஏழு வகை ஏறுகளை அடக்கி நடத்தும் வீரனுக்கே முல்லைப்பூங்குழலி, மணமலர்க்கோதை, பொற்றொடி, மென்முலையாள், புதுமலராள் ஆகிய பெண்கொடி பின்னைப் பிராட்டி உரியள் என்றனர்' எழு தோழியரும். அத்தகைய வீரன் கண்ணனே யன்றோ ! பின்னையாகிய ஜீவாத்மாவைக் கண்ணனுக்கு உரிமையாக்குவதே சப்த நாடிகளாகிய தோழியர் குறிப்பு ; எழுவரும் ஸப்தஸ்வரங்களுமாவர். சப்தஸ்வரங்களாலாகிய ஜீவகானம் கண்ணனைப் போற்றி இன்புறுகிறது. இனி ஆய்ச்சியர் கண்ணகி முன்னிலையிற் குரவை யாடுகின்றனர்.



## சஉ. குரவை

குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன ஏழிசை தரும் யாழ்நரம்புகள் ; இசையும் இசைப்பயனும் இறைவனான கண்ணனே யாவன். இந்த ஏழிசைகளையும் குறிக்க ஏழு ஆய்ச்சியர் வட்டமிட்டு நின்றனர். குரல் கண்ணன், துத்தம் பின்னைப்பிராட்டி, இளி பலராமன் எனக் குறித்தனர். கண்ணனாக நின்ற ஆய்ச்சிக்குத் துளவ மாலை சூட்டினர் ; அவனுக்கு இனியள் பின்னையே என்றாள் மாதரி. ஆய்ச்சியர் எழுவரும் நின்ற ஒழுங்கை அடியிற் காண்க:—




இவ்வாறு வட்டமாக ஆய்ச்சியர் கற்கடகக் கை

பக்கம் 223 அத். சஉ.

ஆய்ச்சியர் குரவைக் கூத்து



கோத்து நின்றபிறகு, மாயவனாக நின்றவள் பின்னையை நோக்கி,

“ கொல்லைப் புனத்துக் குருந்தொசித்தாற் பாடுதும்,
முல்லைத் தீம் பாணியென் றாள் ”

கண்ணன், கன்றைக் குறுந்தடிபோல் எறிந்து விளாங்கனி யுதிர்த்தான்; பாம்பு கயிறாய்ப் பாற்கடல் கடைந்தான்; கொல்லையில் சார்ந்த குருந்தொசித்தான்; அவன் இன்று நம்மிடையே வந்தால் முல்லைத் தீங்குழல் கேட்போம்.

கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்,
இன்று நம்மானுள் வருமேல், அவன் வாயில்,
கொன்றையந் தீங்குழல் கேளோமோ தோழீ!

பிறகு யமுனைத்துறையில், கண்ணன், கோபியர் துகிலை யொளித்த திருவிளையாடலைப் பாடினர். உடல் உயிர், மனம் அனைத்தையும், எல்லா உணர்வுகளையும், மானாவமானங்களையும், வேறு எப்பற்றுமில்லாமல், இயல்பாகவுள்ளபடியே இறைவனுக்கு அர்ப்பணிக்க வேண்டுமென்பதே இந்த லீலையின் கருத்து. தனது நெஞ்சங்கவர்ந்து வஞ்சம் புரிந்த மாயனிடம் ஜீவாத்ம வடிவான பின்னை, காதலாகிக் கருத்தழிந்து அவனழகில் மோகித்து நிற்கிறாள்..........................................

‘ வலப்புறம் மலர்மேனிப் பலராமன், இடப்புறம் கடல் மேனிக்கண்ணன் நின்று பின்னை முதலிய கோபியருடன் தாதெரு மன்றத்தில் ஆடிய குரவை தகவுடைத்தே ’ என்று மாதரி போற்றுகிறாள். பிறகு தமிழ்

இன்று நம்மானுள் வருமேல் அவன்வாயில்
கொன்றையந் தீங்குழல் கேளோமோ தோழீ

*நாட்டு மூவேந்தரையும் திருமாலவதாரமெனக் குறித்துப் பாடுகின்றனர் :*

கோவா *மலையாரம், கோத்த கடலாரம்,
தேவர்கோன் பூணாரம் தென்னர்கோன் மார்பினவே!
தேவர்கோன் பூணாரம் பூண்டான் செழுந்துவரைக்
கோகுல மேய்த்துக் குருந்தொசித்தான் என்பரால் !

பொன்இமயக் கோட்டுப் புலிபொறித்து மண்ணாண்டான்
மன்னன்' வளவன், மதிற்புகார் வாழ்வேந்தன்;
மன்னன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன்
பொன்னந் திகிரிப் பொருபடையான் என்பரால் !

முந்நீரின் உள்புக்கு, மூவாக் கடம்பெறிந்தான்
மன்னர்கோச் சேரன், வளவஞ்சி வாழ்வேந்தன்,
மன்னர்கோச் சேரன் வளவஞ்சி வாழ்வேந்தன்,
கன்னவில் தோளோச்சிக் கடல்கடைந்தான் என்பரால் !

*இனி அனைவரும் கண்ணனை முன்னிலைப் படுத்தி உருக்கமாகப் பாடியாடுகின்றனர்.*

வடவரையை மத்தாக்கி, வாசுகியை நாணாக்கிக்
கடல்வண்ணன் பண்டொருநாட் கடல்வயிறு கலக்கினையே
கலக்கியகை யசோதையார் கடைகயிற்றாற் கட்டுண்கை
மலர்க்கமல வுந்தியாய் மாயமோ மருட்கைத்தே !

அறுபொரு ளிவனென்றே அமரர்கணந் தொழுதேத்த
உறுபசியொன் றின்றியே யுலகடைய உண்டனையே;
உண்டவாய் களவினால் உறிவெண்ணெ யுண்டவாய்
வண்டுழாய் மாலையாய் மாயமோ மருட்கைத்தே !

---

* பொதியமலை.

திரண்டமரர் தொழுதேத்துந் திருமால்,நின் செங்கமல
இரண்டடியால் மூவுலகும் இருள்தீர நடந்தனையே !
நடந்தஅடி பஞ்சவர்க்குத் தூதாக நடந்தவடி !
மடங்கலாய், மாறட்டாய், மாயமோ, மருட்கைத்தே !

*இனி மாயவன் சீர் கேட்கும்படி உலகத்தாரை விழிப்புறுத்தி யழைக்கின்றனர் :*

மூவுலகும் ஈரடியால், முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத் தம்பியொடுங் கான்போந்து,
சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கைக் கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே !
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே !

பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம்
விரிகமல வுந்தியிடை விண்ணவனைக் கண்ணுந்
திருவடியுங் கையுந் திருவாயுஞ் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே !
கண்ணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்ன கண்ணே!

மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை, நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றப்
படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை யேத்தாத நாவென்ன நாவே
நாராய ணாவென்னா நாவென்ன நாவே !

*நாம் குரவை பாடி யாடி ஏத்திய தெய்வம், நமது ஆநிரைகளிடம் புகுந்த துயர் களைந்திடுக ! இடிப்படை யுடைய இந்திரன் முடியையுடைத்த தொடித்தோள் தென்னவன் கடிமுரசம், வேந்தர் மருள, பகைவரை வென்று எந்நாளும் வெற்றிமுழக்கம் செய்க !*

*இவ்வாறு கடவுளையும், மன்னனையும் போற்றி ஆய்ச்சியர், கண்ணகி முன்னிலையில், குரவைக் கூத்தாடி முடித்தனர்.*



## ௪௬. கண்ணகி துன்பம்

கோவலன் வெட்டுண்ட செய்தி ஊரெங்கும் காட்டுத் தீப்போலப் பரவியது. புறஞ்சேரி ஆயர் பாடியில், குரவைக்கூத்து முடிந்ததும், மாதரி, பூவும், புகையும், சாந்தும் கொண்டு வைகைத் துறையில் நீராடி, நெடுமாலை வழிபடச் சென்றாள். அச்சமயம் ஊர்ச்செய்தி கேட்டு, ஐயை விரைவாக வந்து, அதைத் தாயிடம் தெரிவித்தாள். ஆய்ச்சியரிடையே செய்தி பரவியது. அனைவரும் திடுக்கிட்டனர். கண்ணகியிடம் இத் துயரச் செய்தியைச் சொல்ல நாவெழாது அனைவரும், “அந்தோ என்ன அழகு, இளமை, வனப்பு, நற்குணம் கற்பு—இத்திருமதிக்கு இப்படிப்பட்ட துயரம் வந்ததே” என்று விம்முற்று நின்றனர்.

யார் சொல்லாது போனாலும், தன் மனம் சொல்லித் தீருமல்லவா? சென்ற மணாளன் மீளாததினால், கண்ணகி மனம் கலக்கமுற்றது. தனது மனக் கலக்கத்தை அவள் ஐயையிடம் கூறினாள் :—

காதலற் காண்கிலேன் ! கலங்கிநோய் கைம்மிகும்
ஊதுலை தோற்க, உயிர்க்குமென் நெஞ்சன்றே
ஊதுலை தோற்க உயிர்க்குமென் நெஞ்சாயின்,
ஏதிலார் சொன்ன தேவன் வாழியோ தோழீ !

நன்பகற், போதே, நடுக்குநோய் கைம்மிகும் ;
அன்பனைக் காணாது அலவுமென் நெஞ்சன்றே
அன்பனைக் காணா தலவுமென் நெஞ்சாயின்,
மன்பதை சொன்ன தேவன்வாழி யோதோழீ !

* மறையச் சொன்னது.

தஞ்சமோ தோழி ! தலைவன் வரக்காணேன் !
வஞ்சமோ வுண்டு ; மயங்குமென் நெஞ்சன்றே
வஞ்சமோ வுண்டு மயங்குமென் நெஞ்சாயின்,
எஞ்சலார் சொன்ன தேவன் வாழி யோதோழீ !

இவ்வாறு கண்ணகி கலங்கக் கண்டு, ஐயை, "உனது கலக்கம் சரிதான்; அந்தோ, பாண்டியன் அரண்மனையில், சிலம்பைத் திருடிய கள்வனென்று ஐயுற்றுக் கோவலனைக் காவலர் கொன்றனர் !" என்று நடந்த செய்தியைத் திறந்து சொல்லிவிட்டாள். இடிவிழுந்தது போலிருந்தது செய்தி ! என் செய்வாள் பத்தினி ! ஆ, துயரம் ! மாதவி மோகத்தால் செல்வமிழந்தான் கணவன் ; கண்ணகி சுகமிழந்தாள் ; கணவன் வறியனாய் மீண்டான் ; உடனே இருவரும் வீடுவாசலெல்லாம் விட்டு, சிலம்புவிற்று, வாணிபம் செய்து பிழைக்கக் காடுமேடெல்லாம் நடந்து வருந்தி மதுரை சேர்ந்தனர். 'கண்ணே, இதோ சென்று சிலம்பை விற்று வருகிறேன்' என்று தன்னை அணைத்து அன்பு பேசிச் சென்ற கணவன், உத்தமக் கணவன், நலமேயன்றித் தீதறியாத் தருமவான், இவ்வாறு திருட்டுக் குற்றத்திற்காகக் கொலையுண்டான் என்றால் அவனன்றி யாருமில்லாப் பத்தினியின் துன்பத்தை அளக்கப் போமோ ? சிலம்பு தனது ; அதை அரண்மனையில் திருடினான் என்ற பொய்யைப் பத்தினி தாங்குவாளோ ?

பொங்கி யெழுந்தாள் ; "ஆ, என்னருமைக் காதலா" என்றலறி இடியுண்ட கொடியென விழுந்தாள். கதிர் பொழியும் திங்கள், கார்மேகத்துடன் நிலத்தில்

வீழ்ந்தது போல, மதிமுகமும், காரார் கூந்தலுங் கொண்ட கண்ணகி வீழ்ந்தாள்! செங்கண் சிவப்ப அழுதாள்! "என் கண்ணாளா! அந்தோ நீ எங்குற்றாய்? என்னுடன் இன்புற்ற நீ, எரி மூழ்கக் காண்பேனோ! நானும் அதே எரியில் மூழ்காமல் கைம்பெண் விரதம் பூண்பேனோ! ஆ, மன்னவன் தவறிழைத்தான்! என் அன்புயிரான உன்னை இழந்தேன்! அகன்ற மார்புடைய ஆருயிர் நண்பா! நீ தீயில் மூழ்க, நான் நீர்த் துறைகளில் மூழ்கிக் கைம்பெண்ணாய் வாழ்வேனோ! அதர்மம் செய்த இந்த மன்னனைச் சும்மாவா பார்த்திருக்கிறாய் அறக்கடவுளே! நீ அறிவற்றவனோ! ஐயோ எனக்கு யார் இரங்குவார்! அந்தோ!

> தம்முறு பெருங் கணவன் தழலெரி யகமூழ்கக்
> கைம்மைகூர் துறைமூழ்குங் கவலைய மகளிரைப்போல்
> செம்மையின் இகந்தசொல் செழியன்பால் தவறிழைப்ப
> இம்மையும் இசையொரீஇ இனைந்தேங்கி யழிவலோ!

தீக்குறிகண்டு குரவையாடிய ஆய்ச்சியீர், கேண்மின்! காய்கதிர்ச் செல்வனே, கடல்வேலி சூழ்ந்த இவ்வுலகில் நீ அறியாததில்லை; சொல், என் கணவன் கள்வனோ?" என்றாள் பத்தினி.

அப்பொழுது,

> "கள்வனோ அல்லன்! கருங்கயற்கண் மாதராய்!
> ஒள்ளெரி யுண்ணுமிவ் வூர்"

"உன் கணவன் கள்வனல்லன்; கருங்கயற்கண் மாதரசே! அப்படிப் பொய்க் குற்றஞ்சாட்டி உனது உத்தமக் கணவனைக் கொன்ற பாண்டியன் நகரமாகிய இவ்வூர் தீப்பட்டெரியும்" என்று ஓர் அசரீரி கேட்டது!



## ௪௪. கண்ணகி முறையீடு



சும்மா விட்டாளா வீரக் கண்ணகி! மற்றொரு சிலம்பைக் கையிலெடுத்துக் கொண்டாள்; ஆயர்பாடியை நீத்தாள்; நகருக்குள்ளே சென்று, ஊர்மகளிரிடம் மன்னன் அநீதியைச் சொல்லி முறையிட்டாள் :—

முறையில் அரசன்றன் ஊரிருந்து வாழும்
நிறையுடைப் பத்தினிப் பெண்டிர்காள் ஈதொன்று.

பட்டேன் படாத துயரம்; படுகாலை
உற்றேன் உறாத துறுவனே யீதொன்று.

கள்வனோ அல்லன், கணவன்என் காற்சிலம்பு
கொள்ளும் விலைப்பொருட்டாற் கொன்றாரே ஈதொன்று.

மாதர் தகைய மடவார்கண் முன்னரே
காதற் கணவனைக் காண்பனே யீதொன்று
காதற் கணவனைக் கண்டால் அவன் வாயில்
தீதறு நல்லுரை கேட்பனே ஈதொன்று.

தீதறு நல்லுரை கேளா தொழிவனேல்
நோதக்க செய்தாளென் றெள்ளல் இதுஒன்று.

"நியாயம் பாராமல், சிந்தியாமல், ஒரு குற்றமற்ற புண்ணியனைக் கொன்றானே உமது மன்னன்! அந்த முறை கெட்ட அரசனூரில் வாழும் பத்தினிப் பெண்காள், என் முறையைக் கேளுங்கள்! வாழ்க்கையில் படாத பாடும் பட்டேன்! எவ்வளவோ துயரம் பொறுத்தேன்! எனக்குப் பொறுக்க முடியாத துயரம்

உற்றதே ! என் கணவன் கள்வனல்லன் ; அவன் உயர்குடிப்பிறந்த உத்தமன் ! என்காற்சிலம்பில் ஒன்றை விற்க இந்நகருக்குக் கொண்டு வந்தான் ! இதோ அதே போன்ற மற்றோர் சிலம்பு என்கையில் உள்ளது ! நான் கையாரத் தந்த சிலம்பு எப்படிப் பாண்டியன் தேவி சிலம்பாகும் ? என் கணவன் எப்படித் திருடனுவான் ? அந்தோ, அநியாயமாக அவனைக் கொன்றார்களே ! இனி என் கணவனைக் காண்பேன். கண்டால் நல்லுரை கேட்பேன் ! என் கற்பின் பெருமையால் அவன் எழுந்து நல்லுரை சொல்லாது போனுல், பிறகு என்னைத் தீயள் என்று இகழ்தற்கு அது நல்ல காரணமாகும் " இவ்வாறு துயராற்றுமல் அல்லலுற் றழுவாளைக் கண்டு, மதுரைப் பொதுஜனங்கள் ஏங்கிக் கலங்கினர். " இவள் புதிய தெய்வம், சிலம்பேந்தி வந்தாள். இப்பத்தினித் தெய்வத்திற்கு ஆறுத்துயர் செய்ததால் பாண்டியன் நீதி கெட்டது ! விளையாத கோறும் விளைந்தது ! மேலும் என்ன விளையுமோ ! தென்னவன் கொற்றம் சிதைந்தது !

களையாத துன்பமிக் காரிகைக்குக் காட்டி
வளையாத செங்கோல் வளைந்த திதுவென்கோல் !
மண்குளிரச் செய்யு மறவேல் நெடுந்தகை
தண்குடை வெம்மை விளைந்த திதுவென்கோல் !
செம்பொற் சிலம்பொன்று கையேந்தி நம்பொருட்டால்,
வம்பப் பெருந்தெய்வம் வந்த திதுவென் கோல் !

பலர், நீதி தவறிய பாண்டியனை வன்பழி தூற்றினர். சிலர் கண்ணகியை அழைத்துச் சென்று

## கொலையுண்ட கோவலன் - கண்ணகி துயரம்



யாருமில் மருள்மாலை இடருறு தமியேன்முன்
தார்மலி மணிமார்பம், தரைமூழ்கிக் கிடப்பதோ !
தெய்வமும் உண்டுகொல் ? தெய்வமும் உண்டுகொல் ?

கொலைக்களத்தில் அவன் வெட்டுண்டு கிடப்பதைக் காட்டினர்.

கண்ணகி, கணவன் உடலைக் கண்டாள்! அவள் துயரைக் காணச் சகியாமல், கதிர் சுருக்கிச் சூரியன் அஸ்தமன கிரியிற் போய் ஒளிந்தான். பூங்கொடியாள் முறையிட்டினால், ஊர் "ஒல்" என்று ஒலிபடைத்தது. அந்தோ என்ன பரிதாபம்! இன்று காலைதான் மார்புறத் தழுவிக் கொண்டாள்! அவனது வண்டார் குஞ்சியில் முடிந்திருந்த மாலையைத் தனது வார்குழலிற் சூடினாள்; மாலையில் புண்ணினின்று இரத்தம் வடியக் கணவன் வெட்டுண்டு கிடைப்பதைக் கண்டாள்! இதனினும் கடுந்துயர் உண்டோ! "என்னருமைக் கண்ணாளா, உனது பொன் மேனி புழுதியிற் புரண்டு கிடப்பதோ! எனது துயரைக் காணீரோ? நான் இடர்ப்படுவேன் என்றெண்ணீரோ! மன்னன் இக் கொலைத் தொழிலைச் செய்தான்! நான் முற்பவத்தில் செய்த தீவினையால், எனக்கு இத்துயர் நேரிட்டதென்று இந்நாட்டிலுள்ளார் யாரும் கூறார் களோ!

யாருமில் மருண்மாலை, இடருறு தமியேன்முன்
தார்மலி மணிமார்பந் தரைமூழ்கிக் கிடப்பதோ!
பார்மிகு பழிதூற்றப் பாண்டியன் தவறிழைப்ப,
ஈர்வதோர் வினைகாணு இதுவென வுரையாரோ!

கண்பொழி புனல்சோருங் கடுவினை யுடையேன்முன்
புண்பொழி குருதியிராய்ப் பொடியாடிக் கிடப்பதோ!
மன்பதை பழிதூற்ற, மன்னவன் தவறிழைப்ப,
உண்பதோர் வினைகாணுய் இதுவென வுரையாரோ!

இவ்வூரில், பத்தினிப் பெண்டிரும், சான்ருேரும், தெய்வமும் உண்டோ? உண்டானல் இந்த அநியாயம் நடக்குமா?

பெண்டிரும் உண்டு கொல்? பெண்டிரும் உண்டுகொல்?
கொண்ட கொழுநர் உறுகுறை தாங்குறூஉம்
பெண்டிரும் உண்டுகொல்? பெண்டிரும் உண்டுகொல்?

சான்றோரும் உண்டுகொல், சான்றோரும் உண்டுகொல்!
ஈன்ற குழவி எடுத்து வளர்க்குறூஉம்
சான்றோரும் உண்டுகொல்! சான்றோரும் உண்டுகொல்!

தெய்வமும் உண்டுகொல்? தெய்வமும் உண்டுகொல்!
வைவாளிற் றப்பிய மன்னவன் கூடலில்
தெய்வமும் உண்டுகொல்? தெய்வமும் உண்டுகொல்?

கண்ணகி, இவ்வாறு முறையிட்டழுது புலம்பினுள்; கணவன் மார்பை இறுகத் தழுவிக் கொண்டாள்! உடனே இறந்த கோவலன் எழுந்தான்! "அந்தோ, உனது நிறைமதிவாண்முகம் கன்றியதே!" என்று விசனித்தான்; அவள் கண்ணீரை மாற்றினுன். கண்ணகி அழுதேங்கி நிலத்தில் வீழ்ந்து தொழுதக்க கணவன் திருந்தடியை வளைக்கையாற் பற்றினுள். அவன், "நீ இருக்க!" என்று சொல்லித் தேவர் குழுவுட் சேர்ந்தான்.

ஆ! இது மாயமோ? என்னை மருட்டிய தெய்வமோ? ஈதென்ன? கணவன் எழுந்தான்! விழுந்தான்; மறைந்தானே! எங்கும் தேடுவேன்; கணவனைக் கூடுவேன்; இது எளிதே! எனினும் என் சினம் தணிய வேண்டும்; பிறகே கணவனைக் கூடுவேன்.

"என் கணவனை ஏன் அநியாயமாகக் கொன்றாய்" என்று அந்த அதர்ம மன்னனைக் கேட்பேன், கேளாமல் விடேன் - இதோ செல்கிறேன்" என்றாள்; எழுந்தாள்; தான் புகாரில் கண்ட தீக்கனவை நினைத்தாள்; நீள் கண்ணீர் சொரிந்தாள்; நின்றாள்; தன் பக்கம் நியாயம் இருப்பதை நினைந்தாள்! கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்; அரசன் செழுங்கோயில் வாயில் முன் சென்றாள்.



## ௨௫. யாரோ அரசன்? யானே கள்வன்!

மெய்யிற் பொடியும், விரித்த கருங்குழலும்,
கையிற் றனிச்சிலம்புங் கண்ணீரும்—வையைக்கோன்
கண்டளவே தோற்றான்;அக் காரிகைதன் சொற்செவியில்
உண்டளவே தோற்றான் உயிர்!

அங்கே, பாண்டியன் மனைவி பெருந்தேவி, ஒரு தீக் கனவு கண்டு, தோழியிடம் சொல்லுகிறாள்: "நமதரசன் செங்கோலும், வெண்குடையும் நிலத்தில் வீழ்ந்தன; கொற்ற வாயலில் உள்ள ஆராய்ச்சி மணியின் குரல் நடுநடுங்கியது; எட்டுத் திசைகளும் அதிர்ந்தன; கதிரவனை இருள் விழுங்கியது; இரவில் வானவில்லிட்டது; பகலில் நட்சத்திரங்கள் வீழ்ந்தன. ஏதோ தீங்கு வருகிறது! தோழீ, நான் கண்ட தீக்குறிகளை அரசனிடம் சொல்வோம் வா" என்று புறப்பட்டாள். அணியிழைச் சேடியர், கண்ணடி, நிறைகுடம், கோடி, பட்டு, தாம்பூலம், வண்ணம், சுண்ணம், கஸ்தூரி, சந்தனம், பூங்கொத்து, பூமாலை, கவரி, தூபம் முதலிய மங்கலப் பொருள்களை ஏந்திப் பின் சென்றனர்; கூனர், ஊமைகள், குள்ளர்கள் கூடிய குற்றேவல் செய்யும் இளைஞர் சூழ்ந்து வந்தனர்; முதிய பெண்கள் வாழ்த்துரை கூறினர்; "ஈண்டுநீர் வையம் காக்கும் பாண்டியன் பெருந்தேவி வாழ்க!" என்று ஆய மகளிரும், காவற்பெண்டிரும் அடிபணிந்து புகழ்ந்தேத்தினர். இவ் வைபவங்களுடன் கோப்பெருந் தேவி, அரசனை அணுகித் தான் கண்ட தீக்கனாத் திற

முறைத்தாள். திருவளர் மார்பனை தென்னவர் கோமான், சிங்காதனத்திலிருந்து, தனது தேவி சொல் வதை வியந்து கேட்டான். அச்சமயம், இப்பால் அரண் மனை வாயிலிற் கண்ணகி தோன்றி, வாயல் காப்பா னிடம் இவ்வாறு முறையிட்டாள் :—

வாயி லோயே! வாயி லோயே
* அறிவறை போகிய †பொறியறு நெஞ்சத்(து)
இறைமுறை பிழைத்தோன் வாயி லோயே
இணைஅரிச் சிலம்பொன் றேந்திய கையள்
கணவனை யிழந்தாள் ‡கடையகத் தாளென்(று)
அறிவிப் பாயே! அறிவிப் பாயே!

வாயிலோன், அவ்வாறே விரைந்து சென்று பாண்டியனை வணங்கி, உற்ற தறிவித்தான் :—“ எமது கொற்கை வேந்தே, தென்னம் பொருப்பின் தலைவா, செழியனே, தென்னவர்கோனே, பழியாதும் படராப் பஞ்சவ, நீ நீடூழி வாழி! வாசலில் ஒரு வீராவேசங் கொண்ட பெண் வந்திருக்கிறாள். அவள் மகிஷவாகினி யான, வெற்றிவேல் பிடித்த கொற்றவையல்லள். அவள் ஆறு சக்திகளுக்கும் இளைய பிடாரியும் அல்லள்; இறைவனை ஆடல் கண்டருளிய அணங்கும் அல்லள்; தாருகன் மார்பைக் கிழித்த கொடிய கானமுறையும் வீரமா காளியுமல்லள். ஆனால், அவள் தோற்றம் பயங் கரமாகவே யிருக்கிறது. அவள் முகத்தில் வெறுப்புக் காண்கிறது; அவள் மனம் சினங் கொதிக்கிறது; கையில் நல்ல வேலைப்பாடுள்ள ஒரு பொற்சிலம்பை

* அறிவு கெட்ட. † புண்ணியமற்ற நெஞ்சம்.
‡ வாயிலில் காத்திருக்கிறாள்.

வைத்துக் கொண்டிருக்கிறாள். கணவனை யிழந்தவள் ; நமது கடைவாசலில் நிற்கிறாள் !" இதைக் கேட்டு அரசன் பரபரப்புடன் 'அவள் வருக ! அவளை இங்கே அழைத்து வா ' என்றனன். வாயிலான் வந்து, கோயிலுட் செல்ல வழிகாட்டினான்.

* * * *

அதர்மத்தின் முன்பு, தருமதேவதை போலவும், பொய்யின் முன்பு மெய்போலவும், அறியாப் பழியின் முன்பு, அறம் போலவும், குற்றமற்ற கோவலனைக் கொல்லக் காரண மாயிருந்த பாண்டியன் முன்னே வீரபத்தினி நின்றாள். பாண்டியன், பத்தினியை உற்று நோக்கினான் :—

பாண்டியன் :—மடக்கொடியே, நீர் சொரியும் கண்ணியே ! என்முன் இக்கோலத்துடன் வந்த நீ யார் ?

கண்ணகி :—ஆராய்ச்சியற்ற மன்னா, சொல்கிறேன் கேள்:--சோழமன்னனைப்பற்றி அறிவாயல்லவா? அவன் முன்னோர் பெருமை அளப்பரிது. ஒரு புறாவின் உயிரைக் காக்கத் தனது ஊனை அறுத்துக் கொடுத்தான் சிபிச்சக்கிரவர்த்தி; ஒரு பசு ஆராய்ச்சிமணியை அடித்தது ; அரசன் சென்று பார்த்தான்; பசு கண்ணீர்விட்டு நின்றது; 'அதன் கன்று, இளவரசனை வீதிவிடங்கன் தேர்க்காலில் அகப்பட்டிறந்தது ' எனக்கேள்வியுற்றான். 'இப்பசு தனது கன்றையிழந்து வருந்துவது போலே, எனது ஒரே புதல்வனை இழந்து நான் வருந்துக ! அதுவே நீதி ; என்று தன் குமரனைத் தேர்க்காலில் இட்டுப் பசுவுக்கு நீதி செய்தான் மனுநீதி கண்ட

சோழன். அத்தகைய நீதி மன்னர் மரபில் வந்த கரிகால் வளவனது மாபெரும் பதியான புகாரே எனது ஊர். அவ்வூரில் அப்பழுக்கற்றுச் சீரும்செல்வமும் சிறந்தோங்கும் பெருங்குல வாணிகன் மாசாத்துவான் ஆவான். அவன் மகனே கோவலன். கோவலன் ஊழ்வினையால் தாழ் நிலையுற்று, ஊரைத் துறந்து, என்னுடன் உனது நகர் புகுந்தான். எனது காலிலுள்ள ஒரு பொற்சிலம்பை விற்றுப் பிழைக்கக் கருதி, அதை விலைகூறவே இன்று வந்தான்; உன்னால் படுகொலையுண்டான். கொடுங்கோல் அரசே, நான் அந்தக் கோவலன் மனைவி; என் பெயர் கண்ணகி.

பாண்டியன் :—பெண்ணணங்கே, ஒரு கள்வனைக் கொல்வது கொடுங்கோல் அல்லவே! அது அரச நீதியல்லவா?

கண்ணகி :—யார் கள்வன்? என் கணவனா கள்வன்? நல்வழியிற் செல்லாத கொற்கை வேந்தே! சிலம்போ என்னது! அதை விற்க வந்தவன் என்னவன்; புண்ணியன்!

பாண்டியன் :—அச்சிலம்பு, எமது தேவியின் சிலம்பல்லவா? உன்னதென்று எப்படிச் சொல்வாய்?

கண்ணகி :—அரசே, இதோ அச்சிலம்பின் ஜோடியை வைத்திருக்கிறேன்; உனது அரசியின் சிலம்பிற்கும் இதற்கும் உள்ள வேற்றுமையைப் பார்த்துப் பிறகு பேசு. எனது பொற்சிலம்பிற் குள்ளிருப்பது மணியுடை அரி.

பாண்டியன் :—எனது தேவியின் சிலம்பு முத்துடை அரி; அம்மா நீ சொல்வது சரி; இதோ என்

தேவியின் சிலம்பு ; உன் சிலம்பைத்தா ; இரண்டையும் சோதிப்போம்.

கண்ணகி :—இதோ என் சிலம்பு ; உடைத்துப் பார்க்கலாம் ;

[பத்தினியின் சிலம்பு தன்னால் உடைந்து மணி தெரிக்கிறது]

பாண்டியன் :—ஆ! பத்தினி, நீ சொல்லுமுன்பே சிலம்புடைந்து மணிகள் தெறித்தனவே! ஆ, அறக்கடவுளே, எனது புகழ்முடி உடைந்தது! எனது செங்கோல் தளர்ந்தது! என் குடை தாழ்ந்தது! என் அரியணை ஆடுகிறதே! பொற்கொல்லன் பொய் சொன்னான்! அப் பொய்யன் உரையைக் கேட்டுப் பழுதற்ற ஒரு புண்ணியனைக் கொன்றேன்! மாசற்ற பத்தினிக்குத் தீங்கிழைத்தேன்! பத்தினி, உன் கணவன் கள்வனல்லன் ; அவன் நல்லவன். ஆ! உனக்கு இத்துயர் விளைத்த யானோ, நிரபராதியான உன் கணவனைக் கொன்ற யானோ, உனது காற்சிலம்பை எனதெனச் சொல்லிப் பழிசுமந்த யானோ, அநீதனாகிக் குலப்புகழைக் கெடுத்த யானோ,

யானோ அரசன்! யானே கள்வன்!
மன்பதை காக்கும் தென்புலம் காவல்
என்முதற் பிழைத்தது! கெடுகஎன் ஆயுள்!

ஆ, அரசனுக்கு உயிர் அறம்! அறம் பிழைத்தபின் யான் இருந்தென்ன? அநியாயமாக உன் கணவனைக் கொன்ற கொலைப்பழி இதோ என்னையும் கொன்றது! என்னால் கணவனையிழந்து கோவலன் பத்தினி வருந்துகிறாள்! கோவலன் உயிருக்கு, இக்காவலன் உயிர் ஈடு செய்க! என்மதி கெட்டது! என் குலங்கெட்டது! என் அறங்கெட்டது! கெடுக என் ஆயுள்........!

கண்ணகி சினத்தீ



பட்டாங்கு யானுமோர் பத்தினி யாமேல் - ஒட்டேன் அரசோ டொழிப்பேன் மதுரையை!

மன்னவன் மயங்கினன்! அரியணையினின்றுருண்டு கீழே வீழ்ந்தான்; இறந்தான்! கோப்பெருந்தேவி மனங்குலைந்தாள்; உயிர் நடுங்கினள்; கணவனைத் தொட்டுப் பார்த்தாள்; கணவன் இறந்ததைக் கண்டாள். “தாய் தந்தையர் முதலியோரை இழந்தவர்க்கு, ‘இவர் எமது தாயைப்போன்றார்; தந்தையைப் போன்றார்’ என்று வேறு பெரியாரைக் காட்டலாம்; கணவனை யிழந்தவரிடம் அவ்வாறு பேச்சளவிற்கூடச் சொல்லமுடியாது; கணவனை யிழந்தவருக்கு யாராலும் ஈடுசெய்ய முடியாது; ஆ பத்தினீ, உன் கணவனை யிழந்து நீ துயருழன்றாய்! நீ வீர பத்தினி! உன் மனத்துயர் இப்பழி வாங்கியது! உன்னைப்போல நானும் துயருற்றேன்! பத்தினிக் கடவுளே! உன் அடியைப் பிடித்துத் தொழுகிறேன்.......................!”

இவ்வாறு ஓலமிட்டுக் கண்ணகி பாதத்தில் விழுந்து தொழுதாள் கோப்பெருந்தேவி. கண்ணகி பதறினள். “கோவேந்தன் தேவியே, பாவியேன் யாதுமறியேன்; எனினும் ‘அல்லவை செய்தார்க்கு அறம் கூற்றம்’” என்று பெரியார் சொல்வது பழுதாகுமா?

> ‘பிறர்க்கின்னா முற்பகல் செய்யின், தமக்கின்னா
> பிற்பகல் தாமே வரும்’

என்பது பொய்யா மொழியல்லவா? நான் பத்தினி; நான் பிறந்த புகார் நகரம், பத்தினிப் பெண்டிருக்குப் புகழ்பெற்றது. அவருள் ஒரு பத்தினிக்கு வன்னி மரமும், மடைப்பள்ளியும் சாட்சி கூறின. ‘பொன்னிக் கரையிலுள்ள மணற்பாவையே நின்கணவனாம்’ என்று மாதர் உரை செய்ய, திரைவந்து அப்

பாவையை அழியாது காத்து நின்றாள் ஓர் உத்தமி. எமது கரிகால்வளவன் மகள் 'ஆதி மந்தி' யென்பாள், இசைப் புலமை வாய்ந்தவள்; அவள் ஆடல்பாடல் களில் பெரும் புலமை வாய்ந்த 'ஆட்டனத்தி' என்ற வஞ்சிக்கோனை மணந்தாள். ஒரு நாள், கணவனைக் காவிரி வெள்ளம் கொண்டுபோனது. ஆதிமந்தியும் கணவனைத் தேடிச்சென்று கடற்கரையில் 'கல்போன்ற தோளுடைய எனது வீரக்கணவா!' என்று கூவி நின்றாள். அவளது கற்பின் பெருமை கடல்கொண்ட நாயகனைக் கரையில் நிறுத்தியது. ஆதிமந்தியார், தமது கணவனைக் கண்டு தழுவி அவனுடன் பொற் கொடிபோலச் சென்றாள். மற்றொரு பத்தினி, பொருள் தேடத் திரைகடலோடிய கணவன், கலமோட்டி மீளு மட்டும் கல்லாயிருந்து, அவன் வந்தபிறகே கல்லுரு நீங்கி உயிர்த்தெழுந்தாள். மற்றொரு வேல்விழியாள், தனது மாற்றாள் குழந்தை கிணற்றில் விழவே, தனது குழந்தையையும் அதிற்போட்டு, இரண்டையும் எடுத் துக் காத்தாள். மற்றொரு பூம்பாவை, வெளியே சென்ற தனது கணவன் வருமட்டும், தன் அழகு பிறரை வசீ கரிக்க முடியாதபடி குரங்குமுகங் கொண்டிருந்து, நாய கனைக் கண்டபிறகு இயல் முகங்கொண்டாள். இளம் பருவ விளையாட்டில், 'எனக்குப் பிறக்கும் மகளுக்கு, நீ பெறும் மகன் கணவனாகுக' என்று இரண்டு கன் னியர் பேசிக் கொண்டனர். அவ்வாறே மக்களைப் பெற்றனர். தமது தாய்மார் செய்து கொண்ட விளை யாட்டுத் தீர்மானத்தைக் கேட்டதும், இரண்டு மக் களும் காதல் கொண்டனர். பெண் குழந்தை கோடி

யுடுத்துக் குழல் முடித்துத் தனது நாயகனுக்குத் தலை வணங்கினாள்.

இவ்வாறு பல பத்தினியர் போந்த ஊரிற் பிறந்தவள் யான். யானும் பத்தினி என்பது உண்மையானால் சும்மா விடமாட்டேன்; பழிவாங்குவேன்; அரசோடு மதுரையை ஒழிப்பேன். எனது கணவனுக்கு உனது கணவன் செய்த வஞ்சத்தால் என்ன விளையு மென்று நீ காண்பாய்!" என்று சினத்தீ கொதித்து வெளியே சென்றாள் கண்ணகி. இவ்வுரைகளைக் கேட்கு முன்பே கோப்பெருந்தேவி, தன்னுயிர் கொண்டு கணவன் உயிரைத் தேடுவாள்போல உடல் நீத்தாள்.



## ௪௫. கண்ணகியின் கற்புக் கனல்

கண்ணகி வீராவேச முற்றாள்! மதுரை நகரா ரிடம் இவ்வாறு சபதங் கூறி நின்றாள் :—

" நான்மாடக் கூடல் மகளிரும் மைந்தரும்
வானக் கடவுளரும், மாதவரும், கேட்டீமின் :
யானமர் காதலன் தன்னைத் தவறிழைத்த
கோநகர் சீறினேன் ; குற்றமிலேன் யான்" என்(று)
இடமுலை கையால் திருகி, மதுரை
வலமுறை மும்முறை வாரா, அலமந்து,
மட்டார் மறுகின், மணிமுலையை வட்டித்து
விட்டாள் எறிந்தாள் விளங்கிழையாள் !

" மதுரையிலுள்ள ஆண்பெண்கள், தேவர், முனிவர் அனைவரும் கேளுங்கள் :—எனது ஆருயிர்க் காதலனைப் பொய்க் குற்றஞ்சாட்டிப் படுகொலைபுரிந்தது இந்நகர் மன்னன் அநீதி. அத்தகைய அக்கிரமம் நடந்த இவ்வூரின் மேல் சீற்றங்கொண்டேன் ; என் மேற் பிழையில்லை ; இங்கே நடந்த அதர்மமே மதுரையை இதோ எரிக்கிறது பாருங்கள்" என்று கூவினாள் ; சபதம் கூறினாள் ; இடமுலையைக் கையால் திருகி, மூன்று தடவை மதுரையை வலம் வந்து, ஒரு வீதியில் சுற்றி எறிந்தாள். உடனே நீலமேனியும், செஞ்சடையும், பால்வெண் பல்லும் பார்ப்பனக் கோலமுங் கொண்டு தோன்றினான் அக்கினித்தேவன். " அம்மா, மஹா பதிவிரதையான உனக்குப் பிழைசெய்த நாளில், இவ்வூரை எரிக்க வேண்டுமென்ற ஒரு கட்டளை

முன்னே எனக் கேற்பட்டுள்ளது. சொல் ; ஊர்முழு தும் எரித்துச் சாம்பலாக்கட்டுமா ? அன்றேல், யாராயினும் தப்பிப் பிழைக்க வேண்டுமா ?" என்று அவன் வினவினான்.

" பார்ப்பார், அறவோர், பசுப்பத் தினிப்பெண்டிர்,
மூத்தோர், குழவியெனும் இவரைக்கை விட்டுத்
தீத்திறந்தார் பக்கமே சேர்க !"

என்று ஏவினாள் சினங்கொண்ட வீரபத்தினி. அக் கணமே மதுரை தீப்பற்றி யெரிந்தது.



# சஎ. சூழ்தே தீ!

அரசர் பெருமான், போர்த்திறல் மிக்க செழியன், உயிரினும் அறத்தையே உயர்வென மதித்தான். தனது நீதி கோடியது; அதற்குத் தன் உயிரையே பலி கொடுத்துச் செங்கோன்மையின் பண்பை உலகிற்கு விளக்கினன். மன்னறம் பிழைத்ததும், தான் அமர்ந்து அறந்தாங்கிய அரியணையினின்றே வீழ்ந்திறந்தான். 'அறமே அரசனுக்கு உயிர்; அதை நிலைநாட்டலே அரியணை; அப்புகழே பொன்முடி. அறமிழந்தால் அரசனுக்கு உயிரில்லை; அரியணை வகிக்க உரிமையில்லை' என்று விளக்கினன் பாண்டியன். ஆருயிர்க் கணவனையிழந்து, ஒருகணமும் வாழா உத்தமியான கோப்பெருந்தேவி, அக்கணமே உயிர் நீங்கிக் கற்பின் திறமையை உலகிற்கு விளக்கினள். இஃதறியாமல், ஆசான், கணித் தலைவன், அறக்களத் தந்தணர், அரசிறை அதிகாரிகள், மந்திரக் கணக்கர், அரண்மனை மக்கள், மகளிர் அனைவரும் சித்திரத் திரள்போலப் பேச்சற்றிருந்தனர். தேர்வீரர், யானைவீரர், குதிரை வீரர், காலாட்களான மறவர் முதலியோர் தீயணைக்க வந்து நெருங்கினர்.

## வருணப் பூதங்கள்

மதுரையை நான்கு வருணப்பூதங்கள் காத்து வந்தன:—அவற்றின் இயல்பைக் கேளுங்கள்:

(1) பிராமண பூதமாகிய அதிபதிக் கடவுள், வெண்ணிலா மேனியன்; முத்தணியன்; வெண்டாமரை, நந்தியாவட்டம் இவைமுடிந்த நன்னிறச் சென்னியன்;

நுண்பூவேலைசெய்த வெண்ணிற ஆடையன்; வாசனைச் சந்தனம் பூசிய மார்பன்; குடை, தண்டு, கமண்டலம், தருப்பை சமித்து இவை பிடித்த கையன்; பூணூல் மார்பினன்; வேத நாவினன்; பாலும் தேனும் கற்கண்டும் உண்டு தீம்புகை ஏற்போன்; முத்தீ வாழ்க்கையை முறைப்படி நடத்துவோன்; விதிப்படி வேள்வி புரிவோன்; தீர்த்தக் கரை, தேவர் கோயில், வேதமந்திரம் இவற்றில் இருப்போன்; இவனே ஆதிப்பூதமாவன்.

(2) அரச பூதமாகிய அருந்திறற் கடவுள், வென்றி வெங்கதிர் மேனியன்; ஏராளமான அணிமணிகளும் மகுடமும் பூண்டவன்; சண்பகம், கருவிளை, செங்கூந்தாளம், தாமரை, அல்லி, செங்கழுநீர் முதலிய மாலையன்; குங்கும மார்பினன்; செம்பட்டுடையினன்; பொற்கலத்தில் முல்லை அரும்புபோன்ற செந்நெலரிசிச் சாதம் ஏந்தி நற்சுவை யூண்கொள்வோன்; பவளச் செஞ்சுடர் திகழும் மேனியன்; உலகாளும் அரசனது முரசம், வெண்குடை, கவரி, நெடுங்கொடி, அங்குசம், வடிவேல், வடிகயிறு இவை பிடித்த கையினன்; தனது எண்ணருஞ் சிறப்பினால், பகை மன்னரை ஓட்டி, உலகைக் கைக்கொண்டு, செங்கோலோச்சி, கொடுந்தொழில் கடிந்து, கொற்றங்கொண்டு, தான் நாட்டிய புகழை வளர்த்து, நானிலம் புரப்பவன்; இவன் உலகெலாம் போற்றும் சிறப்புடைய காவற் கடவுளான திருமாலைப் போன்றவன் ஆவன்.

(3) வணிக பூதமாகிய வியன்பெருங் கடவுள், செந்நிறப் பசும்பொன் மேனியன்; மகுடந் தவிர மற்ற அணிகள் பூண்டோன்; தனவணிகர் மரபால் விரிநிலம்

காப்பவன்; கலப்பையும், தராசும் ஏந்திய கையன்; பொன்னிற வுடையினன்; வெட்சி, தாழை, ஆம்பல், சேடல், நெய்தல், பூளை, மருதம், இவை சேர்த்து முடித்த சென்னியன்; பொன்போன்ற சந்தனமும், மின்போன்ற பூணூலும் மேவிய மார்பன்; கொள்ளு, பயறு, துவரை, உழுந்து முதலிய கூலவகைகள் சேர்த்து அன்பர் நிவேதிக்கும் உணவை யுண்போன்; நெல்லுடைக்களன், புள்ளுடைக் கழனி, வணிகர் கடைத்தெரு, ஆற்றுப் பூவரசுநிழல் இவற்றில் இருப்போன்; பயிர்த் தொழிலாலும், வாணிபத்தாலும், நிலம், மலை, கடற்செல்வங்களாலும் வந்த பயனைக் கொணர்ந்து, வேண்டுவோர்க்கு அளிப்பவன்; உழவுத் தொழிலுதவும் மாசற்ற வாழ்வுடைக் கிழவோன்; இவன் பிறை சூடிய கடவுள் வடிவாய் விளங்குவோன் ஆவன்.

(4) வேளாண் பூதமாகிய பூதத் தலைவன்; நீலமணி போன்ற மேனியன்; பொன் வெள்ளிப் பூணினன்; ஒள்ளிய கருமை சேர்ந்த ஆடையன்; அகிலும் சாந்தும் புலர்ந்து அகன்ற மார்பினன்; கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ இவற்றைப் புனைந்த சென்னியன்; கம்மியர் செய்யும் கலப்பையேந்திச் செம்மையாக வரும் சிறப்பினன்; ஆடல், பாடல்களுக்கமைந்த பல துறைகளிற் பொருந்தி, மதுரைவாசிகள் அளிக்கும் பலியை ஏற்பவனுவன்.

'கோமுறை பிழைத்த நாளில் இம்மதுரை தீ மூண்டழியும் நியாயத்தை நாம் அறிந்துளோம். ஆதலின் நாமும் நகரை விட்டுப்போதல் முறையே' என்று

மேற்சொன்ன நான்கு வருணப் பூதங்களும், கண்ணகி முன்பு, ஊரைவிட்டுத் தத்தமக்கு உரிய இடங்களுக் கேகின. கூலவீதி மக்களும், கொடித்தேர் வீதி மக்க ளும். நால் வருணத்தெரு மக்களும், அனுமக்கொடி யுயர்த்த அருச்சுனன் காண்டாவனத்தைக் கொளுத் திய நாளைப்போலக் கலங்கினர். காட்டுத் தீபோல நக ரிற் பற்றிய தீ எரிந்தது. அது அறவோர் தெருவில் பரவாமல், மறவோர் சேரி மயங்கவே மண்டியெரிந் தது. கனலெரி நெருங்கியது; அதனால் தீங்குறாமல் பசுக்களும் கன்றுகளும், அறம் வழுவாத ஆயர் தெரு வைச் சேர்ந்தன. மறவெங்களிறும், மடப்பிடிக்கூட்ட மும், விரைந்தோடுங் குதிரைகளும் மதிலுக்கப்புறம் ஓடித் தப்பின. பூவும் சாந்தும் புனைந்து, பள்ளியறையி லிருந்த மைந்தரும், மைத்தடங் கண்ணியரும், உச்சி யில் முடித்த பூக்கள் சிந்த, மார்பிலணிந்த மாலை குலைய, புலவி நுணுக்கம் பாராமல் காமக்களியாட்ட மடங்கி, அலங்கோலமாகப் புறப்பட்டனர். பூங்குழல் மாதர், பஞ்சணையில் தூங்கிய குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வரை எழுப்பி, மாமியார், பாட்டி, மாமி முதலிய முதியோருடன் உய்விடம் தேடிச்சென்றனர்.

கண்ணகி சினத்தைப்பற்றி ஊரில் பலவாறு பேசி னர்; சிலர் ' இது கொடுமை ' யென்றனர் ; சிலர் ' அன்று ' என்றனர். வரும் விருந்தை உபசரித்து, மனையறங்காக்கும் பத்தினிப் பெண்டிர் மிக்க மகிழ்ச்சி யுடன் " தனது மணி மார்பனையும் கணவனை, அரசன் கொல்லச் சொன்னது சரியல்ல ; அவன் மேல் வஞ்சத் தட்டான் சாற்றிய திருட்டுக் குற்றம் பொய் ; கண்

ணகி, தனது சிலம்பால் அரசனை வென்றாள்; தனது கணவன் குற்றமற்றவன் என்று விளக்கினாள். பிறகு கொங்கையைப் பறித்தெறிந்து, போர் விளைத்தாள்; அது கொடிதல்ல; நியாயமே" என்று தீக்கடவுளை வணங்கி யேத்தினர். அறுபத்து நான்கு கலைபயின்ற கணிகையர் வாழும் தெருவில் முழங்கிய தண்ணுமை, முழவம், சன்னத் தீங்குழல், பண்பல வழங்கும் இசையாழ் எல்லாம் நின்றன; நாடகமடந்தையர் ஆடரங்கிழந்து, "இந்நாட்டில் புதிதாக வந்து, கணவனை இழந்து, ஆராய்ச்சியின்றித் தவறிழைத்த மன்னனைச் சிலம்பினால் வென்று, இவ்வூரைத் தீ மூட்டிய இந்த ஒப்பற்ற வீர பத்தினி, எந்த நாட்டினளோ? யார் மகளோ? என்று வியந்து வினவினர். மதுரையில் வழக்கமாய் நடக்கும் அந்தித் திருவிழாக்கள் நின்றன; வேதவோசை அடங்கியது; தீ வேட்டல், தேவாராதனம் முதலிய புண்ணிய வினைகள் ஒழிந்தன; மனைகளில் விளக்கில்லை; மாலை வழிபாடில்லை; அரசர் மனையில் முரசொலி அயர்ந்தது; இவ்வாறு மதுரை மடிந்து பாழ்பட்டது. கணவனையிழந்த துயரால், உள்ளம் கொதித்து, உலைபோல் உயிர்த்து, கண்ணகி, பெரிய தெருக்களில் சுற்றித்திரிந்தாள்; சிறிய தெருக்களிலும் சென்றாள்; மயங்கினாள்; இயங்கினாள்.



# ௪௮. மதுராபதியின் கட்டுரை



ஒரு முலை குறைத்து, திருமுகம் அலமரும் திருமா பத்தினிமுன், மதுராபதி தோன்றினாள்; அவள் கொற்கைத் தலைவனும், குமரித்துறைவனும், பொற்கோட்டுவரம்பனும், பொதிகையுடையானுமாகிய பாண்டியன் குலமுதற் கிழத்தியாவள். அத்தேவதை பிறைச்சடைச்சி, குவளைவிழியாள், தவளவாண்முகத்தி, வீரப்பல்லையுடைய பவளச் செய்வாய்ச்சி, முத்தொளிர் நகைத்தி, இடப்புறம் நீலமும், வலப்புறம் பொன்னிறமுங் கொண்ட மேனியள். இடைக்கையில் பொற்றாமரையும், வலக்கையில் சுடரும் கொடு வாளும் (மழு) கொண்டவள்; வலக்காலில் வீரக்கழலும், இடக்காலில் ஒரு சிலம்பும் ஒலிக்கப்பெற்றவள். அத்தேவதை, கண்ணகியின் எதிரே நில்லாமல், பின்னே நின்று கொண்டு, “நங்காய், நீ வாழி! என் குறையைக் கேட்டருள்” என்றாள். கண்ணகி தனது வாடிய திருமுகத்தை வலப்புறம் சாய்த்து, “என்பின் வரும் நீ யார்? நான்படும் துயரை நீ யறிதியோ?” என்று வினவினாள்.

உடனே மதுராபதி நீண்ட கட்டுரை கூறினாள்: “அணியிழாய், உனது துயரின் காரணம் அறிந்தேன். நான் இம்மதுரையைக் காக்கும் மதுராபதியாவேன்; உனக்கு ஓர் உண்மை சொல்வேன்; உன் கணவனிடம் கவற்சிமிக்கேன். பெருந்தகைப் பைந்தொடியே, எனது நெஞ்சம் வருந்திப் புலம்பும் துயரைக்கேளாய்: எங் கோமகனான பாண்டியனுக்கு, இந்த ஊழ்வினை

வந்த வகையும் சொல்வேன் ; உனது கணவனுக்குத் தீமை வந்த ஊழ்வினைப் பயனையும் கேளாய்.

இம்மதுரையில், மறைநாவோசையே கேட்கும் நான், ஆராய்ச்சி மணி நாவோசை கேட்டறியேன். பாண்டியன், தனக்கு வணங்காப்பகைவரை யல்லது, தனது குடிகளைப் பழிதூற்ருன் ; நெஞ்சாகிய இளம் யானை, மாதர் நோக்கிஞல், கல்வியென்னும் பாகன் கைக்கு அடங்காது மதங்கொள்ளும் ; அது கட்டுக்கு மீறிய காமமுற்றாலும், பாண்டியர் ஒழுக்கந்தவறி நடந்ததில்லை. அவர் அத்தகைய சிறந்த குடிப்பிறந் தோராவர்.

ஒரு நாள், கீரந்தை என்னும் ஏழை அந்தணன் காசியாத்திரை புறப்பட்டான். அவன் மனைவி கலங்கிஞள். “ அஞ்சற்க ; அரசன் நீதி உன் னைக் காக்கும். அதனினும் அரிய காப்பில்லை ” என்று மனைவியைத் தேற்றிச் சென்ருன் அந்த ணன். நகர் சோதனைக்கு வந்த மன்னன் இம்மொழி கேட்டு, அவ்வீட்டை அந்த அம்மாள் அறியாமலே பாதுகாத்து வந்தான். சில மாதங்கள் இவ்வாறு சென் றன ; ஒருநாள், அவ்வீட்டினுள் பேச்சுச் சத்தம் கேட்டு, காவலன், கதவைத் தட்டிஞன். யாரோ கள்வன் என்று அந்தணன் ஐயுற்ருன்; “ அன்று அரச நீதியாகிய குற்றமற்ற வேலி உன்னைக் காக்கும் என்று சென்றீர்; இன்றும் அது நம்மைக் காவாதோ?” என்ருள் மனைவி. எனினும் மறுநாள், அந்தணன் மன்னனிடம் ‘ யாரோ கள்வன், நேற்று என் வீட் டைத் தட்டிஞன் ’ என்று முறையிட்டான். ‘இதோ அக்

கள்வனைத் தண்டிக்கிறேன்' என்று உள்ளேசென்று கதவைத் தட்டிய கையை வெட்டி வந்து காட்டினான் பாண்டியன். ஆ! அது வச்சிராயுத மேந்திய இந்திரன் முடியில் வளையுடைத்த கை! குடிகள் தமது அருமை மன்னனுக்குப் பொற்கை சூட்டினர். அத்தகைய நிறைவான செங்கோல் தாங்கும் கொற்ற மன்னர் மரபில் வந்த இம்மன்னன் மாசற்றவன். மற்றும் கேளாய்: பாரதப் போரில், பாண்டவ - கௌரவ சேனைகளுக்குப் பெருஞ் சோறளித்தவன் உதியன் சேரலாதன். அவன் மரபில் வந்த மாந்திரஞ் சேரல், அறமும் திருவும் ஆற்றலும் ஈகையும் மிக்கவன். அறச்செங்கோலும், மறவலியும் கொண்டு பசுவுக்கும் நீதி செய்த நடுநிலையாளனை புகார் வேந்தன் ஆளும் சோழ நாட்டினின்றும், கல்வி கேள்விவல்ல பராசரன் என்னும் அந்தணன் சேரமானுடைய கொடைத்திறங்கேட்டு, காடும் நாடும், ஊரும் கடந்து, பொதிய மலையைத் தாண்டிச் சென்று, வஞ்சி நகரை அடைந்தான். அங்கே நான் மறைமுற்றி, முத்தீ வளர்த்து, ஐம்பெரு வேள்வியும், அறுதொழிலும் காக்கும் இருபிறப்பாளரான அந்தணரை வாதில் வென்று வாகை சூடி, சேரன் ஈந்த பெரும் பரிசுகளைப் பெற்றுத் தன் ஊருக்குத் திரும்பினான்.

வரும்வழியில் அவ்வந்தணன் தென்னன் செங்கோன்மையிலுள்ள திருத்தங்காலூரில் இருந்த போதி மன்றத்தில், தண்டு, கமண்டலம், வெண்குடை, சமித்து,

சாமான் மூட்டைகள் அனைத்தையும் இறக்கி, இளைப் பாறினான். அப்போது, வெண் கொற்றக் குடை யுயர்த்த விறலோன், கடற்கடம் பெறிந்த காவலன், இமயமலை மேல் விற்கொடி பொறித்தவன், பொருநை நதியுடைய பொறையனை மாந்தரஞ் சேரனை வாழ்த் திக்கொண்டிருந்தான். அச்சமயம் அங்கு விளையாடிக் கொண்டிருந்த பிரமசரியச் சிறுவரெல்லாம் அவனைச் சூழ்ந்தனர். அவர்களைப் பார்த்துப் பராசரன் "பிரா மணப்பிள்ளைகளா, நான் கேட்ட சுருதியை என்னோடு சரியாக ஓதினால், இந்தச் சாமான் மூட்டையை நீங்கள் எடுத்துச் செல்லலாம்" என்றான். அச்சிறுவருள் வார்த்திகன் மகன் தக்ஷிணாமூர்த்தி என்பவன், மற்றப் பிரமசாரிகள் முன்னே, பராசரன் கேட்ட சுருதியை மகிழ்வுடன், தெளிவாகச் சொன்னான். பராசரன் வியந்தான்; அச்சிறுனுக்கு, முத்துப்பூணூல், விலைபெற்ற பூண்கள், கடகம், தோடு, பொருள் எல்லாம் பரிசளித் துத் தன்னூர் போய்ச் சேர்ந்தான்.

தக்ஷிணாமூர்த்தி பெற்ற பரிசுப் பொருள்களைக் கண்டு, சில அரசசேவகர் பொறாமைப்பட்டனர்; திருட் டுக் குற்றம் சாற்றி, அவன் தந்தை வார்த்திகனைச் சிறை யிட்டனர். அவன் மனைவி, இந்த அநியாயத்தைப் பொறாது, நிலத்திற் புரண்டழுதாள். ஓர் உத்தமி மனம் வருந்திக் கண்ணீர் வடித்தழுதலால், அவ்வூர்க் காளிகோயிற் கதவு திறவாமற் போயிற்று; இதைக் கேட்டான் பாண்டியன்; "என்னரசில் ஏதாயினும் அநீதி நடந்ததோ? காளிக்கு நேர்ந்த அபசாரம் என்ன?" என்று விசாரித்தான். அப்போது, ஏவலர்

வார்த்திகனுக்கு நிகழ்ந்ததை அப்படியே யுரைத்தனர். அரசன் விசாரித்து உண்மையறிந்து, இந்த உத்தமனைச் சிறையிட்டது பிசகு என்று வார்த்திகனை விடுவித்தான். "இந்த அறியா மாக்களால் எனது நீதி கோடியது; அடிகள் இதைப் பொறுத்தருளுக!" என்று திருத்தங் காலுடன் விளைவேயாங்கும் வயலூரும் அளித்து நிலத்தில் மார்பு தோய வணங்கி, அந்த வேதியனை அனுப்பினான். உடனே காளிகோயில் திறந்தது;

சிறைப்படு கோட்டம் சீமின் யாவதும்
கறைப்படு மாக்கள் *கறைவீடு செய்ம்மின்
இடுபொரு ளாயினும் படுபொரு ளாயினும்
உற்றவர்க் குறுதி பெற்றவர்க் காமே!

(சிறைகளைத் தூய்மையாக்குமின்; எதாயினும் குற்றஞ் செய்தோர் அக்குற்றம் நீங்கி மாசறச்செய்மின். பிறர்தந்த பொருள், தாம் கண்டெடுத்த, அல்லது சம்பாதித்த பொருள் இவை எடுத்தவர்க்கும் கொண்டவர்க்குமே உரிமையாம்.)

என யானைமீது முரசேற்றிக் கோன்முறை யறைந்தான்.

'ஆடித்திங்கள், கிருஷ்ணபக்ஷம், கார்த்திகை பரணியுடன் கூடிய வெள்ளிக்கிழமை அஷ்டமி திதியில், எரியுண்ணவே, புகழ்பெற்ற மதுரையுடன் அரசும் கேடுறும்' என்றொரு சோதிடமொழியுண்டு; அதனாலே தான் அரசும் மதுரையும் இவ்வா றழிந்தன.

இனி உன்கணவன் வினைப்பயனைக் காண்பாயாக: கலிங்க நாட்டில் வசு, குமரன் என்னும் இரண்டு வேந்

* தூய்மையாக்கல்.

தர் இருந்தனர். வசு சிங்கபுரத்தரசன் ; குமரன் கபில புரத்தரசன். இருவரும் தாயவேந்தர்; தம்முட்பகைத்து, தமது அரசினின்றும் ஆறு காதத்திற்கிடையே ஒரு வரையொருவர் வெல்லப் போர் புரிந்தனர். ஒருவர் எல்லையில் மற்றொருவர் ஆட்கள் செல்வதில்லை ; சென் றால் தண்டனை ஏற்படும். ஒருநாள், 'சங்கமன்' என்ற தனவணிகன், தனது காதலி நீலியுடன், அணிகலன் கொண்டு, சிங்கபுரக் கடைத்தெருவில் விலைகூறினான். 'பரதன்' என்னும் அரசசேவகன், சங்கமனைக் கைது செய்து, "இவன் நமது பகையரசின் ஒற்றன்" என்று பொய்ப்பழி சுமத்தி, அரசன் முன்னிலையில் நிறுத்தினான் ; ஒற்றனைக் கொலை செய்யும்படி அரசன் ஆணை பிறந்தது. பரதன் சூழ்ச்சியால் சங்கமன் கொலையுண்டான். அவன் மனைவி நீலி, "ஐயோ இப் படியுண்டா அநீதி, என்கணவன் ஒற்றனல்லன் ; நகை விற்க வந்த சாதுவணிகன் ; அவனை அநியாயமாகக் கொன்றீரே ! அந்தோ !

> அரசர் முறையோ ! பரதர் முறையோ !
> ஊரீர் முறையோ ! சேரியீர் முறையோ !

என்று அரசமன்றிலும், ஊர்மருங்கிலும் அலறி முறை யிட்டாள். பதினான்கு நாட்கள் சென்றபின், ஒரு மலையுச்சி மீதேறி,

> 'எம்முறு துயரஞ் செய்தோ ரியாவதுந்
> தம்முறு துயரமிற் றாகுக!'

எமக்கு இத்துயர் செய்தவர், இதே துன்பத்தை அனுபவிக்கக் கடவர்" என்று சபித்து உயிர் நீத்து

விண்ணுலகிற் கேகிக் கணவன் ஆவியைக் கூடினாள். அவள் இட்ட சாபம் கிட்டியது. பரதனே கோவலனாகப் பிறந்து தான் செய்த வினையை அனுபவித்தான்.

> உம்மை வினைவந் துருத்த காலைச்
> செம்மையி லோர்க்குச் செய்தவ முதவாது.

இன்றிருந்து பதினான்காவது நாள் மாலையில், நீயும் உன் கணவனை, வானவர் வடிவில் (மானிட வடிவிலல்ல) கண்டு கூடுவாய்" என்று தெய்வமா பத்தினிக்கு மதுரைமாத் தெய்வம் சொல்லி மறைந்தது.

> "கருத்துறு கணவன் கண்டபின் அல்லது
> இருத்தலு மில்லேன், நிற்றலு மிலனே"

என்று, கண்ணகி, துர்க்கை கோயில் வாசலில் தனது கைவளைகளைத் தகர்த்தாள்.

> "கீழ்த்திசை வாயிற் கணவனொடு புகுந்தேன்;
> மேற்றிசை வாயில் வறியேன் பெயர்க!"

என்று மதுரை மேற்கு வாசல் வழியாகத் தனி வழி சென்றாள். இரவு பகலின்றி, மேடுபள்ளம் பாராமல், வைகைக் கரைவழியே மேற்கு நோக்கி நடந்து, கடல் வயிறு கிழித்து, மலைநெஞ்சுபிளந்து, அவுணரைக் காய்ந்த சுடர்வடிவேலவன் வைகும் நெடுவேள் குன்றம் என்னும் திருச்செங்கோட்டு மலைமே லேறினாள்.

*மதுரைக் காண்டம் முற்றிற்று*



# III. வஞ்சிக் காண்டம்

## சகூ. கண்ணகி விண் செல்லல்

"தெய்வந் தொழாஅள், கொழுநற் றொழுவாளைத்
தெய்வந் தொழுதகைமை திண்ணிதால்—தெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி,
விண்ணக மாதர்க்கு விருந்து.


**வே**ங்கை நிழலில் விளங்கிய வீரபத்தினியை அக் குன்றில் வாழும் குறவர் கண்டு, "அம்மையே, நாங்கள் தினைப்புனத்தில் வரும் குருவிகளையோட்டுவோம்; கிளிகளை விரட்டுவோம்; அருவியாடுவோம்; சுனையில் துளைவோம்; இதனால் அயர்ந்துவரும் எங்கள் முன்னே, எங்கள் மனம் வியப்பினால் நடுநடுங்க, இந்த மலைவேங்கை நறு நிழலில் முலையிழந்து நின்றீர். பார்த்தால் வள்ளியம்மை போலிருக்கிறீர். தாங்கள் யார்?" என்று வினவினர்.

கண்ணகி அவ்வாறு அவர்கள் கேட்டதற்கு வெறுப்புக் கொள்ளாமல் "மணமதுரை, அரசுடன் அழிய, வல்வினைப் பயனாக வந்து, அங்கே கணவனையிழந்து, அத்துயரால் இங்குற்ற கடுவினையேன் யான்" என்றமைதியாக மறுமொழி கூறினாள். குறவர் அதைக் கேட்டு அஞ்சி யிறைஞ்சி, கண்ணகியை வணங்கி நின்றபோது, கோவலன் திவ்ய சரீரத்துடன்

தோன்றினான்; கண்ணகி அவனைத் தொழுது வாழ்த்தினாள். "வீரபத்தினி வாழ்க !" என்று தேவர் மலர் மாரி பொழிந்தனர். கண்ணகி, கோவலனுடன் விமான மேறி விண்ணுலகிற் கேகினாள்.

குறவர் ஆவேச பக்தியுடன், "சிறு குடியீரே, சிறுகுடியீரே, இவளைப் போன்ற ஒரு தெய்வம் நம் குலத்திற்கு வேறில்லை. வானவிற்போலப் பல நிறங் கிளரும் அருவியாயும் நெடுவேள் குன்றில், ஓங்கும் இந்த வேங்கை மர நிழலில், இப்பத்தினியை ஒருதெய்வ மாகப் பாவித்துக் கொள்ளுங்கள். குறிஞ்சிப் பறை கொட்டுங்கள் ! சிறுபறை முழக்குங்கள் ! கொம்பூதுங் கள் ! கனத்த ஓசையுடைய மணியை அடியுங்கள் ! குறிஞ்சிப்பாட்டுப் பாடுங்கள்! நறும்புகை காட்டுங்கள் ! மலரணி செய்யுங்கள் ! சுற்றிலும் மதிலெழுப்பி வாயி லமையுங்கள் ! கோயிலமையுங்கள். ஒரு முலையிழந்த நங் கைக்கு இப்பெருமலை வற்று வளஞ்சுரக்க வென்று பூப்பலி செய்யுங்கள் " என்று பத்தினியை வணங்கினர்.



## ௩௦. குன்றக் குரவை



இதன் பிறகு குறவர்கள் குரவையாடினர் :

ஆங்கொன்று காணாய் அணியிழாய் ஈங்கிதுகாண்,
அஞ்சனப் பூழி அரிதாரத் தின்னிடியற்
சிந்துரச் சுண்ணஞ் செறியத் தூய்த் தேங்கமழ்ந்(து)
இந்திர வில்லின் எழில்கொண் டிழுமென்று,
வந்தீங் கிழியு மலையருவி யாடுதுமே...
ஆடுதுமே தோழி, ஆடுதுமே தோழி!
அஞ்சலோம் பென்று நலனுண்டு நல்காதான்
மஞ்சுசூழ் சோலை மலையருவி யாடுதுமே!

அணியிழாய், அஞ்சனப் பூதி, அரிதாரத்தின் இடியல், சிந்துரச் சுண்ணம் இவற்றை நெருங்கத் தூவி மணங்கமழ்ந்து, இந்திரவில்லின் அழகுடன் 'இழும்' என்று பாயும் மலையருவியில் நீராடுவோம் வா, தோழி! 'அஞ்சாதே' என்று சொல்லித் தேற்றாமல், நமது பெண்மை நலத்தை நுகர்ந்து தலையளி செய்யாமல், பராமுகமா யிருக்கிறான் தலைவன். இது அவனுடைய புயல் சூழும் சோலையருவி. ஆயினும் அதில் நீராடுவோம் வா தோழி!

மாதே! மை விழி சிவப்ப, அருவியாடிய பின், முருகன் வேலினை ஏத்தி நாம் குரவை யாடுவோம். திருச்செந்தூர், திருச்செங்கோடு, சுவாமி மலை, திருவேரகம்,— ஆகிய தலங்களில் நீங்காதுறையும் இறைவன், முன்னே விரி கடலுட் புகுந்து சூரனை ஒறுத்தான்; அவன் வேலை நாம் போற்றிப் புகழ்வோமாக!

அணிமுகங்கள் ஓராறும் ஈராறு கையும்
இணையின்றித் தானுடையான் ஏந்திய வேலன்றே
* பிணிமுகமேற் கொண்டவுணர் பீடழியும் வண்ணம்
மணிவிசும்பிற் கோனேத்த மாறட்ட வெள்வேலே !

*அழகிய ஆறு முகங்களும், பன்னிரு கரங்களும் நமது வேலனுக் கல்லாமல் வேறு எக் கடவுளுக்குண்டு ? இந்திரன் போற்ற மயிலேறி, அவுணர் செருக்கழித்த முருகன் வெள்வேலை ஏத்துவாம். அவன் சரவணப் பொய்கைத் தாமரையிலே ஆறு கார்த்திகைப் பெண்டிர் திருமுலைப்பால் உண்டான் ; மலையைச் சூழ்ந்துவரும் அரக்கன் மார்பைப் பிளந்து, கிரவுஞ்சகிரியை எறிந்தான். அக்குமரன் நெடுவேலை ஏத்துவாம் !*

*மகள், மலைநாடனைக் காதலித்து உடல் மெலிகிருள் ; அவள் விருப்பத்தை உணராமல், தாய் இது தெய்வ தோஷத்தால் உண்டானதென்று பூசாரி வேலனைக்கொண்டு வெறியாட்டயர்வித்து நீக்க முயலுகிருள். இதையறிந்த மகள் தோழியை நோக்கிச் சொல்லுகிருள் :*

சேறிவளைக்கை நல்லாய் இதுநகையா கின்றே
வெறிகமழ் வெற்பனேய் தீர்க்க வரும்வேலன்
வேலன் மடவன் அவனினுந் தான்மடவன்
ஆலமர் செல்வன் புதல்வன் வருமாயின்

*தோழீ ! இது சிரிப்பிற் கிடமாயிருக்கிறது. வெறிகமழ்வெற்பனுல் வந்த நோயைத் தீர்க்கப் பூசாரி வேலன் வருவானும். அவ்வேலன் அறிவில்லாதவன் !*

---

* *மயில்.*

வெறியாட்டால் உண்மையறியாமல், ஆலமர் செல்வ னுன சிவன் மகன் முருகன் வருவானேல், அப்பூசாரி யைப் பார்க்கிலும் அவன் அறிவில்லாதவனுவன். ஏனெனில், எனது நோய் மலைநாடன் வந்தாலே தீரும். வேலன் வெறியாட்டினுலும், முருகன் வெறிக்களம் வருவதனுலும் அது தீராது.

கைலைக் கிறைவன் மகனே, மதிநுதலும், மயில் போன்ற சாயலும் உடைய நினது மடவரல் வள்ளி யின் மலையிலுள்ள பெண்களாகிய யாம், அயல் மணத்தை (பிராசாபத்தியம்) விலக்கிப் பலர் அறிய மணம் நிகழுமாறு அருள்புரிய வேண்டுமென்று உனது அசோக மலர்போன்ற திருவடிகளைத் தொழுது நிற் போம்.

மலைமகள் மகனைநின் மதிநுதல் மடவரல்
குலமலை யுறைதரு குறவர்தம் மகளார்
நிலையுயர் கடவுள்நின் இணையடி தொழுதேம்
பலர்அறி மணமவர் படுகுவ ரெனவே

பார்வதி மகனே, உன்னுடைய மதிநுதற் பாவை யான வள்ளியின் குலமலைகளில் வாழும் குறவர் பெண்டிரான யாம், தலைவர், பலர் அறிய மணப்பதற்கு உடன்படுவாராகுக என்று உயர்நிலைக் கடவுளாகிய உன் இணையடிகளைத் தொழுதோம்.

ஆறுமுகனே, நீர்த்துறையில் நின்திருவடி தொழுது சூளுற்ற தலைவன், பிழைமணம் விட்டு, நன்மணம் பெறுவாராகுக வென்று எமது குலக்குற மகளான வள்ளியுடன் உன் இணையடி தொழுதோம்! என்று

நாம்பாட, மறைந்து நின்று கேட்டருளிச் சென்ற மலைநாடன் பின் சென்று, அவனடிதொழுது நின்று நானுரைத்ததைக் கேளாய் தோழீ !

தன்னைக் கண்டோர் முருகனென்று கருத வேண்டித் தலைமகன் கடம்புசூடி, வேலேந்தி, மடந்தையின் பொருட்டு இவ்வூருக்கு வருகிறான். இச்சிறு குடிமக்கள் மிகவும் அறிவில்லாதவர்கள். இக்கோலத்தில் முருகன் வருவான் என்பதை யறியார்கள். ஆதலால் அவர்கள், "ஆறுமுகமில்லை, அணிமயிலில்லை, வள்ளியில்லை, பன்னிரு தோளில்லை" என்று கூறித் தாம் முறைமையால் வழிபடுந் தெய்வமாக ஏற்றுக் கொள்ளார்.

இனி மாமலை வெற்பன் மணவணி வேண்டி, பலர் தொழும் பத்தினி, கண்ணகிக்கு, காதல் தலைவனை வானோர் காட்டிக் கொடுத்த தன்மையைப் பாடுவோம்.

பாடுகம் வாவாழி, தோழியாம் பாடுகம்
கோமுறை நீங்கக் கோடிமாடக் கூடலைத்
தீமுறை செய்தாளை யேத்தியாம் பாடுகம்
தீமுறை செய்தாளை யேத்தியாம் பாடுங்கால்,
மாமலை வெற்பன் மணவணி வேண்டுதுமே !

பத்தினிப் பெண்டிர் பரவித்தொழும் வீரபத்தினி, நமது பைம்புனத்தில் இருக்கிறாள். வானோர் அவள் கணவனை அவளிடம் உய்த்துக் கொடுத்தனர். இருவரும் விண்ணேறினர். அங்கே தேவர் அவர்களைத் தொழுதேத்துவர். இனி அவள் கணவனுடன் மண் வாழ்வுக்கு மீளாள் :

வானக வாழ்க்கை அமரர் தொழுதேத்தக்
கான நறுவேங்கைக் கீழாள்ஓர் காரிகையே
கானநறு வேங்கைக் கீழாள் கணவனொடும்
வானக வாழ்க்கை மறுதரவோ இல்லாளே!

*அப்படிப்பட்ட பத்தினியைத் துதித்துப் பாட இவ்வூரும் ஒரு விரதம் பெறுக!*

பெற்றி யுடையதே பெற்றி யுடையதே
பொற்றொடி மாதர் கணவன் மணங்காணப்
பெற்றி யுடையதிவ் வூர்

*பொற்றொடி மாதர் கலியாணக் கோலம் காணும் படியான பெருமையை யுடையது இவ்வூர்.*

*இவ்வாறு தலைவன் வரவிற்காகப் பாடி ஆடிய குரவையைக்கண்டு, முருகனருளால், நமது காதலர், கலியாணம் செய்ய இணங்கினார். கெடாத வீரபான மூண்டு மகிழ்ந்து, அவன் வில்லெழுதிய இமயத்துடன் குடவர் கோமானான சேரன், ஆறுவைகல் தொறும் வாழ்க!*



## ௫௧. சேரன் விருப்பம்



அருவி முழங்கும் அழகிய சேரநாட்டுமலை, மேகஞ் சூழ்ந்த சோலைவளம் பெற்றது ; திருமால் மார்பின் ஆரம்போன்று பேரியாற்றை யணிந்தது ; சந்தனம், கோங்கு, வேங்கை, கொன்றை, நாகம், மஞ்சாடி முதலிய மரங்கள் செழித்துப் புனலாற்றைப் பூவாருக்கிப் பொலிவது.

கடற் கடம் பெறிந்து, இமயமுடியில் விற் பொறித்த நெடுஞ் சேரலாதன் மகன் சேரன் செங் குட்டுவன், வேண்மாள், இளங்கோவடிகள், இம்மூவ ரும், சங்கப் புலவர் சாத்தனாருடன் மலைவளங்காண விரும்பி, வஞ்சி நகரில் தாம் அப்போதிருந்த யந்திர வாவி சூழும் சோலையை நீத்து, வானவர் மகளிரொடு, விளையாட்டு விரும்பி, இளமரக் காவும் அரங்கும் பள்ளி யும் ஒருங்கே பரப்பி ஐராவதத்தில் இந்திரன் பவனி வருவதுபோல, பேரியாற்றங்கரை மணற் குன்றில் வந்து தங்கினர்.

* * *

மலையில் ஓரிடம் குறவையாடினர் ; கொடிச்சியர் பாடினர்; மற்றோரிடம் வேலனுக்குப் பாணிமுழக்கினர். தினை குற்றுவார் வள்ளை பாடினர். தினைப்புனங்களில், கிளி முதலிய பறவைகளை வாட்டும் ஒலியும், குறவர் தேன் கூடுகளில் தேன் எடுக்கும் ஓசையும் கேட்டன. போர்ப்பறை போல, அருவி பயங்கரமாக முழக்கியது. புலியும் யானையும் பொருது உறுமின. பரண்மீதிருந்து புனங்காப்பார், ஆலோலத்துடன் புள்ளோட்டினர்.

குழியில் விழுந்த யானையை மேலெழுப்பிப் பாகர் ஒலித்தனர். இவ்வொலிகளுடன் சேரன் படையொலி யுஞ் சேர்ந்து, எங்கும் ஒலிமயமா யிருந்தது.

வஞ்சி முற்றத்தில், இவ்வளவென்று கணக்கிட முடியாத கலங்களில் வந்த பண்டங்கள் கலந்துகுவிந்து கிடக்கும். பகையரசர், திறைகொண்டு வந்து, சேர னுடைய தரிசனம் வாய்க்கப் பெறாமல், அந்த முற்றத் தில் காத்து நிற்பர். அவர்களைப் போல மன்னன் வரவு கேட்ட மலைக்குறவர், தமக்குரிய வளங்களைத் தலையிற் சுமந்து, அவன் சமூகத்திற்கு வந்தனர். அவர் காணிக்கையாகக் கொணர்ந்த பொருள்களாவன :— யானைத் தந்தம், அகிற்குவியல், வெண்சாமரை, தேன் குடங்கள், சந்தனக் கட்டைகள், சிந்தூரக்கட்டி, அஞ்சனத்திரள், அணி அரிதாரம், ஏலச்செடி, மிளகுக்கொடி, கூவைக்கிழங்கு, மா, செழிய கொடி வளர் கவலைக்கிழங்கு, தேங்காய், கரும்பு, இனிய மாங்கனி, பலாக்கனிகள், கமுகந்தாறு, பெரிய வாழைப்பழத் தாறு, வெள்ளுள்ளி, படலை மாலை, பூங் கொடிகள், ஆளிக்குட்டி, சிங்கக்குட்டி, புலிக்குட்டி, யானைக்குட்டி, கரடிக்குட்டி, குரங்குக்குட்டி, மலையில் திரியும் குறும்பாடு, மான்குட்டி, கஸ்தூரி மான்குட்டி, கீரிப்பிள்ளை, தோகைமயில், புனுகுப்பூனைக்குட்டி, கானக்கோழி, தேன்மொழிக்கிளி முதலியன. குறவர், இப்பொருட்களைத் தலைமிசை சுமந்துவந்து, காணிக்கையாக மன்னன் முன்வைத்து, "ஏழ்பிறப் பிற்கும் யாம் உனதடியேம்! உனது கொற்றம் வாழ்க!" என்று போற்றி அவனை வணங்கினர். பிறகு "இறைவ,

ஓர் ஆச்சரியம் :—இம்மலைமேலுள்ள அந்த வேங்கை நிழலில் ஒரு காரிகை நின்றாள்; அவள் ஒரு முலை யிழந்தவள். கணவனை யிழந்து துயருற்றவள். அவள் முன் அவள் கணவனுடன் தேவர் தோன்றினர். அவனுடன்கூடி அப்பத்தினி, வானவர் போற்ற விண்ணுலகடைந்தனள். அவள் எந்தநாட்டாள், யார் மகள் என்றறியோம். நினது நாட்டில் அத்தகைய மாதைக் கண்டறியோம். அவள் பல நூறாயிரம் ஆண்டு வாழ்க !" என்றனர். இச்செய்தியை, மதுரைத் தமிழாசார் சாத்தனார் கேட்டு வியந்து, உலகம் மகிழக் காக்கும் நெடுவேலனை சேரனிடம் கண்ணகிக் குற்ற தெல்லாம் சொன்னார்—" தீவினைச் சிலம்பின் காரண மாகக் கோவலன் கொலையுண்டது, தன் மற்றொரு சிலம்பைக் காட்டிப் பாண்டியன்முன் கண்ணகி வழக்குரைத்தது, தென்னவர் கோமான் பத்தினியின் துயர் பொறாமல் இறந்தது, 'மன்னன் செல்வுழிச் செல்க யான்' என்று பாண்டிமாதேவி, தன்னுயிர் கொண்டு கணவனுயிர் தேடினள்போல, பத்தினி யடியில் வீழ்ந்து மாய்ந்தது, கண்ணகி, வெஞ்சின மேறி, ஒரு கொங்கையைத் திருகி வீசி, மதுரையைத் தனது கற்புக் கனலினால் எரித்தது ஆகிய நிகழ்ச்சிகளை விளக்கி, கொடுங்கோலின் தன்மையும் பயனும் இது தான் என்று காட்டி, " நின்னாட்டிற்கு வந்தாள் அப் பத்தினி, நீ புண்ணியஞ் செய்தாய். இனி ஊழியூழி, வழிவழி நின் ஆட்சியும் வீரமும், வெற்றி பெற் றோங்கும்" என்று தன்னுரையை முடித்தார் மதுரைப் புலவர்.

தென்னவர்கோமான் இவ்வாறு இறந்ததைக் கேட்ட சேரன் மிகவும் வருந்தி, "தனது நீதிகோடியது என்று கேட்டதுமே பாண்டியன் உயிர்விட்டான்; தான் செம்மையின் இகந்த சொல் செவியிற்படா முன் பாண்டியன் உயிர், உடலைப் பிரிந்து விண்ணுலகிற்குச் சென்றது. பாண்டியன் தன் உயிரைக் கொடுத்து, வளைந்த செங்கோலை நிமிர்த்தினன். ஆ, காவல்தொழில் எளிதோ! மழைவளம் குன்றினும், மன்னுயிர் வருந்தினும், மிகப் பெரிய அச்சமுண்டாம். 'இவன் கொடுங்கோலன்' என்று உலகம் தூற்றுமல் மன்னன் அஞ்சி நடக்கவேண்டும். அவ்வாறு நற்குடிப் பிறந்த காவலர் கவனமாக, மன்னுயிரைக் காப்பர்; அரசாட்சி எல்லாரும் பணிந்து புகழும் தொழில் என்பதில்லை; அதில் துன்பமே மிகுதி" என்று கண்ணகிக்குற்ற துயரத்தைத் துணிந்துரைத்த நன்னூற்புலவருக்கு நன்றாகச் சொன்னான். பிறகு தனது பத்தினி வேண்மாளிடம் "கணவனுயிருடன் தன்னுயிரையும் கொண்டு சென்ற கோப்பெருந்தேவி, கணவனை யிழந்து, வஞ்சினந் தீர்த்து, இங்கே வருந்திவந்து மோட்சமடைந்த வீரபத்தினி—இவ்விருவருள், என் அரசி வியக்கும் உத்தமி யார்?" என்று கேட்டான். "கணவனுக்குற்ற துன்பம் பொறாது உயிர் நீத்த பாண்டிமாதேவி வானுலகில் பெருந்திருவுறுக! நமது நாட்டையடைந்த இந்தப் பத்தினிக்கடவுளை நாம் கொண்டாடவேண்டும்" என்றாள் அரசி. அதையே அரசனும் விரும்பித் தனது அமைச்சரை நோக்கினான்.

குறிப்புணர்ந்த அமைச்சர் "பத்தினிச்சிலை நாட்ட வேண்டும்; அதற்குப் பொதிகையில் கல்லெடுத்துக் காவேரியில் நீர்ப்படை செய்யலாம். அல்லது, இமயத்திற் கல்லெடுத்துக் கங்கையில் நீர்ப்படை செய்யலாம்" என்றனர். செங்குட்டுவன், "நெடுவாளேந்திய எமது வீர மரபிற்குப் பொதியிற் கற்கால் கொண்டு காவிரியில் நீர்ப்படை செய்தல் பெருமையன்று. சிறிய மயிர்ச்சடையும், அடிக்கடி நீராடுவதால் புலராவுடுக்கையும், முப்புரி நூலும், முத்தீ வளர் செல்வமும் கொண்ட அந்தணருடன் *மலையரசன் மாபெரும் பத்தினிக் கடவுளை யமைக்க ஒரு கல்லைத்தர மறுத்தால், அவனையே ஒரு கை பார்க்கிறேன். தனது முதுகுடிப்பிறந்த பார்வதியை, (தடாதகையை) மதிமுடி சூடிய பரமனுக்களித்த அம் மலையரசன் எனது ஏவலைச் செய்யானாகில், வடநாட்டுப் பகைவரைவென்று எனது பெருந்திறனைக் காட்டுவேன். இமயமலை நிலவுக்கதிர் அளைந்த நீள் முடியுடைத்து, மந்தாரையும், வேங்கையும் அங்கே தொடுத்த மாலைபோல் மேனி விளங்குகின்றன. அவை மலையக் காண்பேன். அதாவது, இமயமலையின் மலர்ச்சென்னி மலையக் கற்கொணர்வேன். நல்வேளையில் குடைகளைப் போர்முனைக் கனுப்பிப் போர்புரிவேன், பகைவர் நாட்டைக் கைக்கொள்வேன். வெற்றி பெற்றோங்கிச் சிறப்பேன். என் வீரர்களுக்குச் சலியாமல் களச்சோறு

*இவ்விடத்தில் அடிகள் கொள்ளும் பொருளே பொருந்தியதென்று தோன்றுகிறது.—திரு. வி. க.

கொடுப்பேன். கவிகள், என் வெற்றியைப் போற்றிப் பகைவர் வீழ்ச்சிக் கிரங்கிக் கொற்ற வள்ளை சூட்டுவர். அத்துடன் பகைவரைவென்ற பனந்தாரும் சேர்த்து, எனது படை வீரர் பொலியச் சூட்டுவேன். எனது வாள் குறிதப்பாதது. அதற்கு வஞ்சிமாலை சூட்டிப் பகைவனை எதிர்த்துப் புறப்படுவேன். எனது வல்லமையைக் காட்டிக் கல்லைக் கொணர்வேன்.

வில்வலன் கோதை என்னும் மந்திரி "மன்ன, இவ்வுலகில், நினது கொற்றம் பல்லாண்டு வாழ்க! முன்னே கொங்கர் செங்களத்தில் தோற்று, சோழன் புலிக் கொடியையும் பாண்டியன் கயற்கொடியையும் உனக்குத் தந்து ஓடினர். அந்தச் செய்தி திசையானைகளின் காதிற்கும் எட்டும்படி அவ்வளவு உலகப் பிரசித்தமானது. கொங்கர், கலிங்கர், கொடிய கருநாடர், வங்காளிகள், கங்கர் (கோலரில் ஆண்டவர்) பல சிற்றரசர் வடநாட்டு ஆரியர் இவர்களுடன் தமிழ்ப்படை கலந்த போது, நீ நின் யானையைவிட்டுப் பகைவரை வேட்டையாடிய காட்சி இன்னும் என் கண்களினின்றும் அகலாதிருக்கிறது.

எமது கோமகளும் உனது தாயுமாகிய நற்சோணையை நீ கங்கையில் நீராட்டிய நாளில், ஆயிரம் ஆரிய மன்னரை நீ ஒருவனாகநின்று வென்றகாட்சியை எமன் கண்விழித்துக் கண்டான். கடல்சூழ் உலகையெல்லாம் தமிழ் நாடாக்க வேண்டி இமயமலையிற் கற்கொள்ளக் கருதினால் உலகில் அவ்விருப்பத்தை எதிர்ப்பவர் யார் ? எமது மன்னன் இமயமலைக்குச் செல்வது போர்விருப்பத்துடனன்று; பத்தினிக்கல்லெடுப்

பதற்கே யாம். ஆதலால் வடதிசை மன்னர்க்கெல்லாம் தென்றமிழ்நாட்டு மூவேந்தரது முத்திரையாகிய வில், கயல், புலி இம்மூன்றையும் பொறித்த ஓலைகளை வரைந் தனுப்புக" என்றான்.

அழும்பில் வேள் என்னும் அமைச்சன், "பகைவர் ஒற்றர் நமது வஞ்சியில் இருப்பதால், அவரே இச் செய்தியைத் தமது அரசர்களுக்கு அறிவிப்பர். ஆதலின், நாம் இங்கே யானைமேல் பறையறைவித்தாற் போதும்" என்றான். அதற்கிசைந்த செங்குட்டுவன் பேராற்றங் கரையினின்றும் திரும்பிச் சென்று வஞ்சிமாநகர் புகுந்தான்.



# ௫௨. புறப்பாடு

வஞ்சி நகரில் யானைமேல் முரசொலித்தது :—

வாழ்க எங்கோ, மன்னவர் பெருந்தகை !
ஊழிதோ றூழி யுலகங் காக்கென
விற்றலைக் கொண்ட வியன்பேர் இமயத்தோர்
கற்கொண்டு பெயருமெங் காவலன் ; ஆதலின்,
வடதிசை மருங்கின் மன்ன ரெல்லாம்,
இடுதிறை கொடுவந் தெதிரீ ராயின்,
கற்கடம் பெறிந்த கடும்போர் வார்த்தையும்,
விடர்ச்சிலை பொறித்த வியன்பெரு வார்த்தையும்,
கேட்டு வாழுமின் ! கேளீ ராயின்
தோட்டுணை துறக்குந் துறவொடு வாழுமின் !
தாழ்கழல் மன்னன் தன்திரு மேனி
வாழ்க சேனு முகம் !

*இவ்வாறு பறையறைவித்து, மன்னன் அரியணை யேறினான். தானைத் தலைவருடன் ஆசான், சோதிடன், அருந்திறலமைச்சர், அனைவருங்கூடி "மன்னர் மன்னன் வாழ்க!" என்று ஏத்தினர் ; படைசெல்ல வேண்டும் திசை இன்னதென்று கட்டளையிட்டருளும்படி வேண்டி நின்றனர்.*

*ஓங்கியுயர்ந்த வெண்குடை உரவோனாகிய செங்குட்டுவன், தனது வீரப்படைத் தலைவரை நோக்கி, இவ்வாறுரைத்தான் :—இமயத்தினின்றும் நீராடவந்த முனிவர், கனகன் விஜயன் என்னும் இரண்டு ஆரிய*

---

* *மலைப்பிளவில் எழுதிய.* † *தோள்துணை = பெண்ணை.*

மன்னர், நமது தமிழரசரை இழிவாகக் கூறினதாகச் சொன்னார்கள். தமிழரசர் ஆற்றலை அவர்கள் அறியார் போலும்! அந்தப் பலமில்லாத வாழ்க்கையுடைய மன்னர், சொன்னது நம்மிடத்தே தங்கி இருந்தால், அது நம்மைப் போன்ற அரசரான சோழ பாண்டியருக்கு இகழ்ச்சியைத்தரும். எந்தத் தமிழ் வேந்தருக்கு இகழ்ச்சி வந்தாலும், அது தமிழ்நாடு முழுதிற்கும் வந்த இகழ்ச்சியேயாம். ஆதலால், பத்தினிக்கல்லை அந்த வடநாட்டு மன்னர் தலையில் வைத்துக் கொண்டு வரும்படி செய்யாவிட்டால், "நான் பகையரசரைப் போரில் ஒடுக்காது, குடிகளை நடுக்கும் கொடுங்கோலனுக்குச் சமானமாவேன்"

"இமையத் தாபதர் எமக்கீங் குணர்த்திய
அமையா வாழ்க்கை அரசர் வாய்மொழி
நம்பால் ஒழிகுவ தாயின் ஆங்கஃ(து)
எம்போல் வேந்தர்க் கிகழ்ச்சியுந் தருஉம்
வடதிசை மருங்கின் மன்னர் முடித்தலைக்
கடவு ளெழுதவோர் கற்கொண் டல்லது
வறிது மீளுமென் வாய்வா ளாகிற்
செறிகழல் புனைந்து, செருவெங் கோலத்துப்
பகையர சுநடுக்காது, பயங்கெழு வைப்பிற்
குடிநடுக் குறூஉங் கோலே னாக!"

இச்சபதம் கேட்ட ஆசான், "இமயவரம்ப, சீரிய மணிமுடியில் ஆத்திமாலை சூடிய சோழனையும், வேப்ப மாலை சூடிய பாண்டியனையு மல்லவா ஆரிய மன்னர் அவ்வாறு சொன்னதாகத் தெரிகிறது. அஞ்சினார்க்கு அபயமளிக்கும் அடுபோ ரண்ணால், நீ வஞ்சினங்

கொண்டு பொருதால், நின்னை எதிர்க்கும் மன்னரும் உளரோ ? ஆதலின் நின்சினம் தணிக" என்று சமாதானஞ் சொன்னான்.

அச்சமயம் சோதிடன் எழுந்தான்; அவன் பன்னிரு ராசிகளினும் (மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம்) நவக்கிரகங்களின் (சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, இராகு, கேது) நிலையும், ஐங்கேள்வியும் (திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் ஆகிய பஞ்சாங்கம்) நன்குயறிந்தவன். அவன் மன்னனை நோக்கி "வெந்திறல் வேந்தே! வாழ்கநின் கொற்றம்! இருநில மருங்கின் மன்னர் எல்லாரும் நினது திருமலர்ச்சேவடி பணியும் நல்ல முகூர்த்தம் இதோ வந்துள்ளது; நீ முன்னிய வடதிசையில் இப்போதே புறப்படுக!" என்றான்.

உடனே மீளா வெற்றி வேந்தனாகிய செங்குட்டுவன், "என் வாளும் குடையும் வடதிசைப் பெயர்க!" என்று ஆணையிட்டான். பாரைச் சுமக்கும் பாம்பும் நடுங்க, வீரர் ஆர்த்தனர்; முரசெழுந் தொலித்தது! ஐம்பெருங் குழுவினர், எண் பேர் ஆயத்தார், அரசனுக்குகந்த கரும வினைஞர், கணக்கியல் வினைஞர், தரும வினைஞர், தந்திர வினைஞர் முதலிய பரிவாரர்களெல்லாம் "மண்திணி ஞாலம் ஆள்வோன் வாழ்க!" என்று வாழ்த்தெடுத்தனர். பகைவருக்கு நரக வேதனை செய்யும் வெய்யபடை, இருளையோட்டும் மணிக்கொடிகள் நெருங்க எழுந்தன ; சோற்றுருண்டைகளை உண்ணும் பட்டவர்த்தன யானைமேல்,

மாலையால் அலங்கரித்த வீர வாளையும், வெண்கொற்றக் குடையையும் ஏற்றிப் புறநிலைக்கோட்டத்திற் போக விட்டு, பிறகு, வஞ்சிமாலையுடன் பனம்பூமாலையும் அணியும் சேரனுடைய ராஜசபையில் முறையே சென்றனர். சேரன், போர்வேட்கை கொண்டு ஆர்கலிக்கும் பெரும் படைத் தலைவருக்குச் சிறப்பாக விருந்திட்டான். பிறகு தனது வஞ்சி நகரில் பூத்த வஞ்சிமலரை (பகைவர் மேற் செல்லுவதற்கு அடையாளமாக) மணிமுடியில் அணிந்தான். திறைகொண்டு வரும் சிற்றரசரை அழைக்கும் காலை முரசம் வாயிலில் ஒலித்தது. பிறரை வணங்காச் சென்னியுடைய சேரன், பிறை சூடிய உலக குருவான, பரமசிவனை வணங்கி, அவன் திருவடியை வஞ்சி சூடிய தனது மணிமுடியில் அணிந்தான்; பிறகு கோயிலை வலங்கொண்டு, வேதியர் வேட்ட நறும்புகை தனது மாலையிற்படிய ஓமத்தீயை வணங்கிக் கடக்களியானைப் பிடர்த்தலை ஏறினன். திருவனந்தபுரத்தில் அறிதுயி லமர்ந்த பெருமாள் பிரசாதம் கொண்டு 'குடக்கோக் குட்டுவன் கொற்றம் கொள்க!' என்று சிலர் ஏத்தி நின்றனர். தன் மணிமுடியில் கங்காதரன் சேவடியை வைத்திருப்பதனால், விஷ்ணுப் பிரசாதத்தை வாங்கி, அரசன் அணிமணிப் புயத்தில் தாங்கினன். நாடக மடந்தையர் ஆடரங்கெங்கும் குவித்த கையுடன் பொலிந்து நின்று "கொற்ற வேந்தே, நினது பட்டத்தானையின் முகத்தில் வாகையும், தும்பையும், பனைமலர் மாலையும் ஓங்குக! வெண்கொற்றக்குடையின் கீழ், நீ கண்கவரப் பவனிவருங் காட்சி எமது வெள்வளைகளைக் கவர்வதாகுக!" என்றனர்.

மாகதப்புலவரும், வைதாளிகரும், தேர்ப்பாகரும் 'அரசனுக்குக் களவெற்றி யுண்டாகுக'வென்று வாழ்த்தினர். யானை வீரரும், குதிரைத் தலைவரும், குறிதவறு வாளுடை மறவரும், சேரன் வாள்வெற்றியைப் புகழ்ந் தேத்தினர். தானவருடன் போர்செய்யத் தன் பதி நீங்கிச்செல்லும் இந்திரன்போல, வஞ்சி நகரினின்று சேரன் புறப்பட்டான்.



## ௫௩. நீலகிரியில்



தண்டலைத் தலைவருடன் கொடிப்படை முன்னே நடந்தது. அலைத்தலையில் வெள்ளிய நுரையேந்திய கடலோரமாக நடந்து, அனைவரும் நிலம் அதிர, மலை முதுகு நெளிய ஒருங்கே சென்று, நீலகிரிச் சாரலைச் சேர்ந்தனர். அங்கே யானை - தேர் - குதிரைப் படைகளும், வீர மறவரும் அயராக் காவல் நிற்க, மன்னவன் யானையைவிட்டு இறங்கி நிலத்தில் அடிவைத்து, அருந்திறல் கொண்ட மெய்காப்பாளர் அடியீடேத்தத் தனது கூடாரத்தில் அமைந்த பெரிய அமளியில் ஏறினான். சேனையின் முழக்கம் எழுந்தது. அதுகேட்டு, அப்போது வானிற் சென்ற முனிவர் சிலர் கீழே இறங்கிவந்து, மின்னொளி மேனியுடன் சேரமான் முன்னிலையில் தோன்றினர். மன்னவன் எழுந்து அவர்களை வணங்கி நின்றான். "சிவபெருமான் அருளால், வஞ்சியில் தோன்றிய சேரர் மன்னவ, நாங்கள் பொதியமலைக்குச் செல்லுகிறோம். இமயமலை செல்லல் உன் விருப்பம்; அங்கே அருமறை அந்தணர் இருக்கின்றனர். அவர்களைக் காப்பது உனது கடமையாம். நீ நீடு வாழ்க" என்று அம் முனிவர் ஆசிகூறிச் சென்றனர். பிறகு கொங்கணக்கூத்தரும், கொடுங் கருநாடரும், தமது கூட்டத்திற் கிசையும் அணியினராய், கரிய சுருட்குஞ்சியில் தழைத்த மாலையணிந்து, கருங்கயல் - நெடுங்கண் - வளரிள வனமுலை - மாதருடன், "குயில் கூவ, வண்டு யாழ் முழங்க, அரும்பவிழ, வேனில் வந்தது. காதலர் வாராரோ" என்று வேனிற்பாட்டைப் பாடிவந்தனர்.

"வேகமாக இடியிடித் துறுமிக் கார்காலம் வந்தது காணாய்! வெளியே செய்யவேண்டிய காரியத்தை முடித்துக் காதலர் தேரும் வந்தது! கோல்வளை மாதே, கோலங் கொள்ளாய்" என்று கார்காலக் குரவை பாடிக் கயல்விழி மாதருடன் குடகர் தோன்றினர். "மறவாள் வேந்தன், வாள்வினை முடித்து நீடூழி வாழ்க!" என்று தமது கூட்டத்துடன், பணிவுள்ள கோலம் பூண்டு ஏத்தாளர் தோன்றினர். இவர்களெல்லாம் ஆடலாசிரியன் காட்டிய முறைமைப்படி மன்னனை ஏத்தினர். சேரன் மனமகிழ்ந்து அவர்கள் முன்னே கண்டறியாத அளவு ஆபரணங்களை நல்கி யமர்ந்தான்.

அப்போது வாயிற்காப்பான் வந்து, "நீண்டுயர்ந்த வெற்றிக்கொடி தாங்கிய செங்கோல் வேந்தே, வாயிலில் தூதர் தலைவன், சஞ்சயன் வந்திருக்கிறான். அவனுடன் 52 நாடகமகளிர், கூடி இசைக்கும் 208 குயிலுவர், 96 வகை பாசண்டத்துறை (புறச்சமயக் கொள்கை)யும் வல்லார் 100 பேர், நகை வேழம்பர், 1000 கஞ்சுகிகள் வந்திருக்கின்றனர்; 100 கொடிஞ்சி நெடுந்தேர், 500 கடுங்களி யானைகள், பிடர்மயிர் நிறைந்த 10,000 குதிரைகள், இன்னசரக்கென்று எழுதிய அரிய வளநாட்டு வளங்கள் ஏற்றிய 2,00,000 சகடம் இவை வந்துள்ளன" என்றறிவித்தான். "நாடக மகளிரும், பிரதானரும், குயிலுவக் கருவியாளரும், சஞ்சயனுடன் இங்கு வருக" என்று சேரன் பணித்தான். வேந்தன் திருச்சபையில் சஞ்சயன் புகுந்து, தாழ்ந்து வணங்கிப் பலவாறு மன்னனைப் போற்றினான். பிறகு அரசன் ஆணையால் புகுந்த 102 பேருடன் பக்க

வாத்தியம் வாசிப்பவரையும் வகைபெறக் காட்டினான். முடிவில் "கோற்றொழில் வேந்தே, கன்னர் நூறு பேரும் உன்னுடன் வேற்றுமையின்றி மனங்கலந்த நண்பராவர் ' கடவுளெழுத ஒரு கல்லுக்காகச் சேரன் வடதிசை செல்கிறான். ஆயின் நாங்களே இமயத்தில் கல்லெடுத்துக் கங்கையில் நீர்ப்படை செய்து கொண்டு வந்து தரவல்லோம் ' என்றனர். அவர் விருப்பத்தை ஏற்க வேண்டும். வீங்கு நீர் ஞாலம் புரக்கும் மன்னவ நீ வாழ்க !" என்றான் சஞ்சயன். பகைவர் உயிரை யுண்ணும் சேனைக்கடலுடைய அடல்வேல் மன்னன், "பாலகுமரன் மக்களான நாவடக்க மற்ற கனகனும் விஜயனும், புதிய அரசர் சிலருடன் கூடித் தமிழ் வேந்தரை இகழ்ந்தனர். அவர் உயிருக்குக் கூற்றம் போலச் சீற்றங்கொண்டு இக்கொடிய சேனை செல்லுகிறது. கன்னர் நூற்றுவருக்குச் சாற்றி, கங்கையைத் தாண்டத் தோணிகளைத் தயார் செய்க" என்று பணித்தான். சஞ்சயன் பணியேந்திச் சென்றான்.

அச்சமயம், வார்த்தை தப்பாத நாவினரான தனது 1000 தூதர், சந்தனக் குப்பையும், கடல் முத்தும் ஆகிய தென்னவன் இட்ட திறையுடன் வந்தனர். அரசன் தென்னவனுக்குத் தனது மகிழ்வைத் தெரிவித்தான் ; அவன்கண் உள்ள கடிதம் எழுதுவோர், அதை யெழுதித் தூதர் மூலம் பாண்டியனுக் கனுப்பினர். பிறகு நாடாள் செல்வர்கள் 'வெற்றி யுண்டாகுக' என்று வாழ்த்த, படைவீட்டினின்றும் சேரமான் பிரயாணமானான்.



## ருச. வீரத்தமிழர் போர் வினை



வழி நெடுக மன்னர் நல்வரவேற்பைப் பெற்றுச் சேரமான் கங்கைக் கரையை அடைந்தான்; அங்கே முன் சொன்ன கன்னர் ஏராளமான தோணிகளைக் கொண்டுவந்திருந்தனர்; அவற்றிலேறி ஆற்றைக் கடந்து வடக்கே சென்றான். கன்னர் தமிழ் மன்னனை எதிர்கொண்டுபசரித்தனர். பிறகு சேரமான், வடபூமியில், பகைவர் நாட்டில், வெல்லரும் படையுடன் பாசறையிருந்தான். ஆங்கே, "தென்னாட்டவராகிய இத்தமிழர் ஆற்றலை யாம் காண்போம்" என்று வீரியம் பேசி, உத்தரன், விசித்திரன், உருத்திரன், பைரவன், சித்திரன், சிங்கன், தனுத்திரன், சிவேதன் முதலிய மன்னர்கூடிக் கேண்மையிற்கலந்து, கனக விஜயர் சேனைக்கடலுடன் மனமொத்துச் சேரமானை எதிர்த்து வந்தனர். எழுந்தான் செங்குட்டுவன்! பசி கொண்டு இரை தேர விரும்பி எழுந்த சிங்கம், யானைக்கூட்டத்தைக் கண்டு மனமகிழ்ந்து பாய்வதுபோலத் தன்னை எதிர்த்த பகைவர்மேற் பாய்ந்து கை கலந்தான்.

கதிரை விழுங்கிக் கொடிகள் பந்தலிட்டுப் பறந்தன. கொடும்பறைகள் கொட்டின; நீண்ட கொம்பும் வெண்சங்கும் ஊதின. இடிக்குரல் முரசம் அதிர்ந்தது. கஞ்சத்தாளம் 'இழும்' என ஆர்த்தது. உயிர்ப்பலியுண்ணும் மயிர்க்கண் முரசம், திசையதிர இடிக்குரலார்த்தது.

சிலைத்தோள் ஆடவர், செருவேல் தடக்கையர், கறைத்தோல் (கருங்கடகு) மறவர், கருந்தேர் ஊருநர்,

வெண்கோட்டு யானையர், வேகக் குதிரையர்—அனைவரும் நெருங்கிப் பொருதனர். அப்போர் எழுப்பிய தூசி, மண்ணுலகின் கண்ணைக் கெடுத்தது. அத்தூசி நிறைந்ததால், களங்கொள் யானையின் கவிழ்மணி நாவும், யானைமுகத்திற்கட்டிய கொடிச்சங்கின் இசைநாவும் ஓசை பிறக்க வழியில்லாதாயின. முதலில் கொடிப்படைகள் கலந்து சண்டையிட்டன. சிலைத்தோள் மறவருடைய தலைகளும் தோள்களும் வெட்டுண்டு வேறாயின. உடல்கள் மலைபோற் குவிந்துகிடந்தன. அக் குவியலிலுள்ள வெட்டுண்ட பிணத்தில் இடறிய கவந்தமானது, குழிக்கண் பேய்மகளுடைய தாளத்துக்கு ஒத்து ஆடியது. பிணஞ்சுமந்து ஒழுகிய நிணம்படு குருதியில், கூளிக் கணங்கள் தலைவிரித்தாடின. தமிழ் வீரர், பகைவர் படைகளைக்கொன்று குவித்தனர். நீண்ட தேர்கள் கொடுஞ்சியுடன் சாய்ந்தன. யானைப்பிடர்களும், குதிரை முதுகும் நெரிந்து முறிந்தன.

ஒரு பகல் எல்லையில், உயிர்த்தொகை யனைத்தையும் கூற்று உண்ணுமென்பதை ஆரியவரசர் அமர்க்களத்தறிந்தனர். பனைமலரும் தும்பையும் சென்னியிற் பூண்ட சேரமான் தனது எதிரிகளை அப்படிக்கொன்று குவித்தான். மீதியிருந்தவர், செங்குட்டுவன் சினவலைப்பட்ட கனக விஜயரும், ஐம்பத்திரண்டு கடுந் தோளாளருமே யாவர். அவர்கள் ‘இத்தமிழ் மறவர் நம்மைக் கொன்றே தீர்ப்பர்’ என்றறிந்தனர். போரில் தோற்றனர். அதனால் சடையும், காவியுடையும், சாம்பற் பூச்சும் புனைந்து, சைவத் துறவிகளாகச் சிலர் ஓடி யொளிந்தனர். சிலர்

மயிற்பீலியேந்திச் சமணத்துறவிகளாகத் தப்பியோடினர். சிலர் பாடும் பாணராகவும், இசைக்கருவிகளைத் தோளிற் சுமந்தவராகி ஆடும் கூத்தராகவும், தாம் தாம் தேர்ச்சிபெற்ற வித்தைக்கேற்ற வேடம் பூண்டு, விரும்பின இடங்களுக்குச் சென்றனர். போர்க்களம் பிணக்காடானது. வென்ற தமிழர் போரைத் தணித்தனர். யானையை எருதாகவும், வாளைக் கோலாகவுங் கொண்டு, வாளேருழவனாகிய செங்குட்டுவன் அதரி திரித்தான்(மனிதராகிய நெற்போரைக் கடாவிட்டான்). வீரர் மறக்களம் வாழ்த்தி,நெடுங்கை அசைய உயர்த்தி, முடியுடைக் கருந்தலை முன்னே ஏந்தி, திருமால் புரிந்த தேவாசுரயுத்தம், இலங்கைப்போர், பாரதப் போர் இம்மூன்றையும் பாடி, முன் தேர்க் குரவையில் முதல்வனாகிய அரசனை வாழ்த்தினர்; பிறகு பேய்க் குரவையர்டப்பட்டது. அவ்வாறு பேய்க்குரவை ஆடப்பட்ட போர்க்களத்தில் அட்ட ஊன் சோற்றையுண்ட பேய்கள், "செங்கோற் கொற்றத்து அறக்களஞ் செய்தோன் ஊழி வாழ்க" என்று வாழ்த்த, செங்குட்டுவன் மறக்களம் முடித்தான். தேவாசுர யுத்தம் 18 ஆண்டிலும், இராம இராவண யுத்தம் 18 மாதத்திலும், பாரத யுத்தம் 18 நாட்களிலும் முடிந்தன. செங்குட்டுவன் கனக விஜயருடன் செய்த போர் 18 நாழிகையில் முடிந்தது.

இவ்வாறு போர்க்களம் வென்ற செங்குட்டுவன் வடதிசை சென்று இமயத்தையடைந்து, கல் பார்க்கத் தூதரை விடுத்தான். அவர்களிடம் முன்னே முனிவர் வேண்டியபடி அந்தணரைப் போற்றிக் காக்கச் சொன்

ஞன். நல்ல கல் இருக்குமிடம் அறிந்ததும், தனது வெற்றிப்படையை ஏவிக் கல்லைப் பெயர்த்தெடுத்துக் கொண்டான். அச்சமயம் முன்னே போரில் தோற்றுத் துறவிவேடத்தில் மறைந்து தப்பிய கனக விஜயர் பிடிபட்டனர். அவர் பொறுப்பில் பத்தினிக் கல்லை வைத்துக் கொணர்ந்தான் சேரன். ஒரு பகலில் கூற்றிற்கு ஏராளமான உயிர்த்தொகை யுண்ணக்கொடுத்து, ஆரிய மன்னர்க்குத் தமிழர் வீரத்திறனை யுணர்த்திய செங்குட்டுவன், தனது சினவெம்படையுடன் கங்கைக் கரைக்கு வந்தான்; அங்கே வேதவிதிப்படி பத்தினிக் கடவுளை நீப்படை செய்தான்.





# ௫௫. மன்னவனுக்கு மாடலன் உரைத்தது



செங்குட்டுவன் கங்கையின் தென்கரை வெளியில் பாசறையமைத்துத் தங்கினான். இச் சமயம் ஆரியமன்னர் அவனுக்கு வேண்டிய ஏற்பாடுகளை வணக்கத்துடன் செய்தனர். பேரிசை மன்னர்க்கு ஏற்ற அரண்மனை, மண்டபங்கள், பொன்னொளிர் அரங்கம், பூம்பந்தல், அந்தப்புரம், விரிந்த பூஞ்சோலை திருமலர்ப்பொய்கை, ஆடல் பாடலரங்கம் ஆகியவைகளும் பிறவும் அவர் அழகுற அமைத்திருந்தனர். முன்னே இரக்கமற்ற போர்புரிந்து பகைவரைக் காய்ந்த சேரன், இப்போது போரில்பட்ட வீரமைந்தருக்கும், பொருது வென்ற வீரருக்கும், தாராளமான கருணை காட்டி, வாகைகொடுத்தான். வீரப்போரில் வீழ்ந்தோர், வெஞ்சமருழக்கித் தலையும் தோளும் சிதைந்த மதிப்பிற்குரிய வீரர், போர்க்களத்தில் வாள்வினை முடித்துத் தம்முடன் நின்று போர் புரிந்தாரோடு வீரமாகப் பட்டவர், கண்குழிந்த பேய்மகள் குரவையில் தொடுத்து வழியிலுள்ளாரை ஏத்த வாளொடு மடிந்தவர், உறவான வீருடன் மடிந்தோர் ஆகியோர் மைந்தர்களுக்கும் வாகைமாலை கொடுத்தான். போரில் மாற்றாரை மடித்து, அவர் புறத்தைக் கைப்பற்றி மீண்ட வாகைவீரர், தேரோர் கொடிஞ்சியுடன் வீழத் தாம் சலியாதுபொருது புண்ணுறு குருதியாற் பொலிந்தவீரர், கூற்றும் இரங்கும்படி, பகைவர் தலைகளை அரிந்து களம்கொண்டார், கவசம் இரத்தந்

தோயப் புண்ணுண்டும் பகைவர் புறங்காட்டியோட வெற்றியுடன் வந்த போர்வாள் மறவர்—இவர்களை யெல்லாம் அன்புடன் 'வருக' என்றழைத்து, வெற்றி மாலை யளித்தான். புலவர் கொற்றத்தைப் பாட, வெற்றித் திருமார்புடன் சேரன் அரசு வீற்றிருந்தான்.

அச்சமயம் மாடல மறையோன் அரசன் முன்னிலையில் தோன்றி, "எங்கோ வாழ்க! மாதவி மடந்தையின் கானல்வரி, கனக விஜயரின் செருக்குற்ற முடித்தலையை நெரித்தது; முதுநீர் ஞாலம் அடிப்படுத்து ஆண்ட அரசே நீ வாழ்க" என்றான். சேரன் வியந்தான்: "நான் மறையாள, யாது கூறினை? பகையரசர் அறியாத நகைக்கிடமான ஒன்றைச் சொன்னாய். உன் உரையின் பொருளென்ன?" என்று வினவினான்.

மாடலன் முன்னிகழ்ந்ததெல்லாம் தொடர்பாகச் சொன்னான்:—கடல் விளையாட்டிற்கு மாதவி கோவலர் சென்றது; அங்கே கானல்வரி பாடியது, ஊழ்வினையால் இருவர் மனமும் வேறுபட்டது, கோவலன் பிரிந்து பத்தினியிடம் சென்றது, கண்ணகி-கோவலர் சிலம்பு விற்றுப் பொருள்தேட மதுரைக்கு வந்தது. அங்கே கோவலன் கொலையுண்டது, பாண்டியன் இறந்தது, மதுரை தீயுண்டது, கண்ணகி சேரநாட்டிற்கு வந்தது, பத்தினிக் கல்லுக்காகச் சேரன் வடநாடுற்றது, ஆங்கே கனகவிஜயரை வென்றது, அவர் பொறுப்பில் கல்வந்து சேர்ந்தது—ஆகிய நிகழ்ச்சிகளையெல்லாம் மாடலன் தொடர்பாகச் சொன்னான். பிறகு, "யான் பொதியின் மலையை வலம்வந்து, குமரிக்கடலாடி, மதுரை சென்றேன். கண்ணகி பாண்டியனைச் சிலம்பினால் வென்

றதை யறிந்தேன். மதுரை எரியுண்டது. கண்ணகிக்கு அடைக்கலங் கொடுத்த மாதரி அந்த எரியிற் புகுந்திறந் தாள் ; கவுந்தியடிகள் உண்ணு நோன்புடன் விண்ணுல கெய்தினாள். இன்னும் மதுரையில் நிகழ்ந்த வெல்லாம் அறிந்து புகார் நகரடைந்தேன். அங்கே, மைந்தனுக் கும், மடந்தைக்கும், மன்னனுக்கும் உற்றதைக் கேட் டுக் கோவலன் தந்தை கொடுந்துயரெய்தி, தனது பெருஞ் செல்வத்தைத் தானஞ் செய்து, பிறந்த யாக்கை பிறப்பற முயன்று, துறந்தோருடைய முன் னிலையில் துறவு பூண்டான். கோவலன் தாயார், புத்திரசோகத்தால் இறந்தாள். கண்ணகி தந்தை, தனது பொருளை யெல்லாம் ஆசீவகருக்குத் தந்து, தானும் சமணத்துறவியானான். அவன் மனைவி உயிர் நீத்தாள். இதெல்லாம் கேட்ட மாதவி, "இனி நான் இத்தீய விலைவாழ்வை நீத்து நல்வாழ்விற் புகுவேன் ; கணிகை வாழ்வு பெருந்துன்பந் தருவது. மணிமேகலை கணிகைக் கோலம் காணொழிக" என்று தனது தாய்க்குக் கூறி, பூங்குழல் களைந்து, பௌத்த தருமத்தைத் தழு வினாள். நான் சொன்ன செய்தியே இவற்றிற்கெல் லாம் காரணமானது. அதனால் இருவர் இறந்தனர் ; மூவர் துறந்தனர். நான் எனது பாவத்தைக் கழிக்கக் கங்கையாட வந்தேன். சமூகத்தைக் கண்டேன் ; மன்னவர் கோவே இங்கு நீ வாழ்க !" என்றுரைத்தான் மாடலன்.

"நெடுஞ் செழியன் இறந்த பிறகு, தென்னவர் நாடு என்னவானது ?" என வினவினான் சேரன். அதற்கு, "ஓரே பகலில் ஒன்பது பகைவரை யொடுக்கி,

மைத்துனன் கிள்ளி வளவன் திகிரி ஒரு வழி சுழலச் செய்த சேரரேறே, பாண்டியன் படைத்தலைவனை பழையனை வென்றோய், கேள். நெடுஞ்செழியன் மகன் வெற்றிவேற் செழியன் கொற்கையில் இருந்தான். அவன் பத்தினிக் கடவுளுக்கு விழா, வழிபாடு நடத்தி, 1000 பொற்கொல்லரைப் பலிதானமாகத் தந்து, சாந்தி செய்தான். பிறகு, ஏழ்பரித்தேர் மேல் காலைச் செங்கதிர்க் கடவுள் ஏறுவதே போல, சந்திர குலத்தரசனை அவ்விளம் பாண்டியன், உலகங்காக்க அரியணையேறி அரசியலை மேற்கொண்டான்" என்று மாடலன் விடையளித்தான்.

இவ்வுரையை அரசன் கேட்கும்போது பகல் சென்றது ; மாலைச் செந்தீப் பரந்தது. அந்திச் செக்கர் வானில் வெண்பிறை தோன்றியது. அதை அரசன் பார்த்தான். அப்போது சோதிடன் "இறைவ, நாம் வஞ்சி நீத்து வந்து முப்பத்திரண்டு மாதங்கள் சென்றன" என்றான். அனைவரும் மாலைக்கடன் முடிக்க எழுந்தனர். அதன் பிறகு நெடிய தூண்களும், பலவர்ணத் திரைகளும், வித்தகர் வேலைப்பாடும் அமைந்த சித்திர விதானத்தில் செம்பொற் பீடத்தில் சேரன் விளங்கினான். உடனே வாயிலாளர் மூலம் மாடலனை வரவழைத்து, "பகைசெய்த ஒன்பது இளங்கோ வேந்தர் இறந்த பிறகு, சோழன் பெருங்கிள்ளியின் கொற்றமும், செங்கோலியல்பும் தீதின்றி நடக்கின்றனவா" என்று வினவினான்.

"எங்கோ வாழ்க ! ஒரு சோழ மன்னன், மூன்று தூங்கெயிலெறிந்தான். புறாவைக் காக்கப் பருந்தின்

பசிக்குத் தனது உடம்பையே அரிந்து கொடுத்தான் ஒரு சோழன். அத்தகைய சோழர் செங்கோல் திரிந்து வேறாகும் காலமும் உண்டோ? காவிரி நாடருக்கு எக் காலமும் தீதில்லை" என்றான் மங்கல மறையோன்.

சேரமான் மனமகிழ்ந்து, தனது நிறையுள்ள ஐம்பது துலாம்பாரம் பொன்னை மாடலனுக்குக் கொடுத்தனுப்பினான்; கன்னர் நூற்றுவரையும் (சதகர்னிகள்) தமது நாட்டிற்கேக விடையளித்தான். பனந்தாரணிந்த சேரன், தனது தமிழ்-ஆற்றலை யறியாது போர் புரிந்து தோல்வியடைந்து, தவவேடத்தால் உயிர்பிழைத்த கனக விஜயரை, *ஆரியப்பேடியோடு கொண்டு சென்று, சோழ - பாண்டியருக்குக் காட்டிவர, மா பெருஞ் சேனையை நடத்தும் இளவரசர், ஆயிரம் †கஞ்சுகர் இவர்களை ஏவினான். பேடியோடனுப்புவது களத்தில் தோற்றோடியவர் என்று காட்டவேயாம்.



* ஆரியப் பேடி சுருண்ட தாடி, இருண்ட பூங்குழல், செவ்வரி நெடுங்கண், வெண்ணகைத் துவர்வாய், சூடகவரி வளை, பணைத்தோள், வளர் இளமுலை, தளரியல் மின்னிடை, பாடகச் சீறடி - இவையுடையாள்.

† கஞ்சுகர் பிரதானிகள், அறமின்றி மறத்தொழிலே கொண்ட இறைமொழி மறுப்போர்.

## ௫௬. வருகையும் உவகையும்

பொழுது புலர்ந்தது; சுற்றிலும் வற்றாக் கங்கைப் பசுவளம் பரந்து பொலிந்தது; இளந்தாமரையில் வண்டுகள் யாழொலித்தன; வெயிலிளஞ் செல்வன் விரிகதிர் பரப்பிக் குணதிசைக் குன்றின் உயரத் தோன்றினன்; குடதிசையாளும் கொற்ற வேந்தனான செங்குட்டுவன், வடதிசைத் தும்பையும் வாகையும் முடித்துத் தனது வெற்றிப்படையுடன் தென்றிசைப் பெயர்ந்து, திருவும் செல்வமும் நீங்காதுறையும் வஞ்சிநக ரடைந்தான்.

கதிரவன்கூடத் தாண்ட முடியாது தங்கும் வானளாவியது சேரன் கனக மாளிகை; அதை முழுதும் முத்துக் கொடிகள் அலங்கரித்தன. பூவேலைகள் செய்த சித்திரவிதானத்துடன் பொற்கால் கொண்ட கட்டில்மீது, ஆண் பெண் அன்னங்கள் புணரும் போது நெஞ்சினின்றுதிரும் மிருதுவான மயிர் செறித்த துணைஅணைப்பள்ளிமீது, அரசி வேண்மாள் துயின்றாள். மன்னன் வடக்கிருந்து வீரவெற்றியுடன் திரும்பிய செய்தியைச் செவிலியர் அறிவித்து அரசியைத் துயிலெழுப்பினர். "உனது தோள் துணைவனான அரசனைப் பிரிந்திருந்த துயரொழிக! இதோ அரசன் வந்தான்" என்று பாட்டுப் பாடிப் பல்லாண்டு கூறினர். அந்தப்புரச் சேவகரான கூனுங் குறளும் சென்று "பெருமகன் வந்தான்; நின்செவ்வி நலம்பெறுக! உனது நறுமலர்க் கூந்தல் நாளணி பெறுக" என்றனர்.

கவண்கல்லுடன் தினைப்புனத்தைக் காத்த மதுவுண்ணும் கானவர், மன்னன் வரவைக் காணக் காவலை விட்டுச் சென்றனர். ஆதலால் யானை புனத்தில் உண்ணப் புகுந்தது. "வடதிசை சென்று வாகையும் தும்பையும் சூடிய வேகமான அரச யானை வருகிறது; அதற்கு வழிவிட்டு மரியாதை செய்!" என்று சேரனது வெற்றித் திறங்களைப் பாராட்டி உயர்ந்த பரணியிலிருந்து குறத்தியர் குறிஞ்சிப் பண் பாடினர். "வடதிசை மன்னர்களுடைய மதில்களைத் தகர்த்துக் கழுதையை ஏரில் கட்டியுழுது வெள்வரகு விதைத்த குடவர் கோமான் வந்தான்; போர் முடிந்தது. இன்று, சிறைப்பட்ட மன்னர்களைத் தளை நீக்கி விடுதலை செய்யும் நம் அரசர் பிறந்த நாள் விழாவாம்.பகடே அரசன் இராஜ்ய பாரம் பூண்கிறான். நீயும் இந்த நுகத்தடியைப் பூணுவாயாக! உனது உழவால் வேளாண்மை செழித்து அரசு தழைக்கட்டும்" என்று ஏருழவர் பாடினர். "ஆன் பொருநை நதியில் நீராடுவோர் இட்ட வண்ணமும், சுண்ணமும், மலரும் பெரிய நீர்த்துறையில் வானவில்லைப்போல நிறம் பரந்திருந்தன. குவளையும் தாமரையும் குஞ்சியில் முடித்து, வியன்பே ரிமயத்தினின்றும் பல ஆனிரைகளைக் கொண்டு நமது வில்லவன் வந்தான். நீங்களும் அந்த ஆனிரைகளுடன் சேர்வீராக" என்று அரசனது ஆனிரைகளை நீர்த்துறையில் படுத்தி, தாழைக் கோட்டிலிருந்து கோவலர் ஊதும் குழலிசை கேட்டது. காலையொளி மேவிய, வெண்திரை பொருதும் கடற்கரை மணலில், புன்னை நிழலில், வலம்புரிச் சங்கீன்ற நலம்புரி முத்தினால் மகளிர் கழங்காடும் ஓசை கேட்டது.

"வானவன் வந்தான்; வளர் இள வனமுலை அரசி யின் தோள் நலம் உண்ணவந்தான்; தும்பையும் பனம் பூவும் அணிந்து வந்தான் ; மடவீர் யாமும் வஞ்சி பாடுவோம் !" என்று ஆயப்பெண்டிர் இனிமையா யிசைத்தனர். கோப்பெருந் தேவி அனைத்தையும் செவி மடுத்திருந்தாள். நாயகன் பிரிவால் தளர்ந்த அவளது வெள்வளை செறிந்தது ; அரசி யுள்ளம் பூரித்தது. வலம்புரி முழங்கியது ; மாலையால் அலங் கரித்த வெண்குடையின்கீழ், வேக யானைமீது மன்னன் பொலிந்தான் ; கோநகர் மக்கள் குஞ்சர வண்டி யிற் சென்று அவனை எதிர்கொண்டனர். அறங் காக்க மறவாள் பிடித்து, தண்மதிக் குடையால் மண்ணிலத்திற்கு நன்னிழ லளித்து, பனைமலர் சூடி, நிலந் தரு திருவிற்பெரியோனான சேரமான், மாலையில் வெற்றி முழக்கத்துடன் வஞ்சிநகர் புகுந்தான். மாதர் நெல்லை யும் புல்லையுந் தூவினர் ; மங்கல விளக்கேந்தி, "உலக மன்னன் வாழ்க !" என்றேத்தினர் ; பலர் தொழுத னர். மலரவிழ் மாலையில், காவலன் தனது கோயில் புகுந்தான். பனைமாலை சூடிய வேந்தன் கொடிக்கு வெற்றி யளித்த வாள்வீரர், தத்தம் மனை புகுந்தனர். மனைவி யர், தமது வீரக்கணவரை உபசரித்தனர் ; வேலும், கணையும், வாளும், யானைக் கொம்பும் அழுந்திக் கிழித்த மணி மார்பு புண்ணுறும்படி விம்மியெழுந்த தமது கொம்மை வரிமுலையால் வேது பிடித்தனர். அவர் கூந்தல், அகிற்புகை யுண்டு, முகில்போல் விரிந்தது ; அதில் நுழைந்த முழுமதி போன்றது அவர் முகம். அம்மதி யில் வளைந்த கடுஞ்சிலை போன்றது புருவம். கருங்கயல்

விழிகள் அழகாகப் புரண்டன. புருவவில்லை வளைத்து, மகரக் கொடியோன் மலர்க்கணை விடுத்தான். "செவ்வரி படர்ந்த இவர் கடைக்கண் தூது, முன் பாசறையில் நமக்கு வருத்தஞ் செய்தது; இம்மாலையில் அது எமது புண்ணுற்றும் மருந்துமானது" என்று இளைஞர் போற்றினர். மணாளர் இன்பத்தால் மாதர் பவளக் கனிவாய் இளநிலா விரித்தது; பற்கள் அரும்பிய மூரல் விருந்தை, மாந்தளிர் மேனி மடவோர், இளையோர்க் களித்தனர். வண்டுகள் சுருண்டு சுருண்டு மொய்ப்பது போன்ற குழலும், கோதையும், கோலமும் கொண்டு, திலகமேகறையான மாதர் மதிவாண் முகத்தைக்கண்டு, மைந்தர் மகிழ்ந்தனர், அணைந்தனர், காதல் விருந்தருந்தினர். மாதர் போகத்தாற் குலைந்த குழல், நுதல் மலர் அணிகள் அனைத்தையும் திருத்திக்கொள்ள நிலைக்கண்ணாடி பார்த்தனர்; யாழைத்தழுவி, முறைப்படி குறிஞ்சிப் பண் பாடினர். அத்தகைய மகளிராலே மைந்தருக்கு விருந்தளித்து, மதியத்தைக்காட்டி, வசந்தமாலை நீங்கியது.

* * *

இனி அரண்மனை புகுவாம். குடிகளைக்காக்கும் போது, அரசர் முடிதோயும் வீரக்கழல் வேந்தனான செங்குட்டுவன் முகம், முழு மலர்ச்சி பெற்றிருக்கும். அது போலச் சந்திரன் முழுக்கதிர் வீசி எழுந்தான். மைந்தரும் மகளிரும் புகழ் கூறினர்; போற்றி செய்தனர். வெண்ணிலா முன்றில், வீழ்பூஞ்சேக்கை, சாந்திட்ட அரங்கம், மலர்ப்பூம்பந்தல், வெண்கால் அமளி, விதான வேதிகை அனைத்திலும் ஐங்கணை நெடுவேள் அரசு வீற்றிருந்தான். இந்த இடங்களையெல்லாம் தண்கதிர் மதியம் விளக்கி நின்றது. ஆழியுலகின் நடுவே நிவந்த

மேருவைப் போன்றோங்கிய, கொடியுயர்ந்த மதில்சூழ் வஞ்சி நகரின் நடுவே சேரன் பொன்மாளிகை நிலவி யது. அதில் உள்ள அணி அரங்கினின்றும், மங்கல மணமகள் அரசி வேண்மாள், அழகிய திங்களைக் காண வந்தாள். வரும் வழியில், பைந்தொடி மகளிர் ஒரு புறம் விளக்கேந்தினர்; ஒருபுறம் கூடிப் பல்லாண் டிசைத்தனர்; மற்றொருபுறம் முழவும், யாழும், பண் கனி பாடலும் பரந்தன. கூனரும், குள்ளரும் கஸ் தூரி, தொய்யிலெழுதும் வெண்சாந்து முதலியவற்றை ஒருபுறம் ஏந்தி வந்தனர். பெண்மையுற்ற பேடிகள், வண்ணமும் சுண்ணமும், மலரும், பூமாலையும் ஏந்தி னர். மற்றொருபுறம் பூவும், புகையும், மணமும் தூவி, அழகிய சேக்கை சூழ்ந்தனர். கண்ணாடி, ஆடை, அணி கலன்கள் இவற்றைச் சேடியர் செவ்வையாய் ஏந்தி னர். ஞாலம் புரக்கும் சேரர்கோன், அரசியுடன் அணி யரங்கேறினான். அங்கே சிவபார்வதி நடனம் ஆனது:

திருநிலைச் சேவடிச் சிலம்புவாய் புலம்பவும்,
பரிதரு செங்கையிற் படுபறை யார்ப்பவும்,
செங்க ணாயிரந் திருக்குறிப் பருளவும்,
செஞ்சடை சென்று திசைமுக மலம்பவும்
பாடகம் பதையாது, சூடகந் துளங்காது,
மேகலை யொலியாது, மென்முலை யசையாது,
வார்குழை யாடாது, மணிக்குழ லவிழாது,
உமையவள் ஒருதிற னாக வோங்கிய,
இமையவன் ஆடிய கொட்டிச் சேதம்......

இவ்வாறு கொடுகொட்டிக் கூத்தை, வேதியர் வைகும் பறையூர் கூத்த சாக்கையன் ஆடினான். அதைக்கண்டு சேரன் மகிழ்ந்தான்.



## ௫எ. மாடலன் அறிவுரை

சேரமான் வேத்தியல் மண்டபத்தில் அரியணை மேலிருன். நீலன் முதலிய கஞ்சுக மாக்கள் மாடலனுடன் தோன்றி, வாயிலாளர் மூலம் அனுமதி பெற்று முன்னிலைக்கு வந்து, கொற்றவனைத் தொழுதனர்; பிறகு நீலன் இவ்வாறு சொல்லலுற்றான் :—

தும்பை சூடி வெம்போர் புரியும் வீரக்கழல் வேந்தே, அறச்செங்கோலனே, நாங்கள் சோழன் மூதூர் சென்றோம்; மன்னன் கோயில் புக்கோம். வச்சிரம், அவந்தி, மகதம்—ஆகிய ஆரியநாட்டு மன்னர் திறையாகக் கொடுத்த முத்துப் பந்தலும், தோரணவாயிலும், பட்டி மண்டபமுங் கூடிய சித்திர மண்டபத்தில் செம்பியன் கொலுவீற் றிருந்தான். போரில் தோற்ற கனகவிஜயருடன் சென்று, அவரடி வணங்கி, எல்லாச் செய்தியும் சொன்னோம். 'போர்க்களத்தில் தமது ஆண்மை, வாள், குடை இவற்றை ஒழித்து விட்டு, கண்டார் ஒருவரும் கொல்லாத துறவிகள், பாணர், கூத்தர் முதலியோர் வேடங்கொண்டு தப்பியோடின வேந்தரைப் போரில் வென்றதாகப் பிடித்துக் கொள்ளல் வீரமன்று' என்று தேர்ப்படைத் தலைவனுக்குச் செம்பிய னுரைத்தான். அவனிடம் விடைபெற்றுச் சிரோங்கும் மதுரைக்கு வந்து, பாண்டியனைக் கண்டோம்.

" ஆரிய மன்னர் தோல்வியடைந்து, தங்கள் வெண்கொற்றக் குடையின் காம்பைச் சயந்தனாக நினைத்துக் கவியானவன் தன் கையிலேந்தும் தலைக்

கோலாகக் காட்டி, போர்க்களந் துறந்து, இமயமலையி லுள்ள குயிலாலுவத்திருக்கும் உமையொரு பாகனை வணங்கித் துறவிகளாயினர். அவ்வாறு தோற்றோடின வர்மீது கோதிசினங்கொண்ட சேரன் செய்கை வியப்பா யிருக்கிறது. இதுவரையில் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை " என்றான் போர்வேற் செழியன்.

இவ்வாறு நீலன் சொல்லவே, தாமரைச் செங் கண் தழல்நிறம் காந்த, எரிநகை புரிந்தான் சேரன். அவன் சினந் தணிய மாடலன் இவ்வாறு கூறினான்:—

' " மன்னர் மன்ன, வாழ்க நின் கொற்றம் ! மிளகு செழித்த மலைச்சாரலில் உறங்கும் யானைகளை யுடைய வியலூரை வென்றாய் ; உறையூருக்குத் தெற்கே யுள்ள நேரிவாயிலில், கொடும் போர் கடந்து, சோழன் மரபைச் சேர்ந்த ஒன்பது சிற்றரசரைச் செரு வென்று, கிள்ளிவளவன் திகிரி ஒரு வழி சுழலச் செய் தாய் ; கங்கைக் கரையிற் கப்பலோட்டிக் கரை கடந்து, உன்மேல் உடன்றுவந்த ஆரிய மன் னரைப் போரில் வென்றாய் ; நீண்ட வாகை பூண்டாய் ! பெரும்படை வேந்தே, மேலோ ருடன் பொருந்தவுணர்ந்த அரசரேறே, நின் சினம் தணிக ! உன் வாணாள் பொருநையாற்று மணலினும் பெருகுக ! கடலை அகழாகக்கொண்ட உலகை ஆளும் அரசே, நீ வாழிய ! என் சொல்லை இகழாது கேட் டருள வேண்டும். நீ உலகைக் காக்கத்தொடங்கி, ஐம்ப தாண்டுகள் ஆயின. எனினும் அறக்கள வேள்வி செய்யாமல், மறக்கள வேள்வியே யாங்கணும் செய் தாய்; பனம்பூ சூடிய வெற்றி வாள் வேந்தே, உன் முன்

ஞோர் கடற்கடம்பெறிந்த காவலர் ; இமயப்பிடரில் விற் பொறித்த விறலோர்; ஓர் அந்தணன் செய்யுளைக்கொண்டு, அவன் விண்ணின் பதம் பெறும் வேள்வியை முடித்த புண்ணியர். கூற்றுக்கூட முறையில்லாமல் உயிரைக் கொள்ளாதபடி மன்னுயிரைப் போற்றினவர் ; யவனர் வளநாட்டை (வாணிபத்தால்) ஆண்டார். இமய மலையி லும் புகுந்தார். மிகப்பெரிய சேனை கொண்டு, கோட் டையைப் பிடித்துப் பெரிய பகைவரை வென்ற அருந் திறலோர் ; இளமை எழில்பெற ஆயிரை நதியில் மூழ்கி, இருகடல் நீரிலும் ஒருபகல் ஆடினோர் ; அமராவதியி லுள்ள சதுக்கப் பூதங்களை வஞ்சியிற் கொணர்ந்து வேள்வி புரிந்தவர்; இன்னும் எத்தனையோ செயல்களைச் செய்த இவர்களில் யாரும் இன்றிலர். யாக்கை நிலை யாது ; இதை நீயும் உணர்வாய்.

மீக்கூற் றாளர் யாவரு மின்மையின்,
யாக்கை நில்லா தென்பதை யுணர்ந்தோய்,
மல்லன்மா ஞாலத்து வாழ்வோர் மருங்கிற்
செல்வம் நில்லா தென்பதை, வெல்போர்த்
தண்டமிழ் இகழ்ந்த ஆரிய மன்னரிற்
கண்டனை யல்லலையோ ? காவல் வேந்தே,
இளமை நில்லா தென்பதை எடுத்தீங்(கு)
உணர்வுடை மாக்கள் உரைக்கல் வேண்டா.
* திருஞெமிர் அகலத்துச் செங்கோல் வேந்தே,
நரைமுதிர் யாக்கை நீயும் கண்டனை
விண்ணோர் உருவின் எய்திய நல்லுயிர்

---

* இலக்கும் தங்கும்.

மண்ணோர் உருவின் மறிக்கினும் மறிக்கும்.
மக்கள் யாக்கை பூண்ட மன்னுயிர்,
மிக்கோய், விலங்கின் எய்தினும் எய்தும்.
விலங்கின் யாக்கை விலங்கிய மன்னுயிர்
கலங்கஞர் நரகரைக் காணினுங் காணும்.
ஆடுங் கூத்தர்போல் ஆருயிர் ஒருவழிக்
கூடிய கோலத் தொருங்குநின் றியலாது.
செய்வினை வழித்தாய் உயிர்செலும் என்பது
பொய்யில் காட்சியோர் பொருளுரை ஆதலின்,
எழுமுடி மார்ப நீ ஏந்திய திகிரி
வழிவழிச் சிறக்க, வயவாள் வேந்தே,
அரும்பொருட் பரிசிலேன், அல்லேன், ஆயினும்
பெரும்பே ரியாக்கை பெற்ற நல்லுயிர்,
மலர்தலை யுலகத் துயிர்போகு பொதுநெறி,
புலவரை யிறந்தோய், போகுதல் பொறேஎன் !
வானவர் போற்றும் வழிநினக் களிக்கும்
நான்மறை மருங்கின் வேள்விப் பார்ப்பான்
அருமறை மருங்கின் அரசர்க் கோங்கிய
பெருநல் வேள்வி நீசெயல் வேண்டும்.

*சாதாரண மனிதரைப்போல உன் உயிர் போதலை நான் பொறுக்கமாட்டேன். நீ வானவர் போற்றும் கதிபெற நான்மறை விதிப்படி இராஜசூய யாகம் செய்ய வேண்டும். அதுவும் இன்றே தொடங்க வேண்டும்.*

---

* *கவலைதரும் நோய்.*

† *பொருள் காரணமாக இதெல்லாம் சொல்லவில்லை.*

நாளைச் செய்குவம் அறமெனினின், இன்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினும் நீங்கும்.
இதுவென வரைந்து வாழுநாள் உணர்ந்தோர்
முதுநீ ரலகின் முழுவது மில்லை.
வேள்விக் கிழத்தி *இவளொடு கூடித்
தாழ்கழன் மன்னர் நின்னடி போற்ற
ஊழியோ டூழி யுலகங் காத்து
நீடுவா ழியரோ நெடுந்தகை !''



---

*வேண்மாதேவி.

# ௫௮. வேள்விப் பிரதிஷ்டை



மாடலன், தனது வேதநாவால் உழுது இறைவன் செவியாகிய வயலில் பெரும்பதம் அளிக்கக்கூடிய பொருளை வித்தினான். அது விளைவேறிப் பலன் மிகுந்தது. அப்பலனைத்துய்க்க விரும்பினான் வீரக் கழலணி வேந்தன். கல்வி கேள்விகளிற் சிறந்த வேதவித்துக்களைக் கொண்டு, மாடலமறையோன் சொல்லிய முறையில், அவன் வேள்வித் திருவிழா நடத்தினான். அதனையொட்டி, 'வேள்வி முடிந்தபின், உமது ஊருக்குச் செல்லும்' என்று, ஆரிய மன்னரைச் சிறை விடுவித்து, வஞ்சி நகர்ப்புறத்தில், ஒரு தண் மலர்ப்பொழிலில், வேளாவிக்கோ மந்திரத்தில் இருக்கச்செய்தான். அம்மன்னருக்கு ஏற்பன செய்யத் தனது மந்திரியான வில்லவங்கோதையை விருப்புடன் ஏவினான். "சிறைக் கோட்டங்களைத் தூய்மையாக்கிக் கைதிகளை விடுதலை செய்க, வரிமிக்க நாடுகளுக்கு வரி வாஜா செய்க" என்று அழும்பில் வேளுடன் ஆயக் கணக்கரை ஏவினான். பிறகு, மங்கையர் கற்பு, காவலன் அற முறையாலேதான் சிறந்தோங்கும் என்று பண்டையோர் சொன்ன தண்டமிழ் நல்லுரையை விளங்கவைத்து,

"பார்தொழு தேத்தும் பத்தினி, கண்ணகி, தான் பிறந்த ஊரையாளும் ஆத்திசூடிய சோழமன்னருக்கும் பெருமையீந்தாள்; பாண்டியருக்குச் செங்கோல் வளைய உயிர் வாழாச் சிறப்பை யீந்தாள். தமது சபதந் தீர்ந்தாற்றான் வேந்தர் வெஞ்சினம் தணிவர் என்பதை ஆரியமன்னர் அறியும்படி செய்த பெருமையைக் குடதிசைவாழும் கொற்றவற்கு அளித்

தாள். கொங்கையால் கற்பனல் கொதித்தெழச்செய்து, மதுரை மூதூரை அழித்து, நமது நன்னாடணைந்து, வேங்கை நிழலிற் பொருந்தி விண்ணடைந்தாள். சோழநாட்டிற் பிறந்து, பாண்டி நாட்டிற் கற்புத் திறனைக் காட்டிச் சிறந்து, சேரநாட்டில் வந்து மேனிலை பெற்ற நங்கையை இங்கே விதிப்படியமைந்த பத்தினிக் கோட்டத்தில் நாட்டுவாம்.

அறக்களத் தந்தணர், ஆசான், பெருங்கணி
சிறப்புடைக் கம்மியர் தம்மொடுஞ் சென்று,
மேலோர் விழையும் நூல்நெறி மாக்கள்,
பால்பெற வகுத்த பத்தினிக் கோட்டத்(து)
இமையவர் உறையும் இமையச் செவ்வரைச்
சிமையச் சென்னித் தெய்வம் பரசிக்
கைவினை முற்றிய தெய்வப் படிமத்து,
வித்தகர் இயற்றிய விளங்கிய கோலத்து,
முற்றிழை நன்கலம் முழுவதும் பூட்டிப்
பூப்பலி செய்து, காப்புக்கடை நிறுத்தி,
வேள்வியும் விழாவும் நாடொறும் வகுத்துக்
கடவுள் மங்கலஞ் செய்க !

மேலோர் வகுத்த சிற்ப சாத்திரப்படி, பத்தினிக் கோயில் அமைந்தது ; கைதேர்ந்த சிற்பிகள் பத்தினி யுருவை வடித்தனர். அறவோரான அந்தணர், புரோகி தர், சோதிடர், கம்மியர் அனைவருடனும் சென்று, கைலைப்பரமனை வழுத்திப் பத்தினிச்சிலையைக் கோயிலில் பிரதிட்டைசெய்மின். அதற்கு அலங்கார ஆபரணங் கள் சூட்டித் திருவிழா நடத்துமின். தினந்தோறும் வழிபாடு செய்மின்" என்று மந்திரிகளை ஏவினான் வட நாட்டாரை வணக்கிய குடவர் கோமான்.



## ருக. வாழ்த்துரைகள்



தேவந்தியை நாம் அறிவோம். அவள், கண்ணகி தோழி, சாத்தன் மனைவி. அவள் மனம் கரைகிறது :—

ஐயோ, முன்பே தீக்கனவு கண்டுரைத்தாள் கண்ணகி ; பாவி, அதை உணராதிருந்தேன் ; பத்தினி கனவு பலித்தது ! தன் கணவனை மயக்கிய மாதவியிடங்கூட அவள் சினக்கவில்லை ; கணவன் கைப் பற்றிக் கடுங்கானில் நடந்து சென்றாள் ; தாயார் தகப்பனாரிடங்கூட ஒரு வார்த்தையுஞ் சொல்லவில்லை; தோழியும் காவற்பெண்ணுமான என்னிடமும் சொல்லிக் கொள்ளவில்லை ; கற்புக்கடம் பூண்டு, காதலன் பின்னே போந்தாள் எனது தோழி, புகார்ப்பூம் பாவை. கோவலனுக்குக் கோளிழைத்த காவலன் உயிர் விட்டான். மாசாத்துவானும், மாநாய்கனும் அதைக் கேட்டு ஏங்கி, 'சாவதுதான் வாழ்வு, என்று, செல்வத்தைத் தானமாக வழங்கித் துறவு பூண்டனர். கண்ணகியின் அம்மையும் அம்மாமியும் உயிர் துறந்தனர். மாதவி போதியறந்தழுவித் துறவு பூண்டாள்; மணிமேகலையும் துறவு பூண்டாள் ! இதோ நானும் எனது தோழியைக் கண்டடைவேன்.

> முடிமன்னர் மூவருங் காத்தோம்பும் தெய்வ
> வடபே ரிமய மலையிற் பிறந்து,
> கடுவரற் கங்கைப் புனலாடிப் போந்த
> தொடிவளைத் தோளிக்குத் தோழிநான் கண்டீர்
> சோணாட்டார் பாவைக்குத் தோழிநான் கண்டீர் !

என்று காவற்பெண்டுடனும், அடித்தோழியுடனும்

புறப்பட்டாள் தேவந்தி. அவள் மதுரை எரிந்த தறிந்தாள்; ஆயர்பாடியில் விசாரித்தாள்; அங்கே கன்னி ஐயை "கவுந்தியடிகள் அடைக்கலமாகத் தந்த வரைக் காவாத பாவியானேனே என்று வருந்தி, எனது தாயார் மாதரி இறந்தாள். பத்தினி வைகைக் கரைவழியே சென்றாள்" என்றாள். ஐயையும் தேவந்தியும் அதே வழிச் சென்று மலைநாடு புகுந்து, பத்தினிக் கோவிலை யடைந்தனர். செங்குட்டுவனிடம் தாம் இன்னாரென் றறிவித்தனர். அரசன் அவர் சொல் மடுத்தான். அப்போது, பத்தினித்தெய்வம் மின்வடிவாகத் தோன்றியது! செங்குட்டுவன் வியந்தான்.

"என்னே! இஃதென்னே! இஃதென்னே! இஃதென்னே
பொன்னஞ் சிலம்பிற் புனைமே கலைவளைக்கை, [கோல்
நல்வயிரப் பொற்றேட்டு நாவலம் பொன்னிழைசேர்
மின்னுக் கொடியொன்று மீவிசும்பிற் றோன்றுமால்!"

பத்தினித் தெய்வம் பேசியது:—

"தென்னவன் தீதிலன்; தேவர்கோன் தன்கோயில்
நல்விருந் தாயினன்; நானவன் றன்மகள்;
*வென்வேலோன் குன்றில் விளையாட்டு யான்அகலேன்,
என்னோடுந் தோழீர், எல்லீரும் வம்மெல்லாம்!"

உடனே வஞ்சி மகளிரெல்லாம் பத்தினியின் தோழியராயினர்.

"வஞ்சியீர், வஞ்சிக் கொடியிடையீர், மறவேற் சேரன் அரசியின் ஆயத்தீர், எல்லாரும் வாருங்கள்!

---

* செங்கோடு.

*சிலம்பால் செழியனை வென்று, கொங்கையால் கூடலைச் சிதைத்த பத்தினியைப் பாடுவோம்! தென்னவன் மகளைப் பாடுவோம் ! செங்கோல் வளைய உயிர் வாழார் பாண்டியர் என்று எமது சேரன் புகழ, எமது நாடடைந்த பாவையைப் பாடுவோம் ! பாண்டியன் மகளைப் பாடுவோம் !"*

ஆயத்தா ரெல்லாரும் வந்தனர் ! " *தன்னைப் பாண்டியன் மகளென்றாள் பத்தினி. எமது வானவனே பத்தினியைப் பிரதிட்டை செய்தான் ! ஆதலால் அவள் எங்கோமான் மகள் என்போம் ! நாம் சேரனை வாழ்த்துவோம் ! பாண்டியனைத் தேவமகள் வாழ்த்துவாள்.*

தொல்லை வினையால் துயருழந்தாள் கண்ணினீர்
கொல்லை வுயிர்கொடுத்த கோவேந்தன் வாழியரோ!
வாழியரோ, வாழியரோ, வருபுனனீர் வையை
சூழ மதுரையார் கோமான்றன் தொல்குலமே !

*இமயமலை யீன்ற பத்தினிச் சிலையை மன்னர் முடிமேல் வைத்துக் கொண்டாடச் செய்த பொருனை நாடன் வாழி! வஞ்சியர் கோமான் தொல்குலம்வாழ்க ! பூவிரி கூந்தலாய், நாம் புகார் சிறப்பைப் பாடுவோம் !*

வீங்குநீர் வேலி யுலகாண்டு விண்ணவர்கோன்
ஓங்கரணங் காத்த வுரவோன்யார் அம்மானை ?
ஓங்கரணங் காத்த வுரவோன் உயர்விசும்பில்
தூங்கெயில் மூன் றெறிந்த சோழன்கா ணம்மானை
சோழன் புகார்நகரம் பாடேலோ ரம்மானை !
புறவுநிறை புக்குப் பொன்னுலக மேத்தக்
குறைவி லுடம்பரிந்த கொற்றவன்யா ரம்மானை ?

துறைவி லுடம்பரிந்த கொற்றவன்முன் வந்த
கறவை முறைசெய்த காவலன்காண் அம்மானை ;
காவலன் பூம்புகார் பாடேலோ ரம்மானை !
*கடவரைகள் ஓரெட்டும் கண்ணிமையாக் காண,
வடவரைமேல் வாள்வேங்கை யொற்றினன்யார் அம்மானை ?
வடவரைமேல் வாள்வேங்கை யொற்றினன்றிக் கெட்டுங்
குடைநிழலிற் கொண்டளித்த கொற்றவன்காண் அம்மானை.
கொற்றவன்றன் பூம்புகார் பாடேலோ ரம்மானை !

*பிறகு பாண்டியனைப் பாடிப் பந்தாடுகிறார்கள் :—*

பொன்னிலங்கு பூங்கொடி, பொலஞ்செய் கோதை வில்லிட
மின்னிலங்கு மேகலைகள் ஆர்ப்பஆர்ப்ப எங்கணும்,
தென்னன் வாழ்க வாழ்கவென்று சென்றுபந் தடித்துமே !
தேவர்ஆர மார்பன்வாழ்க என்றுபந் தடித்துமே !
பின்னுமுன்னு மெங்கணும் பெயர்ந்துவந் தெழுந்துலாய்,
மின்னுமின் இளங்கொடி வியனிலத் திழிந்தெனத் (தென்)
துன்னிவந்து கைத்தலத் திருந்ததில்லை நீணலந்
தன்னினின்றும் அந்தரத் தெழுந்ததில்லை தானெனத் (தென்)

*இனி, ஏகதாளம் போட்டு, சேரன் புகழ் சொல்லி மணியூசலாடுகின்றனர். போர்வில், மீன், புலி, ஆகிய மூன்று கொடிகளுமுடையான், யவனர்நாடு, இமயம், தென்குமரி இம்மூன்றையும் ஆண்டவன், மன்னுயிர் காக்கும் கோமான்—நமது சேரன் திறம்பாடி, கண் பிறழ, மின்னிடை நுடங்க ஊசலாடோமோ !*

ஓரைவர் ஈரைம் பதின்மர் உடன்றெழுந்த
போரிற் பெருஞ்சோறு போற்றது தான்அளித்த
சேரன் பொறையன் மலையன் திறம்பாடிக்
கார்செய் குழலாட ஆடோமோ ஊசல் !
கடம்பெறிந்த வாபாடி ஆடோமோ ஊசல் !

---

* *திசையானைகள்.*

*இனி அனைவரும் மூவேந்தர் புகழ் சொல்லி *வள்ளை பாடுகின்றனர்.*

தீங்கரும்பு நல்உலக்கை யாகச் செழுமுத்தம்,
பூங்காஞ்சி நீழல் †அவைப்பார் புகார் மகளிர் ;
ஆழிக் கொடித் திண்தேர்ச் செம்பியன் வம்பலர் தார்ப்
பாழித் தடவரைத் தோள் பாடேலே பாடல் !
பாவைமார் ‡ஆர்க்கும் பாடேலே பாடல் !
பாடல்சால் முத்தம் பவழ வுலக்கையால்
மாட மதுரை மகளிர் குறுவரே !
வானவர் கோன் ஆரம் வயங்கிய தோட் பஞ்சவன்றன்
மீனக் கொடி பாடும் பாடேலே பாடல்
வேப்பந்தார் நெஞ்சுவக்கும் பாடேலே பாடல் !...
சந்துரற் பெய்து தகைசால் அணி முத்தம்
வஞ்சி மகளிர் குறுவரே §வான்கோட்டால் !
கடந்தடுதார்ச் சேரன் கடம்பெறிந்த வார்த்தை
படர்ந்த நிலம்போர்த்த பாடேலே பாடல்
பனந்தோ டுளங்கவரும் பாடேலே பாடல்.

*இவ்வாறு அனைவரும் மூவேந்தரையும் வாழ்த்திப் பாடியதும், தனக்குச் சில நாட்டுச் சிறப்புச் செய்த மன்னனை " செங்குட்டுவன் நீடூழி வாழ்க !" என்று வீர பத்தினி போற்றி வாழ்த்தினாள்.*



---

* *வள்ளை = உலக்கைப் பாட்டு.* † *குற்றல்.*

‡ *வழங்கும் பதிப்பில், ஆர்க்கும் (ஒலிக்கும்) என்றிருக்கிறது. ராவ்சாஹிப் வையாபுரி பிள்ளையவர்கள் கண்ட ஏட்டுப் பிரதியில் ஆர்க்கும் (ஆர் + இரக்கும் ஆர் = சேரனது ஆத்தி மாலை) என்றிருக்கிறது. அதுவே இங்கே பொருத்தமாகக் காண்கிறது.*

§ *நீண்டயானைக் கொம்பால்.*

## ௩௦. தேவந்தியின் ஆவேசம்



கண்ணகியின் கடவுட் கோலத்தைக் கண்ணாரக் கண்ட பிறகு, வடதிசை வணக்கிய சேரர் பெருந்தகை, மணிமேகலை துறவைப் பற்றி வினவினான். தேவந்தி அதைக்குறித்து விரிவாகச் சொன்னாள்.

பிறகு தேவந்தி ஆவேசமானாள்; சாத்தன் அவள் மேல் வந்தான். குலைந்து பின் வீழ்ந்தது கூந்தல்; துடித்தது புருவம்; மடித்தனள் செவ்வாய்; அரும்பினள் எயிறு; வருமொழி மயங்கினாள்; திருமுகம் வியர்த்தாள்; செங்கண் சிவந்தனள்; கை விட் டோச்சினள்; கால் பெயர்ந் தெழுந்தனள்; கண் மருண்டனள்; உளம் தெளிந்தனள்; நாவுலறினள்; உயர்மொழி கூறினாள்:

“ இந்தச் செங்கோட் டுச்சியில் பல அழகான நீர் நிலைகள் உள்ளன. அவற்றுள் ஒரு புண்ணியச் சுனை மங்கலா தேவி கோயிலின் பக்கத்தில் உள்ளது. அதில், வெண் கடுகு போன்றும், முருக்கம் பூப் போன்றும் சிறு சிறு கற்கள் மேவியிருக்கும். அதன் தண்ணீர், மாவைக் கரைத்தது போலப் பால் நிறமாயிருக்கும். அதில் நீராடினவர் பண்டைப் பிறப்பறிவர்; மாடல மறையோய், அப்புண்ணிய நீரைக் கொண்டுவந்து, மங்கலாதேவி கோயில் வாயிலில் இருந்த உன்கையில் தந்தேன். அந்நீர் உள்ள கமண்டலம் உன்கையில் இருக்கிறது. அது சந்திராதித்த ருள்ளளவும் தன் கடவுட் டன்மை ஒழியாது. இதோ மூன்று சிறு பெண்கள் நிற்கின்றனர். இவர்களில் இவ்விருவர், அரட்டன் செட்டி பெற்ற இரட்டைக் குழந்தைகள். கண்ணகி

தாயும், கோவலன் தாயுமே இவ்வாறு வந்து பிறந்திருக்கிறார்கள். மற்றொரு பெண் குழந்தை, திருவனந்தபுரம் 'சேடக் குடும்பி' என்னும் அந்தணன் மகள். அவளே முற்பிறப்பில் மாதரியா யிருந்தவள். இப்போது, இந்த மூன்று குழந்தைகள் மீதும் கரக நீரைத் தெளித்துப் பாருங்கள், உண்மை விளங்கும். மாடல மறையோய், நான் பாசண்டச் சாத்தன்; இந்தப் பார்ப்பனிமேல் வந்தேன்"

மன்னவன் விம்மித மெய்தி, மாடலன் முகத்தை நோக்கினான். குறிப்பறிந்த மாடலன், தேவந்தி வரலாற்றைச் சொன்னான். அதை நாம் முன்பே அறிந்தோம். "மாலதிக்குக் கிடைத்த குழந்தையே சாத்தன்; அவன் வளர்ந்து இத்தேவந்தியை மணந்து, தனது மூவா இளநலத்தைக் காட்டி, 'என் கோயிலுக்கு வா' என்று மறைந்தான். அவனே மங்கலா தேவி கோயிலில் தங்கும் வேதியனாகத் தோன்றினான். நான் அங்கே இருந்தேன்; என் கையில் இக்கரகத்தை அளித்து அவன் மறைந்தான். அதைக் கொண் டிங்கு வந்தேன். இப்பார்ப்பனிமீது சாத்தன் வந்துளான். அவன் சொல்லுகிறபடி இதோ செய்கிறேன்" என்று மாடலன் மூன்று பெண்கள் மீதும் கரக நீரைத் தெளித்தான். உடனே அம்மூன்று பெண்களும் மாதரியாகவும், கோவலன் - கண்ணகி தாய்மாராகவும் காட்சியளித்தனர். கண்ணகி தாயான பெண், இவ்வாறு பேசினாள்: "நீ உனது காதலனைப் புகழ்ந்தாய். அவன் தனது தீயவொழுக்கத்தால் உன்னை இகழ்ந்து நடந்த நடைக்கு நான் இரங்கினேன். அன்னையாகிய என்னை

யும் கருதாமல், யார் துணையுமின்றித் தனியாகக் காதல னுடன் சென்று கடுந்துயர்ப் பட்டாய். நான் பெற்ற மகளே! என் துணைத் தோழீ! எனது துயரைத் தீர்க் கும் மாதே வாராய்!"

கோவலன் தாயாரான பெண் இவ்வாறு பேசினாள் :—

"என்னோ டிருந்தாள் இந்த அணியிலங்கும் நங்கை. அவளை, இருட்டில், தனியாக, உன்னுடன் இட்டுச் சென்றாய். அதனால் என் நெஞ்சம் இரங்கிப் புலம்பிப் புண்ணானது! உன் பிரிவைப் பொறேன், என் மகனே வாராய்!"

பிறகு மாதரியான பெண் இவ்வாறு பேசினாள்:—

"வைகைத் துறையில் ஊரார் சொல்லச் செய்தி கேட்டேன்; வந்தேன், மனையில் உன்னைக் காணேன்; எந்தாய்! இளையாய்! எங்கே யொளிந்தாய்!" இவ்வாறு இம்மூன்று குதலைச் செவ்வாய்க் குறுந்தொடி மகளிரும் பேசக்கேட்ட சேரமான், வியப்புடன் மாடலனை நோக்கினான். மாடலன், "மன்னர் மன்ன! நீ வாழ்க! ஒரு காலம் மதயானையினின்று ஓர் அந்தணனைக் காத்த புண்ணியாத்மாவான கோவலன், தேவ சரீரம் பெற்றான். அவன் காதலி கண்ணகியை, இங்கே புலம்பும் மூவரும் அன்பு செய்பவர். ஆனால் இவர் கண்ணகி - கோவலர்போல, மோட்ச பதவி சேரத்தக்க நல்லறம் செய்யவில்லை. ஆதலால் தமது அன்பிற்குரிய கண்ணகிவந்து மோட்சம்பெற்ற உனது வஞ்சி நாட்டிலே, அரட்டன் செட்டி மனைவி செய்தவத்தால் அவள் மக்களாக இந்த இரண்டு தாய்

மாரும் தோன்றினர். இந்த ஆயர் முதுமகள் மாதரி, முற்பிறப்பில், கண்ணனைப் பாடிக் குரவையாடினுள்; ஆதலால் விஷ்ணுத்தலமான திரு அனந்தபுரத்தில், சேடக் குடும்பியின் சிறு மகளாகத் தோன்றினாள். ஆதலால்,

நற்றிறம் புரிந்தோர் *பொற்படி எய்தலும்,
அற்புளம் சிறந்தோர் பற்றுவழிச் சேறலும்,
அறப்பயன் விளைதலும், மறப்பயன் விளைதலும்,
பிறந்தவர் இறத்தலும், இறந்தவர் பிறத்தலும்,
புதுவதன்றே தொன்றியல் வாழ்க்கை.

நீ சிவபிரான் அருளில் தோன்றினை; மாநிலம் விளக்கிய மன்னவனுயினை, ஆதலால் நீ,

செய்தவப் பயன்களும் சிறந்தோர் †படிவமும்
கையகத் தனபோற் கண்டனை யன்றே;
ஊழிதோ றூழி யுலகங் காத்து,
நீடுவா ழியரோ! நெடுந்தகை வேந்தே!"

என்று மாடலன் வாய்மையும் வாழ்த்துரையுங் கூறினான்.

பாடல் சால் சிறப்புடைய பாண்டி நன்னாட்டுத் தலை நகரான கூடல் எரியுண்டழிய ஒருமுலை திருகி யெறிந்த இளந் திருமேனியள் கண்ணகி; அவள் விளங்கும் பத்தினிக் கோட்டத்திற்குச் சேரமான் ஏராளமான மானியங்கள் விட்டான்; 'நித்தியம் திருவிழா நிகழ்க' என்று ஏவினான். பூவும் புகையும் வாசமும் போட்டு, தேவந்தி பத்தினிக் கடவுளைப் பூசனை செய்ய வேண்டினான். பத்தினிச்சிலையை மும்முறை வலம்வந்து வணங்கினான்.

---

* பொன்னுலகம். † உருவம்.

## வ ர ந் த ரு த ல்

இத் திருவிழாவிற்குப் பல மன்னர், அருஞ்சிறை நீங்கிய ஆரியமன்னர், பெருஞ்சிறைக் கோட்டம் பிரிந்த மன்னர், குடகர், கொங்கர், மாளுவ வேந்தர், இலங்கை மன்னன் முதலாவது கயவாகு முதலியோர் வந்திருந் தனர். இம்மன்னர் வணக்கத்துடன் "பத்தினிக் கடவுளே, இந்தச் சேரமன்னனைப் போலே நாங்களும் எமக்குரிய நாட்டில், உனக்கு நாடோறும் திருவிழாக் கொண்டாடுவோம். அத்திருவிழா வழிபாடுகளில், நீ பிரசன்னமாயிருந்தருள வேண்டும்" என்று வரங் கேட்டனர்.

"தந்தேன் வரம்" என்று ஒரு குரல் எழுந்தது. அன்பருக்குப் பத்தினியன்னை அருள் புரிந்தாள்.

## ௩௧. இளங்கோ கேட்டவை

அதைக் கேட்ட சேரமானும், மற்றை அரசரும் வீடு கண்டவர் போலப் பெருமகிழ்வெய்தினர். இதன் பிறகு மெய்ந்நெறி விரும்பிய மாடல மறையோனுடன் மன்னர் தன்னடி போற்றச் சேரமான் வேள்விச் சாலைக்குச் சென்றான்.

அதன்பின் யானும் சென்றேன்; அப்போது என்னெதிரே தேவந்தி மேல் பொலியத் தோன்றி, இவ்வாறுரைத்தது பத்தினித் தெய்வம் :—

" வஞ்சி மூதூர் மணிமண்டபத்தில், நுந்தை அடிநிழலில், செங்குட்டுவனுடன் நீ வீற்றிருந்தாய்; அப்போது, உன்னிடம் ' அரசு வீற்றிருக்கும் இலக்கணம் உண்டு ' என்று ஒரு நிமித்திகன் சொன்னான்; ' என் அண்ணனிருக்கையில் இவ்வாறு முறைமை கெடச் சொன்னாய் ' என்று அவனை நீ உருத்து நோக்கினை; மாலை, கொடித் தேர்த்தானையுடைய செங்குட்டுவன் அரசைப் பெற விடுத்தாய். குணவாயிலில் துறந்திருக்கும் துறவிகள் முன்னிலையில், நீ அரசின் சுமையை விட்டு நீங்கித் துறவியாயினை; சிந்தை செல்ல முடியாத அவ்வளவு நெடுந்தொலைவிலுள்ள, முடிவில்லாத இன்பமளிக்கும் மோட்ச சாம்ராஜ்யத்தை ஆளும் வேந்தனாயினை ".

இமையோர் இளங்கொடி இவ்வாறு என் திறமுரைத்தாள். அப்பத்தினியின் பெருமையைக் கூறும் மேலான நல்லுரையைக் கேட்டீர்கள். உலகீர் ! இவற்

றல் நீர் அறிந்து கொள்ள வேண்டிய திருநெறியைக் கேட்டு அவ்வா றொழுகுங்கள் :

தெரிவுறக் கேட்ட திருத்தகு நல்லீர்,
பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்,
தெய்வந் தெளிமின், தெளிந்தோர்ப் பேணுமின் !
பொய்யுரை அஞ்சுமின், புறஞ்சொற் *போற்றுமின்!
ஊனூண் துறமின், உயிர்க் கொலை நீங்குமின்!
தானஞ் செய்மின், தவம்பல தாங்குமின் !
செய்ந்நன்றி கொல்லன்மின், தீநட் பிகழ்மின்,
பொய்க்கரி போகன்மின் †பொருண்மொழிநீங்கன்மின்
அறவோர் அவைக்களம் அகலா தணுகுமின் !
பிறவோர் அவைக்களம் பிழைத்துப் பெயர்மின்
பிறர்மனை அஞ்சுமின் பிழையுயிர் ஓம்புமின்,
அறமனை காமின் அல்லவை கடிமின்,
கள்ளுங் களவுங் காமமும் பொய்யும்
‡வெள்ளைக் கோட்டியும் §விரகினில் ஒழிமின்
இளமையுஞ் செல்வமும் யாக்கையும் நிலையா,
உளநாள் வரையா தொல்லுவ தொழியாது ;
செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின்,
மல்லன்மா ஞாலத்து வாழ்வீ ரீங்கென்.

இளங்கோ வடிகள் வழங்கிய செல்வம்
உளங்கொண் டோங்குமின் உண்மைத் தமிழீர் !

சிலம்புச் செல்வம் முற்றிற்று.



* கோட் சொல்லாது உம்மைக்காமின்.

† மெய் வார்த்தை. ‡ பயனில்லாத உரை.

§ விரகு = விவேகம்.

# அன்பு நிலய நூல்கள்

(சுவாமி சுத்தானந்த பாரதியார் இயற்றியவை)

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 1. | பைந்தமிழ்ச்சோலை .... | 0 | 4 |
| 2. | இராமலிங்க விஜயம் .... | 0 | 10 |
| 3. | இன்பமாலை (2-ம் பதிப்பு) .... | 0 | 6 |
| 4. | தருமஸாதனம் .... | 0 | 4 |
| 5. | பொதுநெறி .... | 0 | 2 |
| 6. | இன்று மனிதனும் இனிவரும் மனிதனும் | 0 | 6 |
| 7. | திருக்குறளின்பம் (ராப்பர்) .... | 1 | 4 |
| 8. | உடலுறுதி (படங்களுடன்) .... | 1 | 0 |
| 9. | வரகவி தாகூர் .... | 0 | 3 |
| 10. | அருட்செல்வம் .... | 0 | 2 |
| 11. | புதுமையும் பழமையும் (நாடகம்) .... | 0 | 8 |
| 12. | திருநூல் - தூய வாழ்வு .... | 1 | 0 |
| 13. | தியானமாலை .... | 1 | 4 |
| 14. | ஏழை படும்பாடு (நாவல்) .... | 1 | 8 |
| 15. | யோக சித்தி .... | 2 | 8 |
| | ,, (Calico) .... | 3 | 0 |
| 16. | பரமஹம்ஸ லீலை .... | 2 | 8 |
| 17. | ரமண விஜயம் .... | 2 | 0 |
| 18. | பெரியார் வரலாறு .... | 2 | 0 |
| 19. | பாரதி விளக்கம் .... | 0 | 4 |
| 20. | நாடகக்கலை .... | 0 | 3 |
| 21. | கீதைகாட்டும் பாதை .... | 0 | 10 |
| 22. | பாரத சக்தி .... | 1 | 8 |
| 23. | அரவிந்தப் பிரகாசம் .... | 0 | 12 |

| | | | ரூ. | அ. |
|---|---|---|---|---|
| 24. | புதுயுகப் பாட்டு | .... | 0 | 5 |
| 25. | The Yoga of Sri Aurobindo | .... | 2 | 0 |
| 26. | Mahatma Ramalingam | .... | 1 | 0 |
| 27. | கம்பக்கவியின்பம் (out of stock) | .... | 2 | 0 |
| 28. | தமிழுணர்ச்சி | .... | 1 | 0 |
| 29. | புத்தர் கருணை | .... | 0 | 8 |
| 30. | மஹாகவி காளிதாஸன் | .... | 1 | 4 |
| 31. | வசந்த சுந்தரி | .... | 0 | 10 |
| 32. | சிலம்புச் செல்வம் | .... | 1 | 12 |
| 33. | மஹரிஷி தாயுமானூர் | .... | 0 | 4 |
| 34. | அரவிந்த யோகதீபிகை | .... | 0 | 8 |
| 35. | இளிச்சவாயன் (அச்சில்) | .... | | |
| 36. | ஹிந்தி அவசியமா ? | .... | 0 | 4 |

**பா மலர்கள்** (விரைவில் வெளிவரும்)

| | | | | |
|---|---|---|---|---|
| 37. | தமிழ்க் கனல் | (அச்சில்) | | |
| 38. | வாழ்வமுதம் | „ | | |
| 39. | புண்ய பூமி | „ | | |
| 40. | முன்னேற்றப் பாடல்கள் | „ | | |
| 41. | பக்தி பரவசம் | .... | 0 | 8 |
| 42. | பேரின்பம் | „ | | |
| 43. | தீர்க்கதரிசிகள் | „ | | |
| 44. | வீர விருந்து | „ | | |
| 45. | குழந்தையின்பம் | .... | 0 | 3 |
| 46. | விருந்து (காவிய நாடகம்) | „ | | |
| 47. | அருளமுதம் | „ | | |

கிடைக்குமிடம் :—

அன்பு நிலயம்,
இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா.